உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

அருள்திரு அம்பலவாண தேசிக மூர்த்திகள்

# பன்னிரண்டாவது ஆண்டுக் குருபூசை விழா மலர்

திருவள்ளுவர் ஆண்டு 2026 - மெய்கண்டார் ஆண்டு 772

பவ — பங்குனி — திருவோணம்

*26 — 3 — 1995*

வெளியீடு எண் : 430
பக்கங்கள் : 228
படங்கள் : 51
உரிமை பதிவு :
விலை ரூபாய் : 90-00

நூல் ஆசிரியர்
S. நாராயணசுவாமி, M. A., M. Ed.,
[சிற்ப ஆராய்ச்சியாளர்]
ஆசிரியர்
தி. ஆ அ. தே. ந. பள்ளி, திருவிடைமருதூர்



- ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம்,
- திருவாவடுதுறை -

6-7

உ
சிவமயம்

# இலிங்கோத்பவர்

[ LINGODBHAVAR ] [ லிங்கோத்பவ: ]

[சிவாகமம் - சிற்பம் - பூசை]

இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
இருபத்து மூன்றாவது குரு மகாசந்நிதானம்
சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி அவர்கள்
அருளாணையின் வண்ணம்
வெளியிடப்பெற்றது

திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்
திருவாவடுதுறை - 609 803.
1995

உ

சிவமயம்

மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரும்
திருமாலும் மறையி னுனும்
பணிகொண்ட பாதலத்தும் பூதலத்தும்
மிதலத்தும் பரிந்து தேட
அணிகொண்ட பிரமாண்ட கோளகை பொன்
கோளகையாய் அழகு காட்ட
கணிகெண்டா ஒரு வரையாம் ஒருவரை, யாம்
அகலாது கருத்துள் சேர்ப்பாம்,

— சைவ எல்லப்ப நாவலர்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
குரு முதல்வர்
**அருள்திரு நமசிவாயமூர்த்திகள்**

உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— தவத்திரு மாதவச் சிவஞான யோகிகள்.

# திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

## குரு பரம்பரை விளக்கம்

சீகண்ட பரமசிவம்

திருநந்திதேவர்

சனகர் சனந்தனர் சனாதனர் சனற்குமாரர்

சத்தியஞான தரிசினிகள்
பரஞ்சோதிமாமுனிவர்
மெய்கண்டதேவநாயனார்
அருள்நந்தி சிவாசாரியார்
மறைஞானசம்பந்த சிவாசாரியார்
உமாபதி சிவாசாரியார்
அருணமச்சிவாயர்
சித்தர் சிவப்பிரகாசர்

1. ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் (திருவாவடுதுறை ஆதீனக் குருமுதல்வர்)
2. ஸ்ரீ மறைஞான தேசிகர்
3. ஸ்ரீ அம்பலவாண தேசிகர்
4. ஸ்ரீ உருத்திரகோடி தேசிகர்
5. ஸ்ரீ வேலப்ப தேசிகர்
6. ஸ்ரீ குமாரசுவாமி தேசிகர்
7. ஸ்ரீ (பின்) குமாரசுவாமி தேசிகர்

(2–7: 1360 - 1625)

8. ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் — 1625 1658
9. ஸ்ரீ இராமலிங்க தேசிகர் — 1658 1678
10. ஸ்ரீ வேலப்ப தேசிகர் — 1678 1700
11. ஸ்ரீ (பின்) வேலப்ப தேசிகர் — 1700 1730
12. ஸ்ரீ திருச்சிற்றம்பல தேசிகர் — 1730 1770
13. ஸ்ரீ அம்பலவாண தேசிகர் — 1770 1789
14. ஸ்ரீ (வேலூர்) சுப்பிரமணிய தேசிகர் — 1789 1845
15. ஸ்ரீ அம்பலவாண தேசிகர் — 1845 1869
16. ஸ்ரீ (மேலகரம்) சுப்பிரமணிய தேசிகர் — 1869 1888
17. ஸ்ரீ அம்பலவாண தேசிகர் — 1888 1920
18. ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் — 1920 1922
19. ஸ்ரீ வைத்தியலிங்க தேசிகர் — 1922 1937
20. ஸ்ரீ அம்பலவாண தேசிகர் — 1937 1951
21. ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் 13—4—1951 முதல் — 23—9—1967
22. ஸ்ரீ அம்பலவாண தேசிகர் 23—9—1967 முதல் — 7—4—1983
23. சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள் 7—4—1983 முதல் இவ்வாதீன ஞானபீடத்தில் வீற்றிருந்து அருளாட்சி செய்து வருகின்றார்கள்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்திரண்டாவது குரு மகாசந்நிதானம்

அருள்திரு அம்பலவாண தேசிக மூர்த்திகள்

சிவபேறு : பங்குனி – திருவோணம்

[ அருளாட்சிக்காலம் : 1967 - 1983]

உ

சிவமயம்

# முன்னுரை

ஒளியை அறியில் உருவம் ஒளியும்
ஒளியும் உருவம் அறியில் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக உடன் இருந்தானே — *2681*

சோதித் தனிச்சுடராய் நின்ற தேவனும்
ஆதியும் உள்நின்ற தேவனும் ஆகுமால்
ஆதிப் பிரமன் பெருங்கடல் வண்ணனும்
ஆதி அடிபணிந் தன்புறு வாரே. — *630*

திருமூலர் - திருமந்திரம்.

சிவநெறி வளர்க்கும் சிவராசதானியாம் துறைசைப் பதியின் கண், சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தனும் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் ஆதீனக் குருமுதல்வராக வீற்றிருந்தருளி (கி. பி. 1360) செந்தமிழாற் சைவம் பரப்புதலைத் திருவருட் கருணையினால் தொடங்கியருளினார்கள்.

## மரபுச் செயல் :

இவ்வாதீனத்தின் வழி வந்த குருமூர்த்திகள் அனைவரும் குருநெறி மரபின் வழி அருட்செங்கோலோச்சித் தன்னடைந்தார்க்கின்பங்கள் தருதலே தம் கடனாக்கொண்டு மெய்கண்ட சாத்திரங்களுக்கு விளக்க நூல்களாகப் பண்டார சாத்திரப் பனுவல்களை அருளியும், தம்மடியாரைக் கொண்டு நன்னூல்கள் பல ஆக்கச் செய்தும் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு மேலும் புகழ் சேர்த்தனர்.

## 22 - ஆவது குருமூர்த்திகள் அருளாட்சியில் :

இவ்வாதீனக் குருமூர்த்திகளுள் 21-ஆம் குருமூர்த்திகள் வழிவந்து 22-ஆம் குருமூர்த்திகளாய்த் திகழ்ந்தருளிய அருள்திரு அம்பலவாண தேசிக மூர்த்திகள் தமது அருளாட்சிக் காலத்தில் தோத்திரம், சாத்திரம் பற்றிய மகாநாடுகள் மற்றும் கருத்தரங்குகள் நடத்தி, விழா நாட்களில்

ஆய்வில் அமைந்த நூல்களை வெளியிட்டருளினார்கள். மேலும் ஆதீனத் திருக்கோயில்களின் திருப்பணிகளை நிறைவேற்றிக் குடமுழுக்கினைத் தரிசித்தருளினார்கள். திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி திருக்கோயிலில் அன்றைய பாரதப் பிரதமர் மாண்புமிகு மொரார்ஜி தேசாய் அவர்கள் தலைமை ஏற்க, " திருவாசக மாநாடு " நடத்தி, சைவத்திற்கும் தமிழ் நாட்டிற்கும் பெருமை சேர்த்தார்கள்.

அருள்நோக்கு :

இவ்வாறாக ' நானாவித உருவாய் வந்தே நமை ஆளும் " பெருங் கருணைத் திறம் விளக்கும் ஆதீன மரபு போற்றிக் காத்திடும் பரமோப காரியாய் விளங்கிவருகின்ற இவ்வாதீனத்து இருபத்து மூன்றாவது குரு மகா சந்நிதானமாக ஞானச் செங்கோலோச்சும் சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி அவர்கள் ஆகமத்தையும் சிற்பத்தையும் அனைவரும் அறியும் வண்ணம் இவ்வாதீனத்து 22-ஆவது குருமூர்த்திகளின் முன்னை குருபூசை விழாக்கள் நினைவு மலர்களாக வெளிவரச்செய்த தட்சிணா மூர்த்தி 1, 2 பாகங்கள், சோமாஸ்கந்தர், சண்டேசுவரர், சரசுவதி எனும் நூல்களைத் தொடர்ந்து " இலிங்கோத்பவர் " எனும் இந்நூலினையும் உலாவரத் திருவுளம் கொண்டார்கள்.

நூற்றாண்டு விழாக்கள் :

ஆதீனத்தின் அருள் நிர்வாகத்தில் இயங்கி வருகின்ற திருவிடை மருதூர் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் நடுநிலைப் பள்ளியின் நூற்றாண்டு விழாவினைப் பாரோர் போற்றும் வகையில் 3-நாட்கள் கொண்டாடி (20, 21, 22—8—1993) விழாமலர், நினைவுப்பரிசுகள், புதிய கட்டிடங் கள் அமைத்துத் திருவிடைமருதூர் தலத்திற்கு மேலும் புகழ் சேர்த்து அருளினார்கள்.

இதனைத் தொடர்ந்து இவ்வாண்டு (1995) மகரத் தலைநாட் குருபூசைப் பெருவிழாவில் - ஆதீனத்தில் ஞானக் களஞ்சியமாகத் திகழும் சரசுவதி மகால் நூல் நிலைய நூறாவது ஆண்டு நிறைவு நாளினை (5—2—95) நினைவுகூரு முகமாகத்தான் ஷெ நூலகத்தினை விரிவுபடுத்தி சுவடிப்புல ஆய்வுமையம் அமைத்து, இதனை சேது சமஸ்தான மன்னர் பாஸ்கர சேதுபதி வழிவந்த மகாராணி திருமிகு இந்திராதேவி அவர்களைக்கொண்டு திறப்பித்து மகிழ்ந்தார்கள். ஆதீன நூல் நிலையத்தின் 100-ஆவது ஆண்டு விழாவொடு ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் குருபூசை விழா மலராக திருஞானசம்பந்தர் அருளிய முதல் திருமுறையை - அருஞ்சொற் பொருளுடன் மலரச் செய்தருளியது போற்றி வழிபடற்குரியதாகும்.

சைவசித்தாந்தப்பரிபாலனம் :

குருபூசை விழாவன்று இவ்வாதினம் அருள் நிர்வாகத்தில் இயங்கிவரும் சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சிமைய இயக்குநர்க்கு சித்தாந்த வித்யா சாகரம் என்றும் பேராசிரியர்களுக்கு சித்தாந்த வித்தியா நிதி என்றும் மேற்படி பயிற்சி மையத்தில் பயின்று தேர்ச்சி பெற்ற 500க்கும் மேற்பட்ட மாணவர்களுக்கு சித்தாந்த ரத்தினம், சித்தாந்தச் செல்வர் என்றும் பட்டங்கள் வழங்கி (6-2-1995) ஆசிர்வதிக்கப்பெற்றது.

8 - ஆவது உலகத் தமிழ் மாநாட்டில் :

தஞ்சையில் நிகழ்ந்த ( 1, 2, 3, 4, 5—1—1995 ) எட்டாவது உலகத் தமிழ்மாநாட்டின் நினைவாக ஆதீனத்தின் வெளியீட்டு மலர்களாக ''தஞ்சாவூர்'' (சரித்திரம், கல்வெட்டு, சிற்பம்) எனும் நூலும் திருக்கோயில்களும் பண்பாடும் எனும் மற்றொரு நூலும் சுமார் ரூபா 1, 00, 000/- மதிப்பில் அச்சிடப்பட்டுத் தமிழ் உலகத்திற்குத் தந்தருளினார்கள்.

திருப்பணிகளும் - வெளியீடுகளும் :

இக் குருமூர்த்திகள் அருளாட்சி ஏற்ற நாள் முதற்கொண்டு பல நல்லறப் பணிகளோடு; திருக்கோயில் மற்றும் திருமடங்களில் திருப்பணிகளைச் செவ்வனே நிறைவேற்றி இன்னும் பல குடமுழுக்கினை எல்லோரும் தரிசிக்கச் செய்து வருகின்றார்கள். மேலும் திருமடத்தில் நிகழும் குருபூசைப் பெருவிழாக்கள். திருக்கோயில்களின் விழாக்கள் மாநாடுகள் முதலியன நடைபெறும் தினங்களில் இதுவரை 109 நூல்களை வெளியிட்டருளியுள்ளார்கள். ( ஆதீன வெளியீடுகளின் மொத்த எண்ணிக்கை 430 ஆகும்).

இந்நூலில் :

இலிங்கோத்பவர் எனும் இந்நூலானது ஆகமம் மற்றும் சிற்ப நூல் வரிசையில் ஆதீனச் சரஸ்வதி மகால் நூல் நிலைய ஆய்வு மையத்தின் துணைக்கொண்டு ஆதீன வெளியீடாக உலா வருகிறது.

இவ்வாண்டும் '' நாயகன் சேவடிதைவரு சிந்தையும் சீர்மையும் '' அடியேனுக்கு என்றும் கைவரப்பெறவேண்டும் என்னும் பாம கருணையினால் அடியேனின் ஞானதீட்சா குருவாம் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் '' நாதன்கொள் நானுவித உருக்களில் முதன்மைகொள் '' இலிங்கோத்பவர்' குறித்த சிவாகமச் சிற்ப நூல் அடியேனால் ஆக்கப் படப் பணித்தார்கள். குருவருட் பணியினைச் சிரமேற்கொண்டு இந்நூல் உருவாக்கம் பெற்றது.

(1) இந்நூலானது முன்னர் உலாவந்த சிவாகமச் சிற்ப நூல்களின் வழியில் "இலிங்கோத்பவரின்" முதலாம் சிவலிங்க மூர்த்த பேதங்களை விளக்கிப் புராண நிகழ்ச்சியோடு தொடங்குகின்றது,

(2) அடிமுடிதேடலின் மெய்ப்பொருளியலைக் கூறி சிவாகமங்களில் காணும் இலிங்கோத்பவர் பிரதிஷ்டாவிதிகள் மற்றும் சிற்ப நூல்களில் காணும் சிற்ப அமைப்பு முறைகளை விளக்குகின்றது.

(3) தொடர்ந்து, பல்வேறு ஆலயங்களில் காணும் கவின்மிகு இலிங்கோத்பவர் திருமேனிகளின் உருவமைதிகள். திருவண்ணாமலைத் தலச் சிறப்பு, கல்வெட்டுக்கள், அஷ்டோத்திரம் - சகஸ்ரநாமங்கள் திருமுறைப் பனுவல்கள் ஆகியன இடம் பெறுகின்றன.

உறுதுணை :

அடியேனைத் தாங்கும் குருவருள் பெரியோர்களின் உறுதுணையாய் பழுத்த மனத்துள்ளும் இருந்து பல் வகையாலும் அடியேன் முயற்சிக்கு உறுதுணையாய் இலங்கியது. ஆதீன முனிபுங்கரா யிலங்கும் பழுத்த தமிழ்ப் புலமை தனதாகக் கொண்ட தவத்திரு புலவர். சுயம்புநாதத் தம்பிரான் சுவாமிகள் அருட் கண்ணோக்கு மரபு வழியானது இந்நூலினை நெறிப்படுத்தியது.

ஆதீன சரசுவதி மகால் நூலகச் சுவடிப்புலம் மற்றும் வடமொழிப் புல ஆய்வாளர் - பன்மொழிப் புலவர், சைவ சித்தாந்த ரத்தினம் காஞ்சி. சிவ. சதாசிவம், எம். ஏ., எம். எட்., எம். பில். டி. எஸ். எம். அவர்களின் பன்மொழிப் புலமை ஆகம மூலங்களையும். ஆங்கிலம் மற்றும் பிற மூலங்களையும் பழகு தமிழில் ஆக்கித் தந்ததோடு பல்வேறு பெரியார்களும் களப்பணியில் உறுதுணையாக நின்றார்கள்.

சிறப்பிற் சிறப்பாக இலிங்கோத்பவர் நிழற்படங்கள் (**Black & White Photos – Ten only**) பத்தினை புதுவை பிரஞ்ச் இந்திய கலை நிறுவனம் (**The - Director, Ecole Francaise D' Extreme-orient Centre D' Histoire Et D' Archeologie - Pondicherry**) அளித்து உதவினார்கள். ஷெ நூல் அச்சுவாகனம் ஏற்றும் சமயத்தில் பல்லாற்றாலும் ஒப்பீட்டுப் பணியில் பெருந்துணை செய்த "மெய்கண்டார்" இதழ் உதவி ஆசிரியர் புலவர். திரு. பா. மகாலிங்க தேசிகர் மற்றும் ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகப் பணியாளர்கள் அனைவருக்கும் சீர் வளர்சீர் குரு மகாசந்நிதானம் அவர்களின் அநுக்கிரகம் என்றும் துணை நிற்க வேண்டுகிறேன்.

இத்தகு சிறப்புடைய '' இலிங்கோத்பவர் '' என்னும் (சிவாகமம் மற்றும் சிற்பம்) இந்நூல் பவ ஆண்டு – பங்குனி – திருவோணம் நன்னாளில் (26—3—1995) நிகழும் இவ்வாதீனத்து 22-ஆவது குரு மகா சந்நிதானம் அருள்திரு அம்பலவாண தேசிக மூர்த்திகளின் 12 - ஆவது ஆண்டுக் குருபூசை விழாவில் சிவக்ஷேத்திர குருக்ஷேத்திர செந்தமிழ்ப் பரிபாலனம் செய்து சிவஞானச் செங்கோல் செலுத்தியருளும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தின் 23 - ஆவது குரு மகாசந்நிதானம் சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்களின் அருளாணையின் வண்ணம் விழா மலராக வெளியிடப் பெறுகின்றது.

திருவருளும் குருவருளும் இயக்கிட கருவியாய் நிற்கும் அடியேனால் எழுத்தாக்கம் பெற்ற இந்நூல் அனைவருக்கும் மெய்ம்மைப் பூசனைப் பயனை வழங்க அடியேனின் ஞானாசிரிய மூர்த்தியாம் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானத்தின் அருளினை என்றும் இறைஞ்சுகின்றேன். செந்தமிழ்ச் சைவர்கள் குணங்கொண்டு கோது பொறுத்து அருள வேண்டுகிறேன்.

திருவாவடுதுறைப் பதியில் என்றும் அருள்திருநோக்கால் பரிபாலித்து பணி கொள்கின்ற ஆதீனக் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகளின் நலலருள் வழிநிற்கும் இருபத்து மூன்றும் குரு மகாசந்நிதானம் அவர்களின் திருவடிகட்கு எனதென உள்ள அனைத்தினையும் காணிக்கையாய்ச் சமர்ப்பிக்கின்றேன். என்னை நினைந்தடிமை கொள் கருணைத் திறம் போற்றுகின்றேன்.

துறைசையாதீன செந்தமிழ்ச் சிவஞானப் பண்ணையில் மலர்ந்த சிவாகம சிற்ப சாத்திரங்களைத் தாங்கி வரும் '' இலிங்கோத்பவர் '' எனும் இம்மலரின் மணம் நுகர்ந்து சமய உலகமும், அறிஞர் உலகமும் இன்புறவும், மேலும் செம்மையுறுதற்கான கருத்துக்களை வழங்கிடவும் விரும்புகின்றேன்.

'' நமசிவாய இல்லம் ''
43, மேல சந்நிதி
திருவிடைமருதூர் - 612104.
23—3—1995

இங்ஙனம்.
குருவருட்பணியில் அடியேன்,
எஸ். நாராயணசுவாமி
எ.ம். ஏ., எம். எட்.,
ஆசிரியர், [சிற்ப ஆராய்ச்சியாளர்]
தி. ஆ. அ. தே. நடுநிலைப்பள்ளி திருவிடைமருதூர்.

உ

NAMASIVAYA

# PREFACE

Know the Light Divine; you become His Form:
Know the Light within;you become permeated by Him;
Know the Light-His form Supreme-you become Him;
Know the fact; The Light pervades ever, The Supreme
is within all; 2681.

The Light Divine, The emanation Supreme; The Sthana
The Source Supreme; the self within-
The one who realises Him within him in Samadhi-
Is worshipped even by the creator and the Protector of us all
630.

- St. Thirumoolar.

The Saivites all know the Benevolence showered on it by the holy order of Thirukkayilaya Paramparai Thiruvavaduthurai Ahdeenam. The Adheenam has been founded by Arul Thiru Namachchivaya Desika Moorthigal, under the command of Siththar Sivaprakasa Gurumoorthigal. all the Mahasannidhanams, have under taken the holy task of propagating the Saiva Siddhanta Philosophy (Saivism) through the Tamil literary works. The earlier Maha sannidhanams showered forth the Divine Experiences achieved by them through the "*Pandara Sastras*". The succceeding Gurumoorthis patronised great sarvants in Tamil Literary works and Saiva Siddhanta. The cholas responded to their benevolence and voluminous literary expositions flowed in spate.
Saint. Gnanasambandar, declares

" நாநாவித உருவாய் அவன் வந்தே நமை ஆள்வான் "

" Nanavida Uruvaai Avan Vandei namai alwan... "

i. e., "He (Supreme one) takes many a form to Grace us". The Agamas spellout the various Forms through whom we are accorded Grace of these various Forms The Mahesvara Moorthas assume the Predominance. of these Moorthas The Linga or Sthanu - occupies the foremost importance. As such, this Linga moortha occupies the sanctum sanctorum in all the temples dedicated to the worship of *Siva*. Next comes the emanation of "*Lingodbhava*"

the one who emantes from the "*linga*". Hence Seer-Valar-Seer Sivaprakasa Pandara Sannidhigal the 23rd Mahasannidhanam commanded the compilation of this work-"Lingodbhava"

As already mentioned in the preface of Chandeswara - (Adheenam Publication No. 417 - PP XIV) the worship of Siva is Three Fold - (i) The worship of Divine Gurus - the emanations of the Supreme like Ganapathi; Skanda; Dakshinamoorthi etc; (ii) Worship of the Supreme in the phases of (a) Aroopa the Formless; (b) Roopa - Aroopa - with a Form and yet Formless i.e.,. The Lfnga and (c) Roopa - with Form and (iii) the worship of Saints who have achieved Supreme sublimity through their unflinching worship have attained "Sivatva" (Sivahood) The worship of ' Lingodbhava " stands as the culmination of the worship of the Supreme in all its phases as put down in (ii) a, b and c. above. As the Form less phase at best can only be comprehended as a Huge flame of Divine effiugence, it corresponds to the Bana of the Sivalinga. Aptly it is called the Tyoti-Sthambha of shortly as ' Sthanu" Again this sthanu in the form of linga corresponds to the second-phase-Form in the Formless. Thirdly with the Chandrasekaramoorthi in the sthanu, it represents Roopaphase.

This volume contains as in the previous works, the place occupied by the Lingodbhavamoorthi in the temples; the construction and conservation of Lfngodbhava; modes of worship and the philosophy imbiled; the Iconographic details of lingodbhava; the detailed information found in Vedic; Agamic; Iconogarphic and Puranic texts; Various Icons of Lingodbhava occurring in varfous temples; The hymns and Epigraphic information pertaining to Thiruvannamalai (deemed to be the sacred spot where the emanation of " Lingodbhava " has occurred). The sahasra and Ashtottara sata namavalis are also published.

It fs my bounded duty to state again that I am a meretool in the vast armoury of Gurumahasannidhanam in bringing out this volume, Thavathiru Swayambunatha Thambiran, with his extreme kindness continued be my constant guide inputting all the information gathered into an appropriate shape order andstyle. The erudite scholarship in various Faculties and multilinguistic efficiency of Siddhanta Ratnam. Thiru C. S. Sadasivam; M. A. M. Ed..M.Phil. D.S.M. the Librarian and research Fellow of Thiruvavaduthurai Adheenam Saraswathi mahal Library Research centre stood

as a constant help in shaping the English and Sanskrit section of this work and in the Translation of Sanskrit into Tamil. A special mention is to be made of The Director., The Ecole Francaise "D" Extreme - orient centre "D" Histoire Et D' Archeologic - Pondicherry providing the uptodate information., Literature, and photoplates concerned with this volume. As usual Thiru, B. Mahalinga Desikar, Sub - Editor of "Meikandar" - the Adheenam monthly., and the Staff of Sri Namachivaya Moorthigal Achagam rendered the most timely help to bring this volume in the usual attractive manner.

I can only pray that the grace of 23rd GurumahaSannithanam, Sri Lingodbhavar and Sri Gnanama Natarajamoorthi should be their constant guardian and bestow all benevolence on all mentioned above.

The combind efforts of all made it possible for the release as the souvenir on the 12th Gurupuja (Panguni - Thiruvonam) of Arul Thiru Ambalavana Desiga Moorthigal the 22nd Gurumaha Sannithanam on 26 - 3—1995.

Once again being my bounden duty. I submit my most humble obeisaances to my Gnana Gurumoothigal - the 23rd Mahasannidhanam for the extreme kindness showered on me.

Suggestions for improvement of this volume are humbly solicited.

A humble Servant In Guruseva,

**S. Narayanaswamy,** M. A., M. Ed.,
(Silpa-Rasearch Scholar)
Teacher,
T. A. A. D. Middle School,
**Thiruvidaimarudur - 612 104.**

"Namasivaya illam,"
43, West Sannathi,
Thiruvidaimarudur,
Pin - 612 104.
23—3 1995.

# எடுத்தாண்ட நூல்கள்


1. திருமுறைகள் (1-6)
2. அருணாசலப் புராணம்
3. திருத்தலப்பெருமை
4. திருவண்ணாமலை
5. சிவவடிவங்கள்
6. தமிழ் நாட்டு செப்புத் திருமேனி
7. சிற்பமும் கலைவாழ்வும்
8. திருமந்திரம் - ஆதீனத்து உரை
9. சிவத்திருமேனிகள்
10. கவின்மிகுகலைகள்
11. மகோற்சவ விளக்கம்
12. சிற்பமும் கலைவாழ்வும்
13. சிற்பச்செந்நூல்
14. மகேசுவரவடிவங்கள்
15. சிவபராக்கிரமம்
16. தஞ்சாவூர்
17. ஆதீன சாசுவதிமகால் ஆய்வு மையக் கையெழுத்துப் பிரதிகள்
18. நமது ஆலயங்களும் மூர்த்திகளும்
19. தியான ரத்னாவளி
20. ஸாரஸ்வதிய சித்ரகர்ம பிரகாசம்
21. ஸ்ரீ தத்வநிதி
22. காச்யப சில்பசாந்திரம்
23. சில்பரத்நம்
24. விஸ்வகர்மியம்
25. சிவரகசியம்
26. கந்தபுராணம்
27. இரண்டாம் உலகத் தமிழ்மாநாடு - கையேடு
28. கலைக்களஞ்சியம்
29. காமிகம
30. காரணம்
31. அஜிதம்
32. சுப்ரபேதம்
33. பிரதிமாலட்சணம்
34. சகலாதிகாரம்
35. சிவாலயப் பிரதிஷ்டாவிதி
36. சிவாலய தரிசன விதி
37. யாகசாலைக் கருவூலம்
38. தென்னிந்திய சிற்பங்களும் கோயில்களும்
39. தென்னிந்தியக் கல்வெட்டு சாசனங்கள்
40. மொழ்வியற் களஞ்சியம்
41. சிவவடிவங்கள்
42. தட்சிணாமூர்த்தி பாகம் - 1
43. சோமாஸ்கந்தர்
44. சண்டேசுவரர்
45. சரசுவதி
46. கணபதி
47. முருகன்
48. **Indian Architecture**
49. **Hindu Iconography**
50. **Art of South India**
51. **Early - Middle - Later Chola temples**
52. **South Indian Images**
53. **French Indology Agama Books**
54. **South Indian god & goddesses**
55. **Master pieces of early South Indian Bronzes**

# பொருளடக்கம்

உ

சிவமயம்

# இலிங்கோத்பவர்

## -: சிவலிங்க (மூர்த்த) பேதங்கள் :-



" செங்க ணனும் பிரமனும் தம்முளே
எங்கும் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேனென்றி லிங்கத்தே தோன்றினுன்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே "

— திருநாவுக்கரசர்.

**சிவலிங்கம் :**

அறுபத்து நான்கு சிவமூர்த்தங்களில் ஆதிமூர்த்தம் சிவலிங்கமாகும் குணமும் குறியும் கடந்த பேரொளியாகிய இறைவனை ஒரு குறியின்கண் வைத்து வழிபடும் பொருட்டுத் திகழ்வது சிவலிங்கமாகும். சிவலிங்க வழிபாடு மிகமிகத் தொன்மையானதாகும். நமது பாரத தேசத்தில் எங்கு நோக்கினும் இன்றுவரை சிவாலய வழிபாட்டில், சிவலிங்க வழிபாடு சிறப்பாக வழிபடப் படுகிறது. இருப்பினும் இத் தொன்மையான வழிபாடானது உலகின் பல்வேறு இடங்களில் (சிவலிங்கங்கள்) காணப்படுகின்றன.

*** உலகின் சிவன்கோயில்கள் :**

4. **ஜாவாத்தீவில்** பல சிவன்கோயில்கள் அழிவுற்ற நிலையில் உள்ளன. இங்குள்ள டெகால் என்ற ஆற்றிலிருந்து சிவபெருமானின் செப்புச் சிலை ஒன்று கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. மேலும் கபால கணபதி, துர்க்கை சிலைகளும் கிடைத்துள்ளன.

---

* '' *தட்சிணாமூர்த்தி* '' - பாகம் 1-ல் பக்கம்-6 - ஆசிரியர் :
சு. நாராயணசுவாமி.

ஜாவாவில் உள்ள கோயில்களில் இன்றும் திருவாசகம் ஓதப்படுகிறது. அங்கிருப்பவர்க்குத் தமிழ்மொழி தெரியாதபடியால் ஏதோ மந்திரம்போல் உச்சரித்து வருகிறார்கள். மேலும் ஜாவாவில் உள்ள பெரம்பானம் என்ற இடத்தில் உள்ள சிவன் கோயிலில் சிவதாண்டவத்தின் 32 முத்திரைகளைக் குறிக்கும் சிற்பங்கள் உள்ளன.

2 **சுமத்திராவில்** அழிபாடுற்ற சிவன் கோயில் உள்ளது. இங்கே அர்த்தநாரி வடிவம், கணபதி சிலை, நந்தி சிலை உள்ளன.

3. **போர்னியாவில்** ஒரு மலைக் குகையில் சிவன், விநாயகர் சிலைகள் உள்ளன.

4. **சியாம்** நாட்டிலும் **கம்போடியாவிலும்** சிவலிங்கத்தின் உருவங்கள் கிடைத்துள்ளன. சியாமில் பழைய சிவன்கோயில் இருக்கிறது. இக்கோயில் உள்ள இடத்தில் இப்போதும் பொங்கல் விழா கொண்டாடப்படுகிறது.

5. **பாபிலோனியாவில்** நிகழ்ந்த அகழ்வாராய்ச்சியால் 6000 ஆண்டு கட்கு முற்பட்ட சிவலிங்கங்களும் சிவாலயத்தின் வழிபாடுகளும் கிடைத்துள்ளன. இங்குக் கண்டெடுக்கப்பட்ட களிமண் ஏட்டில் **சிவன்** என்ற பெயர் காணப்படு கிறது. பாபிலோனியர் தம் கடவுளுக்கு இட்டு வழங்கும் பெயர்களில் **எல்சடை** என்று ஒரு பெயர் காணப்படுகிறது. இச்சொல் சூரியனைப்போன்ற சிவந்த சடையுடையவன் என்று பொருள் தருவதாக இருக்கலாம் என எண்ணப்படுகிறது. இங்குக் கிடைத்த சிவபெருமானின் சிலை - ஆனேற்றின் மீது நிற்பதாகவும் கையில் மழுவும், இருபுறமும் முத்தலையுடைய சூலமும் ஏந்தியதாகவும் காட்சி யளிக்கிறது. பாபிலோனியரின் '' **மாதப் பெயர்களில் ஒன்று சிவன்** '' பெயர் கொண்டிருக்கிறது.

6. **சிரியா** நாட்டில் சிவன் சிலையும் சிவன் உருவமும் பொறித்த வெண்கலத் தட்டும் கிடைத்துள்ளன. இத்தட்டில் உள்ள உருவம் தந்தைக் கடவுளின் வடிவம் என்று கூறுகின்றனர், இவ்வுருவம் வலக்கையில் மழுவும், இடக்கையில் ஆறு முனையுள்ள இடியேறும் தாங்கி இடபத்தின் மேல் நிற்பதாகப் பொறிக்கப்பட்டிருக்கிறது.

7. **எகிப்தில்** உள்ள '' **பாலைவனம் ஒன்றுக்குச் சிவன்** '' என்ற பெயர் வழங்கிவருகிறது. இங்கு வாழும் மக்கள் அமன்யூ என்ற கடவுளை வணங்கு கின்றனர். அக்கடவுளுக்கு **இடபம்** வாகனமாக இருக்கிறது.

8. **கிரேக்க** நாட்டில் சிவலிங்கங்களைப் பொது இடங்களில் எண்ணெயில் நீராட்டி வழிபட்டனர் என்று ஒரு கிரேக்க அறிஞர் எழுதியுள்ளார்.

9. **அமெரிக்காவில்** முதன் முதலாக ஐரோப்பியர் குடியேறியபோது அங்கு வாழ்ந்த பழங்குடியினர் சிவலிங்கங்களை வைத்து வழிபட்டதாக எழுதி வைத்துள்ளனர்.

**10. அமெரிக்காவில் உள்ள கொலறடோ** என்ற ஆற்றின் கரையில் மிக உயரமானதும் தட்டையானதும் ஆன ஒரு குன்று உள்ளது. இக்குன்றின் மேல் 10.000 ஆண்டுகளுக்கு முற்பட்ட சிவன்கோயில் ஒன்று இருக்கின்றது.

மேற்கூறப்பட்ட சான்றுகளினுல் உலகின் பல்வேறு இடங்களிலும் சிவன் கோயில்களும், சிவ வழிபாடும், சிவனின் பல்வேறு நிலையில் அமைந்த உருவங்களும் விழாக்களும் நடந்து வந்தன என்பதனை அறிகின்றோம். சிவலிங்கத்தைப் பிரதானமாக வைத்து. ஏனைய சிவ மூர்த்தங்களை திருக்கோயில்களில் விளங்கும் கோபுரங்கள், விமானங்கள், கோஷ்டங்கள் ஆகிய இடங்களில் கற்சிலாவாகவும், சுதைவடிவாகவும் உற்சவமூர்த்திகளாகவும் பின்னுளில் நமது முன்னேர்கள் அமைத்து வழிபடலாயினர்,

**சிவாலயங்களில்**
**சிவலிங்க அமைப்பு:** ( ஆகமங்களில் )

உருவ வழிபாட்டில் சிவலிங்க வழிபாடே மிகத் தொன்மையானது. இலிங்கம் என்பதற்குரியபொருளைக் காரணம், சுப்பிரபேதம், வாதுளம் முதலான ஆகமங்கள் தெளிவாகக் கூறுகின்றன. " எந்த இடத்தில் பிரளய காலத்தில் சேதன அசேதனப் பிரபஞ்சங்கள் அனைத்தும் இலயம் அடைந்து, பின்னர் படைப்புக் காலத்தில் எதிலிருந்து மீண்டும் உற்பத்தியாகின்றனவோ அதுவே இலிங்கம் என்பதாகும்

லிம் – என்பது லயத்தையும். ( ஒடுங்குவதையும் ) கம் – என்பது வெளிவருதலையும் குறிக்கும். மேலும் இலிங்கம் என்பது சித்தரித்தல் எனப் பொருள்படும். சிவபெருமான் படைப்பு முதலான ஐந்தொழில்களாலும் பிரபஞ்சத்தைச் சித்தரிக்கின்றதால், சிவலிங்கம் எனப்பெயர் ஏற்பட்டது என்று வருணபத்ததி கூறுகிறது.

" தேவர்கள் செல்வத்தை அடையும் பொருட்டு, விசித்திர ரூபமாகிய " **மகாலிங்கமூர்த்தியை** " அபிடேகம் செய்து வழிபட்டார்கள் என்று ருக் வேதத்திலும் சிவலிங்கத்தைப் பற்றிய குறிப்பு வந்துள்ளது.

சிவலிங்கத்தில் பீடமாக உள்ள பகுதி விந்து என்னும் தத்துவத்தையும் இலிங்கமாக உள்ள பகுதி நாதம் என்னும் தத்துவத்தையும் குறிக்கும் என்றும் நாத விந்து வடிவான இவ்விரண்டையும் ஒன்ருகச் சேர்த்தலே பிரதிட்டை என்றும் யோகஜம் என்னும் ஆகமம் கூறுகிறது.

**சிவலிங்க பாக அமைப்பு :**

சிவலிங்கமானது, மூன்று கூறுகளை உடையது. " **அடிப்பாகம்** நாற்கோண வடிவமாய் நிலத்திற்தத் தலைவனை படைப்புக் கட்வுளாய் பிரம பாகத்தை உணர்த்துவதாகும்.

"**மத்திமபாகம்**" – எட்டு பட்டைகளையுடைய எண்கோண வடிவமாய் 1. வாமை, 2. சேஷ்டை, 3. ரௌத்ரி, 4. காளி, 5. கலவி கரணி, 6. பலவிகரணி, 7. பலப்பிரதமனி, 8, சர்வபூததமனி என்னும் திருமாலின் எட்டு சக்திகளும் அதனோடு பொருந்த இருக்கும் ஆவுடை எனப்படும். x திருப் புடம்பைத் தலவரலாற்றில் – மனோன்மணியாகிய ஒன்பதாவது சக்தியும் சேர்ந்து திருமாலின் ஒன்பது சக்திகளாகி நீருக்கு அதிபதியான காத்தல் எனப்படும் ஸ்திதித் தலைவனான திருமாலின் பாகத்தை உணர்த்தும்.

"**ருத்ரபாகம்**" – (பாணம்) மேலுள்ள பாகம் நெருப்பிற்குத் தலைவனும் அழித்தல் மறைத்தல் அருளல் ஆகிய முத்தொழிலுக்குத் தலைவனான சிவபாகம் ஆகும். இதனாலேயே இலிங்கோத்பவ மூர்த்தியின் திருமேனியினைக் காட்டும் போது பாணத்திலேயே காட்டப்படுகின்றது.

பூமிக்கு அதிபதியான **பிரமபாகம்**, பூமிக்குள் மறைந்து ஒடுங்கி நிற்கும். நீருக்கு அதிபதியான திருமாலின் பாகம் அபிடேக நீரைத் தாங்கி விரிந்து நிற்கும், நெருப்புக்கு அதிபதியான சிவபாகம் (சோதியாய் நின்ற இலிங்கோத் பவத் திருமேனி) மேலோங்கி சோதிபோல் ஒளியுடனிருக்கும்.

உலகிலுள்ள * எல்லா மரங்களும் விதைகளும் கனிகளும், எல்லா வகையான முட்டைகளும், ஜீவராசிகளும், பிண்டங்களும், பூமி, ஆகாயம், நட்சத்திரம் பலவும் சிவலிங்கத்தின் மேற்பாகம் போல அமைந்திருப்பது சிந்திக்க வேண்டியது.

**சிவ ரகசியத்தில் இலிங்க பேதங்களும் பலன்களும்:**

z ஹே தேவி! இனி விசேஷித்து க்ஷேமங்களை அளிக்கக் கூடிய பற்பல இலிங்கங்களையும், அவைகளைப் பூசிப்பதனால் உண்டாகும் பலன் களையும் கூறுகின்றேன் கேட்பாயாக.

சிவனார் கூறுகிறார்:

ஸைகதலிங்கம் (மணல்களினாலே செய்யப்பட்ட இலிங்கம்), 1. தண்டுலம் (அரிசிகளினால் கல்பிக்கப்பட்ட இலிங்கம்), 2. தாமிரலிங்கம், 3. நதியின் மண்ணாலே செய்யப்பட்ட இலிங்கம், 4. கோமய (சாணம்) த்தினாலே செய் யப்பட்ட இலிங்கம், 5 வெண்ணெய்யினாலே செய்யப்பட்ட இலிங்கம்,

---

x ஷை தலவரலாற்று நூலாசிரியர் - மதுரை ஆதீனகர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்.

* "மூலதோ பிரஹ்மரூபாய மத்யதோ விஷ்ணுரூபிணி
அக்ரதோ சிவரூபாய விருக்ஷ ராஜாயதே நம:"

அரசமரத்தை பிரதட்சணம் செய்வோர் அறிவோர். இருப்பினும் சிவலிங்கத்திற்கும் பொருந்தும்.

z ஸ்ரீ தத்வநிதி நூலில் காண்க.



அறுபத்துநான்கு சிவமூர்த்தங்களில்
ஆதிமூர்த்தமாக விளங்கும் சிவலிங்கத் திருமேனி :

6. ருத்திராக்ஷத்தினாலே செய்யப்பட்ட இலிங்கம், 7. பஸ்மாவினாலே (விபூதி) செய்யப்பட்ட இலிங்கம், 8. சந்தனத்தினாலே செய்யப்பட்ட இலிங்கம், 9. கூர்ச்சத்தினாலே (தர்ப்பை முடிச்சு) செய்யப்பட்ட இலிங்கம் 10. புஷ்பமாலா இலிங்கம், 11. வெல்லத்தினாலே செய்யப்பட்ட இலிங்கம், 12, மாவினாலே செய்யப்பட்ட இலிங்கம், 13. க்ஷணிக இலிங்கம் முதலியனவாகும்,

1. க்ஷணிகலிங்கமென்பது ஜலமண்டலத்தில் இலிங்கத்தைத் தாபித்து ஆத்மார்த்தமாகப் பூஜிப்பதாகும்.

2. தண்டுல இலிங்கத்தைப் பூசிப்பவன் அதிகமாகப் புத்திரர்களை அடைவான்.

3. ரோகங்களின் நாசத்திற்காக கோமய இலிங்கத்தைப் பூசிக்க வேண்டும்

4. கேசம் (மயிர்) எலும்புகளாலே செய்யப்பட்ட இலிங்கமானது சகல சத்ருக்களையும் அழித்துவிடும்.

5. அசுரமான லவணத்தாலான இலிங்கமானது சகல லோகங்களையும் வசப்படுத்தும்.

6. ஸ்தம்பனம் செய்வதற்கு மஞ்சள் பொடியினாலே செய்யப்பட்ட இலிங்கமானது சிறந்ததாகும்.

7. அரிசிமாவினாலே செய்யப்பட்ட இலிங்கமானது வித்தியாப்ரதமாகும்.

8. தயிர், பால் இவைகளினால் கல்பிக்கப்பட்ட இலிங்கமானது முறையே புகழ், சாம்ராஜ்யம் இவைகளை விருத்தி செய்யும்.

9. தூர்வை (அறுகம்புல்), கடுசி (சீந்தில்கொடி) இவைகளினாலே செய்யப்பட்ட இலிங்கமானது அபமிருத்யுவை நிவர்த்தி (விலக்கும்) செய்யும்.

10, கருப்பங்கழியினாலே கல்பிக்கப்பட்ட இலிங்கமானது உச்சாடனம் செய்வதில் சிறந்ததாகும்.

11. சர்க்கரை அல்லது கருப்பஞ்சாற்றினாலே கல்பிக்கப்பட்ட இலிங்கமானது அதிகமான செல்வத்தையும் காமத்தையும் அளிப்பதாகும்.

12. ஸ்படிக மயமான இலிங்கமானது, சௌமிய பாவத்தை (மனச் சாந்தியை) அளிப்பதாகும் என்று முனிவர்கள் கூறியுள்ளார்கள்.

13. பிதிருக்களின் முக்தியை உத்தேசித்து ரஜத (வெள்ளி) இலிங்கத்தைப் பூசிக்கவேண்டும்.

14. சுவர்க்கலோகத்தையடைய விரும்புகிறவன் சுவர்ண இலிங்கத்தைப் (தங்க இலிங்கம்) பூசிக்க வேண்டும்.

15. புஷ்டியை விரும்புகிறவன், எப்பொழுதும் தாமிர இலிங்கத்தைப் பூசிக்க வேண்டும்.

16. பித்தளை இலிங்கத்தை பூசை செய்பவரும் புஷ்டியை அடைவர்.

17. கீர்த்தியை விரும்புகிறவன் எப்பொழுதும் காம்ஸ்ய (வெண்கலம்) இலிங்கத்தைப் பூசிக்க வேண்டும்.

18. சத்ருமாரணத்தை விரும்புகின்றவன் எப்பொழுதும் லோக இலிங்கத்தைப் (இரும்பு இலிங்கம்) பூசிக்க வேண்டும்.

19. ஆயுளை விரும்புகின்றவர் செஞ்சந்தனத்தினுலே செய்யப்பட்ட இலிங்கத்தைப் பூசிக்க வேண்டும்.

20. ஜ்வர சமனத்திற்காக உத்தமமான சந்தன இலிங்கத்தைப் பூசிக்க வேண்டும்.

21. கஸ்தூரியிலே கல்பிக்கப்பட்ட இலிங்கத்தைப் பூசிப்பவன் கிரந்தத்தைச் செய்வான்.

22. கோரோசனையிலே செய்யப்பட்ட இலிங்கத்தைப் பூசித்தால் ஸௌந்தரியம் கிடைக்கும்.

23. குங்குமப் பூவினுலே இலிங்கத்தை அமைத்து வழிபட்டால் சரீர காந்தி கிடைக்கும்.

24. வெண்மையான அகருவினுலே (அகில்கட்டை) செய்யப்பட்ட இலிங்கமானது மிகுந்த சக்தியை விருத்தி செய்யும்.

25. கருங்காலியினுலே செய்யப்பட்ட இலிங்கமானது சர்வாபீஷ்டங்களையும் அளிக்கும்.

26 யக்ஷகர்தமத்தினுலே (குங்குமப்பூ, கருங்காலி, கஸ்தூரி பச்சைக்கற்பூரம், சந்தனம் ஆகியன சேர்ந்தது) செய்யப்பட்ட இலிங்கமானது பிரீதியை விருத்தி செய்யும்.

27. கோதுமை மாவினுல் செய்யப்பட்ட இலிங்கத்தை பூசிப்பவன் பசுச்செல்வத்தை (பால்வளம்) அடைவான்.

28. பயத்தமாவினுலே செய்யப்பட்ட இலிங்கத்தை பூசிப்பவன் அன்னத்தை அடைவான்.

26. உளுந்து மாவினுலே செய்யப்பட்ட இலிங்கத்தை பூசிப்பவன் எப்பொழுதும் புஷ்டியை விருத்தி செய்து கொள்வான்.

30. கோத்துக்கட்லை மாவினுலே செய்யப்பட்ட இலிங்கமானது சகல சித்திகளையும் அளிக்கும்.

**31.** புகழை விரும்புகின்றவன் நெல்லினாலே செய்யப்பட்ட இலிங்கத்தை பூசிக்க வேண்டும்.

**32.** வசந்த காலத்தில் யவையினாலே செய்யப்பட்ட இலிங்கத்தைப் பூசிப்பவன், மன்மதனைப் போல் ஸ்திரிகளுக்குப் பிரியனாக இருப்பான்,

**33.** கிரீஷ்ம காலத்தில் மல்லிகைப் பூவினாலே செய்யப்பட்ட இலிங்கத்தைப் பூசிப்பவன் அதிகமாகப் பயிர்த்தொழில் செய்வான்.

**34.** வர்ஷ காலத்தில் ஊமந்தம் பூவினாலே செய்யப்பட்ட இலிங்கத்தை பக்தியுடன் பூசிப்பவர் இந்த பூமியிலும், பரலோகத்திலும் சுகியாக இருப்பர்

**35.** சரத் காலத்தில் நீலோத்பலத்தினாலே செய்யப்பட்ட இலிங்கத்தை பரம பக்தியுடன் பூசிப்பவர் சிறந்த சித்தியை அடைவர்.

**36.** ஹேமந்த காலத்தில் ஜாதிப்பூவினாலே அழகான இலிங்கத்தைச் செய்து பூசிப்பவர் பரமேசுவரனுடன் சந்தோஷமாக இருப்பர்,

**37.** சிசிர ருதுவில் சகலவிதமான புஷ்பங்களினாலேயும் செய்யப்பட்ட இலிங்கத்தைப் பூசிக்கின்ற மனிதன், சகலவிதமான பாபங்களும் நீங்கியவனாக பிரம்மாவுடன் இருப்பர்.

**38.** பாஷாணத்தினாலே செய்யப்பட்ட இலிங்கத்தை பரமசந்தோஷத்துடன் பூசிப்பவர் சகல இஷ்ட சித்தியை அடைவர்.

**39.** எந்தவிதத்தினாலேயாவது ஏதாவது ஒரு பொருளினாலே செய்யப்பட்ட இலிங்கத்தைப் பூசிப்பவர் பரமேசுவர பரிவார கணங்களில் ஒருவனெனும் தன்மையை அடைவார்.

அவ்விதமே முறையாக பத்மராகம், காச்மீரம், புஷ்பராகம், இந்திரநீலம், கோமேதகம், காருந்மதம், பவழம், முத்து, வைரம், ரசம் இவைகளினாலே செய்யப்பட்ட இலிங்கங்களும் பாண இலிங்கங்களும் பூசிக்கத் தக்கவைகளாகும்.

**ஆன்மார்த்த வழிபாடு :**

இவ்வாறாக க்ஷணிக இலிங்கம் ஒன்றைக் கொண்டோ, இஷ்ட இலிங்கங்களைக் கொண்டோ, மந்திரம், கிரியை, பாவனை மூன்றாலும் செய்யப் பெறுவது x ஆன்மார்த்த வழிபாடாகும்.

மந்திரம் – வாக்கால் பயன் பெறுத்தப் பெறுவது. கிரியை – காயத்தால் பயன் பெறுவது. பாவனை – மனத்தால் செய்யப்பெறுவது, இவ்வாறு மனம் வாக்குக்காயங்கள் மூன்றினாலும் பயன் பெறுவது ஆன்மார்த்த வழிபாடாகும்.

---

x ஆன்மார்த்த வழிபாட்டு முறையில் - திருவாவடுதுறை ஆதீனத்திற்கே உரியதான மரபு ஒன்று உண்டு. இவ்வாதீனத்தின் வழியாக தீட்சை மற்றும் பூசை பெற்றவர்கள் இதனை அறிவர்.

சிவபூசையில் அருக்கியங்களாக சாமானிய அருக்கியம், விசேட அருக்கியம், சுவாகத அருக்கியம், நிரோத அருக்கியம், பராமுக அருக்கியம் பாத்தியம், ஆசமனம் முதலிய அருக்கியங்களும் உரியதாக்கப்பெறும்.

மற்றும் பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி, என்ற ஐந்து சுத்திகளும் செய்யப் பெறுவது ஆன்மார்த்த பூசையின் அங்கங்களாகும்.

மற்றும் அங்கநியாசம், கரநியாசம், தண்டபங்கி நியாசம், முண்டபங்கி நியாசம், வர்ண நியாசம், கலாநியாசம், சதாசிவ மூர்த்திக்கு வித்தியாதேக நியாசம் முதலிய நியாச வகைகள் பயன்படுத்தப்பெறல் வேண்டும். நியாசம் – அவ்வங்கத்தினை மந்திரகிரியை பாவனையொடு தொடுதலாகும்.

மேலும் ஆவாகன, ஸ்தாபன, சந்நிதான, சந்நிரோதன, திக்பந்தன, அவகுண்டன, தேனு முத்திரை முதலிய கிரியைகளை உணர்த்துவது போன்ற முத்திரைகள் பலவும் ஆன்மார்த்த பூசையில் பயன்படுத்தப் பெறுகின்றன.

சிவபூசைக்கு முன்பு சிவசூரியபூசை, அதற்குரிய துவாரபூசை, போகாங்க லயாங்க பூசைகள் சோமாதிக்கிரக தேசச்சண்டேசர் பூசை வரை செய்தல் வேண்டும்.

பின்பு சிவபூசை செய்யத் துவங்கி அகப்பூசை, சுத்திகள், ஆசனபூசை ஆவரணபூசை மற்றும் ஐந்து ஆவரண மூர்த்திகளுடனும் பெருமானைச் சிவாசனத்தே இருத்தி பதினாறுவித உபசாரங்களால் வழிபட்டு ஜெபசமர்ப்பணம் செய்து சண்டேசுவர பூசையுடன் ஆன்மார்த்த வழிபாட்டை நிறைவுசெய்தல் வேண்டும். இத்தகைய x ஆன்மார்த்த பூசையினை குருவழிமூலம் பெற்று அதன்படி நடத்தலே சிறந்த பயன் உண்டாகும்.

**சிவலிங்க பூசையின் அவசியம்:**

யாரொருவர் தினந்தோறும் சிவலிங்க பூசை செய்யாமல் காலத்தைக் கழிக்கின்றாரோ அவர் மகா பாபங்களைச் செய்தவராகின்றார்.

சகல விதமான தானங்கள் பற்பல விதமான விரதங்கள் புண்ணியத் தீர்த்தத்தில் நீராடல், யாகங்கள் – இவைகளும், சிவ பூசையும் சமமாகும்.

கலியுகத்தில் சிவலிங்க பூசையானது மிகவும் சிறப்புடையதாகும். சிவபூசைக்கு இணையானது வேறு ஒன்றுமில்லை.

---

x ஆன்மார்த்த பூசை மேடைகளை - திருவாவடுதுறைத் திருமடாலயம் திருக்குளம், திருந்தளிச்சேரி மடமான கல்லிடைக்குறிச்சி ( ஆதீனக் கிளை மடம்) மடத்தின் உள்ளே புகுந்து வரும் தாமிரபரணி தீர்த்த மண்டபம், திருவாவடுதுறை காவிரிப் படித்துறை மற்றும் ஆதீனக் கிளைமடங்களில் காணலாம்.

பக்தி முக்தி இவைகளை அளிக்கக்கூடியதும், பலவிதமான ஆபத்துக்களையும் விலக்கக் கூடியதுமான இலிங்கத்தை பக்தியுடன் பூசிப்பவர்கள் சிவ சாயுஜ்யத்தை அடைவர் என்பது உண்மையாகும்.

**°முகலிங்கங்கள் : ( படம் -1 )**

முகலிங்கம் நான்குவகைப்படும். அவையாவன: 1. ஆட்யம், 2. அநாட்யம், 3. சுரேட்யம், 4. சர்வசம் ஆகும்.

**1. ஆட்யம்:** சிவலிங்கத்தில் சிவ பாகத்தில் 1000 முகங்களை உடையது. ஒவ்வொரு முகமும் சிறு உருண்டை வடிவாக இருக்கும். இந்த ஆயிரத்தின் வரிசை எண்ணிக்கை.

| அடிமுதல் உச்சி | — | சுற்றுவரி | — | கூடுதல் |
|---|---|---|---|---|
| 50 | — | 20 | — | 1000 |
| 40 | — | 25 | — | 1000 |

என்று ஏதேனும் ஒரு முறையில் இருக்கும். திருவையாற்றுத் தென்முகத் தெய்வ முன் மண்டபத்தில் கீழ்ப்பக்கம் ஐந்து ( பஞ்ச ) பூதலிங்க வரிசையில் ( பிருதிவிலிங்கம் ), காற்று ( தேயு ) லிங்கம் முறையே இவ்வாறு அமைந்துள்ளது. திருஒற்றியூர், திருவிடைமருதூர், கும்பகோணம் மற்றும் சில தலங்களில் இவ்வாறு 1000 முகங்களை உடைய முகலிங்கங்களைக் காணலாம்.

**2. அநாட்யம்:** முகம் ஏதும் காணப்படாதது. இவ்வமைப்பினை எங்கும் காணலாம்.

**3. சுரேட்யம்:** சிவலிங்கத்தின் சிவபாகத்தில் 108 முகம் சிறு உருண்டை வடிவில் செங்குத்தாக ஒரு சுற்றில் 27 வீதம் 4 சுற்று $27 \times 4 = 108$ என்ற அமைப்பிலும் அல்லது வேறு வகையில் மொத்தம் 108 உடையதாக இருக்கும்.

**சர்வசம் — ஐந்துவகை :**

இது முழு உறுப்புகளை உடைய முகலிங்கமாகும். இது ஐந்து வகைப்படும். ஐந்து முகம், நான்கு முகம், மூன்று முகம், இரண்டு முகம், ஒரு முகம்.

**1. ஐந்து முகலிங்கம்:** உச்சியில் ஈசானம், கிழக்கு நோக்கி தத்புருடம், தெற்கு நோக்கி அகோரம், வடக்கு நோக்கி வாமதேவம் மேற்கு நோக்கி சத்யோஜாதம் என்னும் ஐந்து முகங்களுடன் காணப்படும் தென்னாட்டில் விரிஞ்சிபுரம் ( தென்னார்க்காடு மாவட்டம் ) தஞ்சாவூர் இராசகோபாலசாமி கோயிலில் ஒரு பால் உள்ள அருங்காட்சியகத்தில் காணலாம்,

---

*o இப்பகுதியின் செய்திகள் யாவும் த. ப. கழகம் - தஞ்சாவூர் வெளியீடு எண் - 148 '' சிவவடிவங்கள் '' எனும் நூலில் கண்டுள்ளபடி.*

மற்றும் வடநாட்டில் " நாசிக் " - கோதாவரி உற்பத்தியாகும் இடத்தில் சலவைக் கல்லால் ஐந்து முகலிங்கம் ஒன்று உள்ளது.

2. **நான்கு முகலிங்கம் :** தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோ சாதம் என்ற முகங்களை முறையே கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு திசைகளில் உடையது. இவ்வகை நான்கு ( சதுர் ) முக லிங்கங்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படுகின்றன. தென்னாட்டில் திருவானைக்கா, மதுரை, வடநாட்டில் நேபாளம், பசுபதி நாதத்திலும் மற்றும் ஒரு சில இடங்களிலும் இருக்கிறன. நம் பாரத நாட்டின் நான்கு முகலிங்கங்கள் பல வெளி நாட்டு அருங்காட்சியகங்களில் காணப்படுகிறன.

3. **மூன்று முகலிங்கம்:** மேற்குமுகம் தவிர்த்த ஏனைய கிழக்கு தெற்கு, வடக்கு - தத்புருடம், அகோரம், வாமதேவம் ஆகிய முகங்களை உடையது. இவ்வகை இலிங்கம், தொண்டை நாட்டுத் தலமான திருவக்கரை தலத்தில் மூலத்தானத்து மூர்த்தியாகவே உள்ளது.

4. **இரண்டு முகலிங்கம்:** கிழக்கு நோக்கிய தத்புருடம் மேற்கு நோக்கிய சத்யோசாதம் என்ற முகங்களை மட்டும் உடையது.

5. **ஒரு முகலிங்கம்:** கிழக்கு நோக்கிய தத்புருட முகத்தை மட்டும் உடையது. இது ஒரு சிலஇடங்களில் காணலாம். இவ்வொரு முகலிங்கத்தை சாருபலிங்கம் என அழைப்பர்.

**2, 3, 5,** - இம்மூவகை இலிங்கங்கள் கோயில்களின் கருவறையில் வைக்கும் போது 4 கோபுரங்களை உடைய கோயில்களில் 5, 4 - முகங்களையும், 3 கோபுரவாயில்களை உடைய கோயில்களில் மூன்று முகலிங்கங்களையும், இரண்டு கோபுர வாயில்களை உடைய கோயில்களில் இரண்டு முகலிங்கங்களையும், ஒரு கோபுரமுடைய கோயில்களில் ஒரு முகலிங்கத்தையும் அமைக்க வேண்டுமெனச் சிற்பரத்தினம் எனும் நூல் கூறுகிறது. **x** 2, 3, 5 - இம்முகலிங்க அமைப்பு இருவகைப்படும், ஒன்று ஆவுடையாருக்கு மேல்முகமானது கழுத்தளவிலும் மற்றொன்று மார்பிலிருந்து முடிவரை உள்ள அளவிலும் இருக்கும்.

இலிங்க நாளத்தின் உருத்திரபாகத்தில் இலிங்கத்திலிருந்து புடைப்புச் சிற்பமாக மார்பளவு உருவங்கள் அமைக்கப்படும், இவை சத்யோசாதம், வாமதேவம், தத்புருடம், அகோரம், ஈசானம் என்ற சதாசிவமூர்த்தியின் **x** முகங்கள் ஆகும். நிட்களத்திருமேனியையும் உணர்த்துவதற்காக ஐந்தாவது முகம் காட்டப்பெறுவதில்லை.

---

x - 1, 2, 3, 4, 5 - முகலிங்கங்கள் பல வெளிநாட்டு அருங் காட்சியகங்களில் காட்சிப் பொருளாக உள்ளன; - இவைகள் நேபாளம், பீகார் - ஆகிய இடங்களில் கிடைத்தனவாம்.

x பஞ்சமுக அருச்சனையின்போது ஐந்தாவது முகத்தினை பாவனையாகக் கொண்டு அருச்சிப்பர்.

| x நால்வகை இலிங்கம் | ஆகமங்களில் கூறப்படும் பெயர் | திருமுடி அமைவு (சிரோவர்த்தனம்) |
|---|---|---|
| 1. ஆட்யம் 1000 – முகங்கள் | திரைராசிகம் | பாதிமதி (அர்த்தசந்திரம்) |
| 2. அநாட்யம் (முகம்இல் லாதது - சாதாரணம்) | வர்த்தமானம் | வெள்ளரிப்பழம் அல்லது மும்முனைத் தோற்றம் |
| 3. சுரேட்டயம் | சைவாதிகம் | முட்டைவடிவம் |
| 4. சர்வசம் | சமகண்டம் | தாழங்குடை |

**நவலிங்கங்கள் :**

திருமால் நீங்கிய பிரமன், இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் இவர்களுடைய பெயரைத் தாங்கிய ஒன்பது இலிங்கங்கள் ஆகும். இவ்வொன்பது இலிங்கங்களின் பாணத்தில் இவர்களது கையில் உள்ள ஆயுதங்கள் (சின்னங்கள்) அல்லது படைக்கலங்கள் இருக்கும். இவ்வொன்பது இலிங்கங்களையும் நடுமுதல் மற்ற எட்டுத்திசைகளிலும் அமைத்துப் பூசிக்க எண்வகைச் சித்திகளும் வந்தடையும்.

**தில்லையில் காணப்பெறும் நவலிங்கங்கள் :** (படம் - 2)

| இடம் | இலிங்கம் | ஆயுதம் (சின்னம்) | சித்தி (பலன்) |
|---|---|---|---|
| நடுவில் | பிரமலிங்கம் | தாமரை | — |
| கிழக்கு | இந்திர லிங்கம் | வச்சிரம் | அணிமா |
| தென்கிழக்கு | அக்கினிலிங்கம் | சத்தி | மகிமா |
| தெற்கு | இயமலிங்கம் | தண்டம் | இலகிமா |
| தென்மேற்கு | நிருதிலிங்கம் | வாள் *(கட்கம்)* | கரிமா |
| மேற்கு | வருணலிங்கம் | கயிறு (பாசம்) | பிராப்தி |
| வடமேற்கு | வாயுலிங்கம் | கொடி *(துவஜம்)* | பிரகாமியம் |
| வடக்கு | குபேரலிங்கம் | கதை | வசித்துவம் |
| வடகிழக்கு | ஈசானலிங்கம் | திரிசூலம் | ஈசத்துவம் |

*x - பஞ்சமுக அர்ச்சனையின்போது ஐந்தாவது முகத்தினை பாவனையாகக் கொண்டு அருச்சிப்பர்.*

எண்வகைச் சித்திகளின் பலன்கள் :

1. அணிமா : நுண்மை. மக்களின் மத்தியில் இருந்து கொண்டு அவர்களது பார்வைக்குப புலப்படா திருத்தல்

2. மகிமா : ஒரே நேரத்தில் பல இடங்களில் இருத்தல்

3. இலகிமா : பெருமை. உடலை மிகவும் இலேசாக்கிக் கொள்ளுதல்.

4. கரிமா : விண்ணிமை, உடலை மிகவும் கனமாக்கிக் கொள்ளுதல்.

5. பிராப்தி : விரும்பியது எய்தல். எண்ணிய அளவில் எவர் துணையுமின்றி எங்கும் செல்லுதல்.

6. பிரகாமியம் : நிறை உண்மை. விரும்பிய இன்பத்தைப் பெறுதல்.

7. வசித்துவம் : கவர்ச்சி. எல்லா உலகங்களையும் தன் வயப்படுத்துதல்.

8. ஈசத்துவம் : ஆட்சியுறுதல். யாவற்றையும் தன் கட்டளைக்குப் பணியச் செய்தல்.

## நவலிங்கமும் கோயிலும் :

இவ்வாறு இங்குக் கூறப்பட்ட ஒன்பது இலிங்கங்கள் ஒரே கோயிலுக்குள் இருக்கும் இடம், காண (தரிசிக்க) முத்தி தரும். தில்லைச் சிற்றம்பலத்துள் சிவகங்கைத் திருக்குளத்தின் வடபால் கிழக்கு நோக்கி ஒன்பது விமானங்களுடன் விளங்கும் கோயிலாகும். இக்கோயிலின் நடுவில் சற்றுப் பெரியவடிவில் பாணம் பதினாறு பட்டை வடிவில் ஒரு இலிங்கம் இருக்கிறது. இதனைச் சுற்றி எட்டு பட்டைப் பாணங்களையுடைய எட்டு இலிங்கங்கள் உள்ளன. இந்த எட்டும் நடுவில் உள்ளதை விட் அளவில் சிறியன. ஆக ஒன்பது இலிங்கங்கள் ஆகும். இதனை நவ இலிங்கக்கோயில் என அழைப்பர்.

## மற்றொரு கருத்து :

இவ்வொன்பது இலிங்கங்களும் ஒன்பது கோள்களை (நவக்கிரகங்களை) அடிப்படையாகக் கொண்டு நடுவில் பத்மபீடத்தில் சூரிய இலிங்கம், இதனைச் சுற்றி சுக்கிரலிங்கம், சந்திரலிங்கம், செவ்வாய்லிங்கம், இராகுலிங்கம், சனி லிங்கம், கேதுலிங்கம், குருலிங்கம், புதன்லிங்கம் எனப் பெயர்கள் குறிக்கப் பெற்றுள்ளது என்பது மற்றொரு கருத்தாகும்.

## திருத்தொண்டீச்சரமாக விளங்குவது :

திருத்தொண்டர்களைப் போற்றும் திருத்தொண்டத் தொகை தனி அடியார்கள் 63, தொகை அடியார் 9. ஆக 72 பேரைக் குறித்துப் பாடப் பெற்றது.

9 10



·ஆட்ய, அநாட்ய, சுரேட்ய லிங்கங்கள்

சர்வசலிங்க ஐந்தின் தோற்றம் ஆய்வுக்கு வரைந்தது

*1, 2, 3. ஆட்ய அநாட்ய, சுரேட்ய சிவலிங்கங்கள் :*
*1, 2, 3, 4, 5. சர்வச சிவலிங்கங்களின் தோற்றம் :*

படம் 1

[நன்றி : த. ப. கழகம் தஞ்சாவூர். வெ. எண். *148*]

## தில்லையில் ஒன்பது (நவ) லிங்கம்

அட்டசித்தி (எண்வகைச் செல்வங்களை) தரும்

சிவலிங்கத் திரு மேனிகள்



| | | |
|---|---|---|
| 1 பிரமலிங்கம் | 2 இந்திரலிங்கம் | 3. அக்கினிலிங்கம் |
| 4 யெமலிங்கம் | 5 நிருதிலிங்கம் | 6 வருணலிங்கம் |
| 7. வாயுலிங்கம் | 8 குபேரலிங்கம் | 9 ஈசானலிங்கம் |

[தில்லையில் சிவகங்கைத் திருக்குளத்தின் வடபால் அமைந்துள்ள திருக்கோயில்]

படம் 2

[நன்றி : த. ப. கழகம் - தஞ்சாவூர் - வெ. எண் 148]

இவருள் தொகையடியார்கள் :-

1. தில்லைவாழ் அந்தணர்
2. பொய்யடிமையில்லாத புலவர்
3. பத்தராய்ப் பணிவார்
4. பரமனையே பாடுவார்
5. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்
6. திருவாரூர்ப் பிறந்தார்
7. முப்போதும் திருமேனி தீண்டுவார்
8. முழுநீறு பூசிய முனிவர்
9. அப்பாலும் அடிச்சார்ந்தார்.

இவ்வொன்பதின்மரது நினைவாக அமைந்து **"திருத் தொண்டிச் சரம்"** என்னும் பெயருடன் இது விளங்குகிறது எனவும் மற்றொரு கருத்து நிலவுகிறது.

**சிவலிங்க சிரோவர்த்தனம்: (படம் - 3)**

சிவலிங்க பாணத்தின் உச்சிப்பகுதியில் வளைவான பாகத்திற்குச் **"சிரோவர்த்தனம்" "சிரோரூபம்"** என்று பெயர். இது கருங்கல்லில் மானுடலிங்கத்தைச் சிற்பி உருவாக்கும் போது அமைக்கப்படுவதாகும்.

1. தாழங்குடை வடிவம் (சத்ராகாரம்)
2. கோழிமுட்டை வடிவம் (குக்குட்டாண்டாகாரம்)
3. வெள்ளரிப்பழ வடிவம் (திரிபுருட்டாகாரம்)
4. பாதி மதி வடிவம் (அர்த்தசந்திராகாரம்)

இந்நால்வகை வடிவம் பற்றி சித்தாந்த சாராவளி என்னும் வடமொழி நூல் கூறுகிறது. ஆனால் **"மயமதம்"** எனும் சிற்பநூல் இந்த நான்குடன் ஐந்தாவதாக **"நீர்க்குமிழித் தோற்றம்"** என்ற ஒன்றும் கூறுகிறது.

*1,* **தாழங்குடை வடிவம்:** பாணத்தின் உச்சி தாழங்குடை வடிவில் நான்கு வித அளவால் அமைக்கப் பெற்றது. இது சர்வ சம லிங்கத்தில் இருக்க வேண்டியதாகும். இவ்வித அமைப்பின் சிவலிங்க பூசை பிராமணர், சத்திரியர் குலத்தினருக்குச் சிறப்பைத் தரும்.

2. **கோழிமுட்டை வடிவம்:** பாணத்தின் உச்சி கோழிமுட்டை போன்று அமைக்கப் பெற்றது. இது அளவால் நான்கு விதமாகி "விமலம், விபுலம், வர்த்தமானம், சிவத்சம்" எனப் பெயர் பெறும். சுரேட்ய லிங்கத்தில் இந்த அமைவு இருக்க வேண்டும். இது சத்திரியருக்குப் பூசிக்க நலம் தருவது.

3. **மும்முனைத் தோற்றம் :** ( த்ரிபுருடாகாரம் ) பாணத்தின் உச்சிவளைவு மும்முனையாக வெள்ளரிப்பழ உச்சிவடிவில் இருப்பது. இது அளவால் நான்கு வகைப்பட்டு " **விசயம்,** " " **சயம்** " " **விமானம்** " " **இமம்** " அல்லது **விசயம், விமானம், சமம், மித்ரம்** எனப் பெயர் பெறும். இது " அநாட்ய லிங்கத்தில் இருக்க வேண்டியதாகும். இது வைசியருக்குப் பூசிக்க நலம் தருவது.

4. **பாதிமதி வடிவம் :** ( அர்த்தசந்திரம் ) உச்சிவளைவு பாதி சந்திரன் அல்லது அரைவட்ட வடிவில் அமைந்தது. இது அளவால் நான்கு வகைப்பட்டு " **அம்ருதம்,** " **பூர்ணகும்பம், பலம், குமுதம்,** எனப் பெயர் பெறும். இது ஆட்ய இலிங்கத்தில் காணப்படுவது. இது வேளாள சாதியினர்க்குப் பூசிக்க நலம் தருவது.

இவ்வாறு அமையப்பெறும் உச்சிவளைவு (சிரோவர்த்தனம்) உச்சியில் சிதைவு இருந்தால் அரசருக்கும், செய்தவனுக்கும் ஆகாது. நெற்றியின் மேற்பக்கம் சிதைவு இருந்தால் சிற்பிக்கு ஆகாது நெற்றி இடையில் சிதைவு இருப்பின் நாட்டிற்குத் துன்பம். அதிக நீளம், குறுகல், மென்மை. பருமன் அரசனுக்கு ஆகாது.

**இலட்சனோத்தாரம் :** ( படம் - 4 )

இலட்சணம் என்றால் அடையாளம். தாரம் என்றால் அமைத்தல். அதாவது வட்ட வடிவ பாணத்தில் முகம் முன் பக்கம் எது எனக் காட்டும் அடையாளமாகும்.

பாண உயரத்தில் மூன்றில் ஒரு பங்கு உச்சிப்பகுதியை நீக்க வேண்டும். அடி இரு பங்கை எட்டுப் பகுதியாக்கி அடி இரு பங்கை நீக்கி நடுவில் உள்ள ஆறுபாகத்தில் முகம் அமைக்கப்பட வேண்டும், இம் முக அமைப்பு **சிவலிங்க சிரோவர்த்தனம்.** 1, 2, 3, 4 என்ற பாணங்களின் படத்தினைக் காண்க.

**சிரோவர்த்தனம் :**

1. தாழங்குடை ( சத்ராகாரம் )
2. கோழிமுட்டை ( குக்டாண்டம் )
3. அரைவட்டம் ( அர்த்தசந்திரம் )
4. வெள்ளரிப் பழம் ( திரிபுருடாகாரம் )

[ 1, 2, 3, 4 படங்களில் யானைக் கண், குடை, நீர்க்குமிழி, கோழி முட்டை வடிவத்தைக் காண்க ].

5. வாழைப்பூ
6. தாமரை
7. இலிங்கம்
8. கூப்பியகரம்
9. நெல்
10. யவை
11. அரசிலை
12. முக்கோணம்
13. நீண்ட வட்டம்
14. நீண்ட கத்திகள்
15. சூலம்
16. குறியற்றது.

மேற்கண்ட பதினாறு முக அமைவுகள் இலட்சணோத்தாரம் ( அடையாளங்கள் ) படத்தில் தெளிவாகக் காண்க

வழிபடுவோருக்கு எண்வகைச் சித்திகளை அளிக்கும் ஒன்பது வகை இலிங்கங்களில் முறையே தாமரை, வச்சிராயுதம், சத்தி, தண்டம், கத்தி, பாசம், கொடி, கதாயுதம், சூலம் ஆகிய குறிகள் பாணத்தின் முகத்தில் காட்டப்பட்டிருக்கும்.

இவ்வித அடையாளங்களில் யவை - பிராமணருக்கும், யானைக்கண் – சத்திரியருக்கும், நெல் – வைசியருக்கும், இருகை கூப்பியிருத்தல் – வேளாளருக்கும் நலம் தருவனவாகும்.

**பாணத்தின் அளவுத் தோற்றத்தில் எட்டு வகை இலிங்கங்கள் :**

1. சமலிங்கம்
2. வர்த்தமானலிங்கம்
3. சைவாதிகலிங்கம்
4. ஸ்வஸ்திகலிங்கம்
5. ஸர்வோபத்ரலிங்கம்
6. ஸார்வ தேசிகலிங்கம்
7. தாரலிங்கம்
8. முகலிங்கம்.

சிவலிங்கத்தின் பிரதான பாகமாகிய பாணத்தை 24 பங்காகப் பிரித்துப் பின் இப்பங்குகள் பூமிக்குள், ஆவுடைக்குள், உச்சிபாகம் ஒவ்வொன்றும் எந்த அளவு இருக்க வேண்டும் என்ற கணக்கில் கூறப்பெறுபவை. இந்த 24 பங்கில் குறைந்தது 9 பங்கு. இந்த விவரங்களைப் படத்துடன் 15 வகை இலிங்கமாகக் காட்டப்பட்டுள்ளது.

1. **சமலிங்கம் ;** முற்கூறியவாறு பாணத்தை 24 பங்கு செய்து இதில் அடி 8 பங்கு சதுர வடிவாகப் பூமிக்குள்ளும், நடு எட்டுபங்கு 8 பட்டையாக ஆவுடைக்குள்ளும் உச்சி 8 பங்கு விருத்தமாகச் சிவவடிவில் இருக்கும்.

2. **வர்த்தமானலிங்கம் ;** இது நால்வகைப்படும்.

*(2/1)* 24 பங்கில் சதுரவடிவில் 7 பங்கு பூமிக்குள்ளும் 8 பட்டைவடிவில் ஆவுடைக்குள்ளும், விருத்தமாக 9 பங்கு உச்சியில் சிவபாகமாக இருக்கும்

(2/2) இதன் மொத்தம் 21 பங்கு, இதில் சதுர வடிவாக 6 பங்கு பூமிக்குள்ளும் 8 பட்டை வடிவாக 7 பங்கு ஆவுடைக்குள்ளும் விருத்த வடிவில் 8 பங்கு உச்சியிலும் விளங்கும்.

*(3/3)* இதன் பாணம் மொத்தம் 18 பங்கு. சதுரமாக 5 பங்கு பூமிக்குள்ளும், பட்டையாக 6 பங்கு ஆவுடைக்குள்ளும் 7 பங்கு உச்சியிலும் இருக்கும்.

*(4/4)* இதன் மொத்த பங்கு 15. சதுரமாக 4 பங்கு பூமிக்குள்ளும், 8 பட்டையாக 5 பங்கு ஆவுடைக்குள்ளும் 6 பங்கு உச்சியிலும் இருக்கும்.

3. **சைவாதிலிங்கம் :** இது நான்கு வகைப்படும்.

(3/1) இதன் பாணம் 10 பங்கு. சதுர வடிவில் 3 பங்கு பூமிக்குள்ளும், 8 பட்டையாக 3 பங்கு ஆவுடைக்குள்ளும், 4 பங்கு உச்சியிலும் சிவ பாகமாக இருக்கும்.

(3/2) இதன் மொத்தம் பங்கு 13 ஆகும். இதன் அடி 4 பங்கு 4 பட்டை பூமிக்குள்ளும், நடு 4 பங்கு 8 பட்டை ஆவுடைக்குள்ளும் 5 பங்கு உச்சியிலும் இருக்கும்.

(3/3) இதன் 16 பங்கில் 5 பங்கு சதுர வடிவம் பூமிக்குள்ளும், நடு 5 பங்கு 8 பட்டை ஆவுடைக்குள்ளும், உச்சியில் 6 பங்கு விருத்தமாகவும் விளங்கும்.

(4/4) இதன் 19 பங்கில் அடியில் 4 பட்டை வடிவில் 6 பங்கு பூமிக்குள்ளும், நடுவில் 8 பட்டை வடிவில் 6 பங்கு ஆவுடைக்குள்ளும் உச்சியில் 7 பங்கு சிவபாகம்,

4. **ஸ்வஸ்திகலிங்கம் :-** இதனைப் பூசிக்க வேளாளர்களுக்கு நன்மைதரும். இது ஒன்பது பங்குடையது. அடி 2 பங்கு சதுர வடிவில் பூமிக்குள்ளும், நடு 3 பங்கு 8 பட்டையாக ஆவுடைக்குள்ளும், 4 பங்கு உச்சியில் சிவபாகமாகும்.

5. **ஸர்வோபத்ரலிங்கம் :-** இதனைப் பூசிக்க நான்கு வருணத்தவருக்கும் நன்மை தரும். இதன் 24 பங்கில் முழுவதும் விருத்த வடிவில் 8 பங்கு பூமிக்கு உள்ளும், 8 பங்கு ஆவுடைக்குள்ளும் உச்சியில் 8 ஆகவும் விளங்கும்.

சிவலிங்க சிரோவர்த்தனம் :




சிவலிங்க பாண திருமுடி அமைவு (சிரோவர்த்தனம்)
1) தாழங்குடைத்தோற்றம் 2) கோழிமுட்டை (குக்குடாண்டம்) 3. மும்முனைத்தோற்றம் (திரிபுரம்)
4) பாதிமதி (அர்த்தசந்திரன்)




சிவலிங்க (1) நின்ற, (2) இருந்த, (3) கிடந்த கோல அமைப்பு-

படம் 3

[நன்றி : த. ப. கழகம் தஞ்சாவூர். வெ. எண். 148]

இலட்சணோத்தாரம் :




சிவாலயங்களில்-சிவலிங்கத் திருமேனியில் (பாணத்தில்) காணும் பல முக அமைவுகள் :

படம் 4

[நன்றி : த. ப. கழகம் - தஞ்சாவூர் - வெ. எண் 148]

6. **ஸார்வதேசிக லிங்கம்** :- இதனைப் பூசிக்க நான்கு வருணத்தவரும் நலம் அடைவர். இதன் அளவு 12 பங்கு முழுவதும் விருத்தம். பூமிக்குள் 5 பங்கு ஆவுடைக்குள் 4 பங்கு உச்சியில் சிவபாகம் 3 பங்கு.

7. **தாராலிங்கம்**:- இது இருவகைப்படும். இதனைப் பூசிக்க நான்கு வருணத்தவருக்கும் நன்மை பெருகும்.

(7/1) இதன் 24 பங்கில், பூமிக்குள் 4 பட்டை வடிவில் 8 பங்கும், ஆவுடைக்குள் 8 பங்கும், உச்சியில் 8 பங்கும் சிவபாகமாகத் திகழும்.

(7/2) இதன் 24 பங்கில் சதுரமாக 8 பங்கு பூமிக்குள்ளும், நடுவில் 8 பட்டையாக 8 பங்கு ஆவுடைக்குள்ளும், உச்சிச் சிவபாகம் 16 பட்டையாக 8 பங்கில் விளங்கும்.

8. **முகலிங்கம்** ; இது நான்கு வருணத்தவரும் பூசிக்க நன்மை தரும். இதன் 24 பங்கில், அடி 8 பங்குச் சதுரமாகப் பூமிக்குள்ளும், 8 பட்டையாக 8 பங்கு ஆவுடைக்குள்ளும், உச்சி 8 பங்கு முகவடிவில் சிவபாகமாக விளங்கும்.

**ஸ்தூல மூலலிங்கம்**; பாணத்தின் உயரத்தை 21 பங்கு செய்து பூமிக்குள் 8 பங்கும் ஆவுடைக்குள் 7 பங்கும், உச்சி சிவபாகம் 6 பங்குமாக இருப்பது. இது அடி பருத்து நுனி சிறுத்துக் காணப்படுவது என்று காசிப சில்ப சாத்திரம் கூறுகிறது.

சிற்பரத்தினம் நூலில் - பூமிக்குள்ளும் ஆவுடைக்குள்ளும் மேலும் ஒரே அளவாய் இருப்பது. இதில் அடிபருத்து நடுபாகம் ( ஆவுடைக்குள் ) மட்டும் பருத்தது. உச்சிபாகம் மட்டும் பருத்தது என்று மூவகைப்படும். 1. அடி பருத்தது ( ஸ்தூலபாதம் ), 2. நடுபருத்தது ( ஸ்தூலமத்யமம் ), 3. தலை பருத்தது ( ஸ்தூலசிரஸ் ) என்பவையாகும்.

**பன்னிரு சோதிர்லிங்கங்கள் : ( படம் – 5 )**

இதுவரை பொதுவாக இலிங்கம் அமைக்கப்படும் பொருள்களையும், அமைக்க வேண்டிய அளவுகளையும் கண்டோம். இவைகளின் மேலாக பாரத தேசத்தில் எல்லோரும் போற்றி வழிபட்டுவருகின்ற பன்னிரு சோதிர்லிங்கத்தலங்களில் இராமேச்சரம் ஒன்று மட்டுமே நம் தமிழ் நாட்டிலும், திருப்பருப்பதமாகிய ஸ்ரீ சைலம் ஆந்திராவிலும் ஏனைய பத்தும் வட நாட்டிலும் உள்ளன.

இப்பன்னிரு சோதிர்லிங்கத் தலத்துள் விளங்கும் சிவலிங்கத் திருமேனி வடிவங்களில் தென்னாட்டில் உள்ள இராமேச்சரத்தில் மட்டுமே ஆகம சிற்ப முறையின் படி பிரம்பீடம், விஷ்ணுபீடம், சிவபாகம் ஆகிய முறையில் அமைந்திருக்கிறது. ஏனைய பதினொன்றும் சிறியதும் பெரியதுமாக தரைமட்டத்தில் இருக்க சுற்றிலும் தொட்டி அமைப்பும், மேடை அமைப்பும் கொண்டதாக விளங்குகின்றன.

| சோதிர்லிங்கத்தலங்கள் | | இலிங்கத்தின் பெயர்கள் |
|---|---|---|
| 1. சௌராஷ்டிர சோமநாதம் | — | சோமநாதர் |
| 2. ஸ்ரீ சைலம் ( திருப்பருப்பதம் ) | — | மல்லிகார்ச்சுனர் |
| 3. உஜ்ஜையினி | — | மாகாளேஸ்வரர் |
| 4. ஓங்காரம் | — | ஓங்காரேஸ்வரர் |
| 5. பரவிவைத்திய நாதம் | — | வைத்தியநாதர் |
| 6. பீமசங்கரம் | — | பீமசங்கரர் |
| 7. இராமேச்சரம் | — | இராமநாதர் |
| 8. நாகேசம் | — | நாகேசுவரர் |
| 9. வாரணாசி ( காசி ) | — | விசுவநாதர் |
| 10. திரியம்பகம் | — | திரியம்பகேசுவரர் |
| 11. கேதாரம் | — | கேதாரேசுவரர் |
| 12. குஸ்மேஸ்வரம் | — | குஸ்நுணேசுவரர் |

**தமிழ்நாட்டுத்தலங்கள் சிலவற்றில் சிறப்பாக உள்ள சிவலிங்கத் தோற்றம் : ( படம் – 6 )**

**1. திருநல்லூர் :**

திருவாவடுதுறை ஆதீனத்திற்தச் சொந்தமான o திருநல்லூர் திருக்கோயிலில் விளங்கும் சிவலிங்கமானது பல நிறங்களைக் காட்டவல்லதாகும். இக்கோயில் கோச்செங்கட் சோழனல் மாடக் கோயிலாக அமைக்கப்பட்டது. மூலத்தானத்தில் விளங்கும் பெருமான் நீண்ட சதுர ஆவுடையாரில் சுயம்புவாய் உள்ளார். இந்த அருட்குறி பாணம் கருங்கல் என்றோ உலோகம் என்றோ சொல்ல இயலாத கெட்டிப் பொருளால் ஆனது. பாணத்தில் காணப்படும் துளைகள் கைவிரல் நுழையும் அளவிற்குப் பல உள்ளன. தோற்றத்தில் செம்பு, பித்தளைபோல் தெரியும். இத்துடன் பகல் ஒன்றில் (தினமும்)

| | | | |
|---|---|---|---|
| முதல் | 1 – 6 | நாழிகையில் | – தாமிர நிறம் |
| அடுத்த | 6 – 12 | ,, | – இளஞ்சிவப்பு |
| ,, | 12 – 18 | ,, | – உருக்கிய தங்கம் |
| ,, | 18 – 24 | ,, | – நவரத்தினப் பச்சை |
| ,, | 24 – 30 | ,, | – இன்ன நிறம் எனக் கூற இயலாத தோற்றம். இவ் ஐந்து வண்ணங்களில் மாறிமாறித் தோன்றும். |

---

o கும்பகோணம் தஞ்சை பேருந்து மார்க்கத்தில் உள்ளது திருநல்லூர் ஸ்ரீ கலியாணசுந்தரேசுவரர் திருக்கோயிலாகும்; திருநாவுக்கரசருக்குச் சிவபெருமான் திருவடி சூட்டி அருளிய தலமாகும்.

இதனல் இம்மூர்த்திக்கு வழங்கும் திருப்பெயர்களில் பஞ்சவர்ணேசர் என்ற பெயரும் உண்டு. அத்துடன் பிறிதோர் சிறப்பு யாதெனில், பொதுவாக எல்லாச் சிவலிங்கத் திருமேனிகளும் ஆவுடையாரில் ஒரே பாணமாகத்தான் இருக்கும். ஆனல் இவ்வடிவில் வலப்பக்கம் 4 அங்குல உயரத்தில் வட்ட வடிவாய்ப் பிறிதோர் பாணம் இருக்கிறது.

**2. திருக்கீழ்வேளூர் கேடிலியப்பராகிய அட்சய லிங்கம் :**

இங்குள்ள மாடக் கோயிலில் உள்ள மூலலிங்கம் பெரியது. பாணத்தின் தோற்றம், இரண்டு அடுக்காய் அடியில் பருத்தும் அடுத்த மேற்பகுதி சற்று சிறுத்தும் இருக்கும். அத்துடன் பாணத்தின் முன்பக்கம் ( தத்புருஷம் ), சற்று பள்ளமாகத் தோன்றும்.

**3. திருக்குடந்தை நாகேச்சுவரர் :**

கும்பகோணம் நாகேச்சுரர் திருக்கோயிலில் உள்ள மூலலிங்க ஆவுடையார் சதுர வடிவில் மிகப் பெரியது. ஆனல் நடுவில் உள்ள பாணம் குக்குடாண்ட ( கோழிமுட்டை ) வடிவில் சிறியதாய் இருக்கிறது. இது சயனக் கோல லிங்கமாகும்.

**4. திருவையாறு :**

ஐயாறப்பர், பஞ்சநதீசுவரர், செம்பொற்சோதி என்றெல்லாம் சிறப்புடன் அழைக்கப்பெறும் இத்தல மூர்த்தியின் பாணம் மண் ( புற்று ) வடிவமாகும்.

**5. திருக்கருகாவூர் :**

"கருகாவூரில் கற்பகத்தை, காண்டற்கரிய பேரொளியை" எனத் தேவாரப் பாடலில் போற்றப் பெறும் இத்தலமூர்த்தியும் மண் ( பிருதிவி ) வடிவே ஆகும். இதில் முல்லைக்கொடி படர்ந்திருப்பதையும் காணலாம்.

**6. திருக்குடமூக்கு - கும்பேசுவரர் :**

ஆதி கும்பேசுவரர் எனச் சிறப்புடன் போற்றப் பெறும் இலிங்கம் கும்பலிங்கம் ஆகும். இதுவும் மண்வடிவேயாகும்.

**7. திருநெடுங்களம் :**

திருஞானசம்பந்தரின் இடர்களையும் திருப்பதிகத்தைப் பெற்ற இத்தலத்து மூலலிங்கம் மிகச் சிறியதாய், கருவறையில் ஒரு பக்கமாய் சுயம்பு வடிவில் உள்ளது.

**8. அமர்நாத் :**

நமது பரதகண்டத்தின் வடக்கில் உள்ள இமயமலையில் விளங்கும் அமர்நாத் ஒரு சிறந்த சிவத்தலம். இது காஷ்மீரத்திற்கு அப்பால் உள்ளது. மக்கள் குடியிருப்பு இல்லாத இவ்விடத்தில் உள்ள ஒரு குகையில் சொட்டும் பனிநீர் இலிங்க வடிவமாய்த் தோன்றி மறையும். இப்பனிலிங்கக் காட்சி ஒவ்வொரு ஆவணி மாதம் நிறைமதி நாளில் ( பௌர்ணமியில் ) உருவாகிப் பின் கரைந்துவிடும்.

கடல் மட்டத்திற்கு 14, 000 அடி உயரத்தில் உள்ள இச்சிவலிங்கத்தைக் காண கடுமையான பனிக்கட்டி மலையிடை மக்கள் யாத்திரையாகச் சென்று வரும் வழக்கம் ஒவ்வொரு ஆவணிமாதமும் நடைபெற்று வருகிறது.

**9. திருவானைக்கா : ( அப்புலிங்கம் )**

உமையம்மை காவிரி நீரால் பிடித்து வைத்துப் பூசிக்கப் பெற்ற செழுநீர்த் திரளான இவ்வப்புலிங்கம் கோச்செங்கட்சோழனால் கட்டப் பெற்ற முதல கோயிலில், தாழ்ந்த தரைமட்டத்திற்குக் கீழ் நீர்ஊற்றும் உள்ள இடத்தில் இருக்கிறது. காவிரி வெள்ளப் பெருக்கு, மழைக்காலம் இவற்றில் பெருமான் இருக்கும் இடம் நீர் ஊற்றெடுத்து அதிகப்பட அதனை இறைத்துப் பூசனை நிகழும்.

**10. திருக்காளத்தி : ( வாயுலிங்கம் )**

இச் சிவலிங்கத்தின் பாணம் எங்கும் உள்ள தோற்றம் போல் இராது. தீண்டற்கரிய வடிவில் உள்ளது. மூலத் தானத்தில் உள்ள விளக்கின் சுடர் ஆடிக்கொண்டே இருக்கும்.

**11. திருச்சக்கரப்பள்ளி:**

இத்தலத்து மூலலிங்க பாணம் நான்கு பட்டைவடிவில் வெல்லக்கட்டித் தோற்றத்தில் இருக்கிறது.

**12. மேற்த முகலிங்கத் தோற்றம்:**

இதன் நீர்வடிவுபாகம் (கோமுகம்) பார்வைக்கு அதன் வலப்பக்கமாக இருக்கும்.

**13 ஹரப்பா மொகஞ்சதாரோ:**

சிந்து சமவெளி நாகரிகத்தைக் காட்டும் புதையுண்டு தோன்றிய நகரத்தில் காணப்படும் ஒரு சிவலிங்கம்.




பன்னிரு சோதிர்லிங்கங்களின் வரை கோட்டுப்படம்.

படம் 5

[நன்றி ; த. ப. க. வெளியீடு எண் : 148 -சிவவடிவங்கள்]




பல தலங்களில் சிறப்பாக விளங்கும் சிவலிங்கத் திருமேனிகளின் தோற்றம்.

படம் 6

[நன்றி : த. ப க. வெளியீடு எண் : 148 – சிவவடிவங்கள் ]

**14. திருக்கயிலாயமலை:**

திருக்கயிலாயமலை சிவபிரான் திருவீற்றிருக்கும் திருமலையாகும், இது நாள் தோறும் திருக்கோயில்களில் திருநீற்று அபிஷேகம் செய்யப்பெற்ற சிவலிங்க வடிவை ஒத்ததாகும். இதனை o " பவள மால் வரையைப் பனிபடர்ந் தனையதோர் படரொளி தரு திருநீறும் " எனச் சிவவடிவத்தின் திருநீற்றுப் பூச்சைத் திருவிசைப்பா உரைக்கிறது.

**108. சிவலிங்கங்கள்:**

தஞ்சைமாவட்டம் பாபநாசம் தலத்தில் இராமபிரான் நிறுவி பூசித்த 108 சிவலிங்கங்கள் உள்ளன. இக்கோயிலின் கல்வெட்டு " திருமால்புரம் " என இத்தலத்தைக் குறிப்பிடுகிறது, இக்கோயிலின் மூல லிங்கத்திற்கு இராமலிங்கம் என்று பெயர், இந்த நூற்றெட்டு இலிங்கங்களுக்கும் x தனிப் பெயர்களும் உண்டு.

**28 சிவாகமலிங்கங்கள்:**

திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) என்னும் நடுநாட்டுத் தேவாரத் தலத்தில் விளங்கும் பல இலிங்கங்களுடன் தனியாக 28 ஆகமங்களின் பெயரால் இலிங்கங்கள் உள்ளன, (1. காமிகாகமலிங்கம் முதல் 12, வாதுளாகமலிங்கம் வரை)

**27 நட்சத்திரலிங்கம்:**

சென்னைமாநகரத்தைச் சார்ந்த திருஒற்றியூர் சிவாலயத்தில் 27 நட்சத் திரங்களின் பெயரால் இலிங்கங்கள் உள்ளன. (1 அசுவதிலிங்கம் முதல் இரேவதி இலிங்கம் வரை)

**தஞ்சைப் பெரியகோயில்:**

தஞ்சைப் பெருவுடையார்கோயிலின் திருமாளிகைப்பத்தியில் 27 x 4 என்ற வரிசையில் 108 இலிங்கங்கள் உள்ளன.

**சப்த விடங்க லிங்கத் தலங்கள்:**

● தியாகராசப்பெருமான் விளங்கும் ஏழுதலங்களான திருவாரூர், திருநள்ளாறு, திருநாகைக்காரோணம், திருக்காறுயில், திருக்கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு.

---

o *9 - ஆம் திருமுறை - திருவாலியமுதனுர் அருளிய திருவிசைப்பா, கோயில் - பவளமால் வரை - பண் : நட்டராகம் முதற்பாடல்*

x *த. ப. க. வெளியீடு எண்: - 148 - " சிவவடிவங்கள் " பக்கம் 84 - 91 முடிய.*

o *மேலும், திருவாடுதுறை, தஞ்சாவூர் போன்ற பல சிவத்தலங்களில் தியாகராசப் பெருமான் விளங்குகின்றார், இப்பெருமானது பெருமையினை அவ்வத் தலபுராணங்களில் காண்க,*

**பஞ்சபூதலிங்கத்தலங்கள் :**

திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, தில்லை.

இவ்வாறாக பல நிலைகளில் காணப்படும் சிவலிங்கத் திருமேனிகளின் நிலைகள் யாவும் இன்னும் விரித்துக் கொண்டே சிந்திக்கலாம். "பஞ்ச விம்சதி" என்றமுறையில் காரியசில்பசாத்திரம் – சுகாசனர் சிவமூர்த்தம் தொடங்கி இலிங்கோத்பவமூர்த்தியில் முடிவடைகிறது. செட்சிணாதுமத்விபத்தில் இலிங்கோத் பவமூர்த்தி முதலில் சொல்லப் படுகிறார். பேரொளிப்பிழம்பு பின்னர் இலிங்கவடி வாயிற்று; என்று இலிங்கபுராணம் கூறுகிறது.

**அரிய திருவுருவ இலிங்கம் : ( படம் - 7 )**

## ( குடிமல்லம பரசுராமேசுவரர் )

சைவ சமயத்தில் முழுமுதற் கடவுளாக வணங்கப் பெறும் சிவபெருமான் கோயில்களில் இலிங்கத் திருவுருவில் பொதுவாக மூலவராகத் தொழப்பட்டு வருகிறான். இலிங்கத் திருவுருவில் எந்த வடிவமும் அமைக்கப்படுவதில்லை. ஆகமங்களில் முகலிங்கம் என ஒரு வகை இலிங்கத் திருவுருவைப் பற்றி விதி உள்ளது. அதன்படி இலிங்கத்தில் ஒன்று முதல் ஐந்து முகங்களை அமைக்கலாம் மூன்று முகங்களைக் கொண்ட இலிங்கத் திருவுருவை மூலவராகத் தென்னார்க்காடு மாவட்டத்தில் திருவக்கரையிலும், நான்கு முகங்கள் உடைய இலிங்கத் திருவுருவை அதே மாவட்டத்தைச் சார்ந்த திருவதிகைக் கோயிலின் திருச்சுற்றிலும் காணலாம். இத்தகைய அரிய அமைப்பு தமிழகத்தில் வேறு எந்தக் கோயிலிலும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகம விதிகளுக்கு வேறுபட்டுச் சிவபெருமானின் முழுவடிவைக் கொண்ட அரிய இலிங்கத் திருவுரு குடிமல்லம் என்ற இடத்தில் உள்ளது.

ஆந்திர மாநிலத்தில் ரேணுகுண்டாவை அடுத்து இந்தச் சிற்றூர் உள்ளது. புகழ் மிக்க திருப்பதியினின்றும் இங்குச் செல்லப் பேருந்து வசதி உள்ளது. இங்குள்ள கோயில் சிறிய அளவிலானது. கருவறை வட்டவடிவமாக உள்ளது. இது கஜப்ருஷ்ட அமைப்பு – அதாவது தூங்கானை அமைப்பு அல்லது ஓங்கார வடிவம் என்று சொல்லப்படும், மூலவராக உள்ள வடிவம் பரசு என்ற படைக்கலத்தை உடைமையில் பரசுராமர் என்ற திருமாலாகவும், இந்த வடிவத்தின் காலடியில் இருப்பது பிரமாவாகவும் கருதப்பட்டு, இந்த வடிவம் திருமூர்த்தி என இப்பகுதியில் வணங்கப்பட்டு வருகிறது. இந்தக் கருத்து முற்றிலும் தவறானதாகும்.

இங்குள்ள இலிங்கத் திருவுருவிற்குக் கீழே பொதுவாகக் காணப்படும் ஆவுடையார் என்ற அமைப்பு இல்லை. ஏறத்தாழ ஐந்து அடி உயரம் உள்ள இந்த இலிங்கத் திருவுருவில் முன் பகுதியில் இரு கைகளுடன் சிவபெருமான் நின்ற நிலையில் உருவாக்கப்பட்டுள்ளான். இவனது வலக்கை தன் அன்பிற்கு உரிய மானின் பின் இரு கால்களையும் பிடித்துக்கொண்டிருக்கிறது. மான்

தலைகீழாக உள்ளது. இடக்கையில் குண்டிகை அமைக்கப்பட்டுள்ளது. பரசு என்ற படைக்கலம் அவனது தோள்மீது சாத்தப்பட்ட நிலையில் உள்ளது. தலையில் தலைப்பாகை போன்ற அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது. காதுகளில் குண்டலங்களும், தோள்களில் வாகுவலயங்களும், கைகளில் கடகங்களும், மார்பில் மாலையும் அமைக்கப்பட்டுள்ளன. மார்பில் முப்புரி நூல் உருவாக்கப் படவில்லை. ஆடை மிகவும் நுண்ணியதாக அமைக்கப்பட்டுள்ளதால், ஆண்குறி, தொடை ஆகியவை நன்ருகத் தெரிகின்றன. இந்த வடிவம் கலைத் திண்மையுடன் எழிலுற அமைந்துள்ளது கண்டு இன்புறத்தக்கது.

---

# *தேவகோஷ்ட அமைப்பும் - பரிவார மூர்த்தங்களும்

**கருப்பக்கிருக வெளிப்புறப் மையத்தில் தேவ கோஷ்டம் - கும்பபஞ்சரம் உயர அளவு லக்ஷண விபரம் : (படம் - 8)**

பாதவர்க்கத்தில் வேதிகைக்கு மேல் உத்திரம் கிழ்மட்டம் வரையில் உள்ள அளவு 36 பங்குடன் 15 வரிசை மானங்களாகிறது.

அவையாவன :-

| | | | |
|---|---|---|---|
| கால்வர்க்கம் | — | பங்கு | 6 |
| நாடிவர்க்கம் | — | ,, | 1 |
| கண்டவர்க்கம் | — | ,, | $\frac{3}{4}$ |
| குடவர்க்கம் | — | ,, | 2 |
| கண்டவர்க்கம் | — | ,, | 1 |
| பலகைவர்க்கம் | — | ,, | $2\frac{1}{2}$ |
| கண்டவர்க்கம் | — | ,, | $1\frac{1}{4}$ |
| உத்திரவர்க்கம் | — | ,, | $\frac{7}{8}$ |
| எழுதகவர்க்கம் | — | ,, | $\frac{7}{8}$ |
| கபோதகவர்க்கம் | — | ,, | 2 |
| யாளவர்க்கம் | — | ,, | $1\frac{1}{2}$ |
| வேதிகைவர்க்கம் | — | ,, | 4 |
| கெனம்வர்க்கம் | — | ,, | 3 |
| கேடம்வர்க்கம் | — | ,, | 6 |
| கலசம் | — | ,, | 3 ஆகபங்கு 36. |

தேவ கோஷ்டமானது கர்ப்பகிரக மையங்களில் - 3, அந்திராளம் பக்கமையம் - 2, ஆககோஷ்டம் - 5.

**பல திருக்கோயில்களில் காணும் - தேவ கோஷ்டங்களில் அமைக்கும் திருவுருவங்கள் : (படம் - 9)**

1. **கிழக்கு பார்த்த சிவாலயத்தில் :** முறையே 1. கணபதி, 2. தட்சிணாமூர்த்தி, 3. விஷ்ணு, அல்லது இலிங்கோத்பவர், 4. பிரமன், 5. துர்க்கை முதலியமூர்த்திகள்பிரதிட்டை செய்தல் வேண்டும்

---

x " ஆலயவிக்ரக நிர்மாண ஆயாதி சிற்ப ரகசியம் " பக்கம் 43, 44 45. ஆதீன வெளியீடாகிய " சோமாஸ்கந்தர் " நூலில் " திருக்கோயில் அமைப்பு " பற்றி பக்கம் 23-34 வரை விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

விமானமும் மனித உடல் அமைப்பும் ஒன்றே என்பதை விஸ்வகர்மீய வாஸ்து சாஸ்திரம் பின்வருமாறு கூறுகிறது.



DESIGN OF VIMANAM ILLUSTRATING HUMAN FORM.

படம் - 8

| | | |
|---|---|---|
| உபபீடம் | — | பாதம் |
| அதிஷ்டானம் | — | அடிமுழங்கால்முட்டி |
| பாடவர்க்கம் | — | கைகள் |
| கும்ப பஞ்சரம் | — | உதரம் (தொப்புள்) |
| பிரஸ்தாரம் | — | தோள் |
| கண்டம் | — | கழுத்து |
| சிகரம் | — | தலை, முகம் |
| உஷ்னீஷம் | — | முடிந்த தலைக்கேசம் |



படம் 7

குடிமல்லம்-ஆந்திரமாநிலம் ஸ்ரீ பரசுராமேஸ்வரர்
ஆலயத்தில் அரியதிருவுருவாகிய சிவலிங்கம்
காலம் கி. மு. 150

**2. கணபதி ஆலயத்தில் :** மேலே சொன்னபடியாகிலும் அல்லது முறையே 1. நிர்தன கணபதி, 2. தகஷிணைகணபதி, 3. விஷ்ணுகணபதி, 4. பிரமகணபதி, 5. துர்க்கை முதலிய மூர்த்திகளை பிரதிட்டை செய்தல் வேண்டும்.

**3. முருகன் ஆலயத்தில் :** முதலில் சொன்னபடியாகிலும் அல்லது முறையே 1. கணபதி, 2. சுப்பிரமணியர், 3. ஸ்கந்தர், 4. குகன், 5. துர்க்கை முதலிய மூர்த்திகளை பிரதிட்டை செய்தல் வேண்டும்.

**4. விஷ்ணு (திருமால்) ஆலயத்தில்** முறையே 1. விஷ்ணு, 2. கணபதி, 3. நரசிம்மமூர்த்தி, 4. சீனிவாசப் பெருமாள், 5. பரமபதமூர்த்தி, 6. துர்க்கை முதலிய மூர்த்திகளை பிரதிட்டை செய்தல் வேண்டும் அல்லது 1. கணபதி, 2. லெட்சுமி, 3. நாராயணமூர்த்தி, 4. நரசிம்மமூர்த்தி, 5. துர்க்கை, முதலிய மூர்த்திகளை பிரதிட்டை செய்தல் வேண்டும்.

5. விஷ்ணு ஆலயத்தில் விளங்கும் தாயார் சன்னிதிகளில் அஷ்டலட்சுமிகளைப் பிரதிட்டை செய்தல் வேண்டும்,

6. சிவாலயத்தில் விளங்கும் அம்பாள் ஆலயத்தில் அல்லது தனிஅம்பாள் ஆலயத்தில் 1. கணபதி, 2. சாமுண்டி, அல்லது கௌமாரி, 3. வைஷ்ணவி, 4. பிராமணி, 5. துர்க்கை, இம்மூர்த்திகளை பிரதிட்டை செய்தல் வேண்டும்.

7. மற்ற ஆலயங்களுக்கு சிவாலயத்தில் இருக்கின்ற பிரதிட்டைப்படி செய்தல் வேண்டும்.

**பிரகார பரிவார தேவதைகள் இருக்க வேண்டிய ஸ்தான விபரம் :**

ஆலய சுற்றுப் பிரகாரங்களில் இருக்க வேண்டிய தேவதைகள் சிவாலயங்களின் எதிரில் சன்னிதியைப் பார்த்தபடி வலதுபுறத்தில் சூரியனும் இடப்புறத்தில் சந்திரனும், அக்னி திக்கில் நவக்கிரகங்கள் - வீரபத்திரர் – காளி, தெற்குத் திக்கில் – சப்தமாதர்களும், நிருதி திக்கில் – கணபதியும், மேற்குத் திக்கில் – சிவலிங்கமும், வாயுதிக்கில் - முருகனும், வடக்குத் திக்கில் – ஈஸ்வரி, சரஸ்வதி, ஈசான்ய திக்கில் - பைரவமூர்த்தியும், கோமுகம் எதிரில் சண்டேசுவரர் முதலான தேவதா பிம்பங்களை பிரதிட்டை செய்தல் வேண்டும்,

கணபதி - முருகன் முதலிய பிரதான ஆலயங்களுக்கு பிரகாரங்களில் அந்தந்த சுவாமிகள் பரிவர்த்தனமாக இடங்களை மாற்றி அமைக்கவேண்டும்.

**மன்னர்கள் காலத்தில் இலிங்கோத்பவர் அமைப்பு முறை :**

சோழப்பேரரசன முதலாம் ஆதித்தன் காலம்வரை கருவறையின் பின் சுவரில் அர்த்தநாரீஸ்வரா திருமேனி அமைக்கப்பட்டது, முதற் பராந்தக சோழன் காலம் முதல் கருவறையின் மேற்கு மாடத்தில் இலிங்கோத்பவர் திருமேனி வைக்கப்பட்டது.

விஷ்ணு ஆலயங்களில் அக்னி திக்கில் ஆஞ்சநேயரும், வலது புறத்தில் – தாயாரும், நம்மாழ்வாரும், இடது புறத்தில் - ஆண்டாள், உடையவர், ஸ்ரீராமர் முதலிய மூர்த்திகளும், பாகசாலையில் – மடப்பள்ளி நாச்சியார் முதலிய தேவதாமூர்த்தங்களை பிரதிட்டை செய்தல் வேண்டும்.

**1. தச தாளப்படிமங்கள் :**

**உத்தம தச தாளம் :**

பிரமன், விஷ்ணு
மகேசுவரன்,
அர்த்தநாரீஸ்வரர்,
தத்தாத்திரேயர்,
புத்தர், அருகன்,
(ஆர்ஹதர்), வாசுதேவன்,
சாயுஜ்யம் பெற்ற
அடியார் படிமங்கள்

**மத்திம தச தாளம் :**

உமை, லட்சுமி, சரசுவதி,
துர்க்கை, பூதேவி,
ஜேஷ்டா, சப்தமாதர்,
இராமன், சாருப்யம்
பெற்ற அடியார் படிமங்கள்

**அதம தச தாளம் :**

இந்திரன், அக்னி,
வருணன், அசுவினிதேவர்,
ஸ்கந்தன், வீரபத்திரன்,
க்ஷேத்திர பாலகர், ஈசானன்,
சாஸ்தா, சூரியன், சந்திரன்,
யமன், வாயு, சண்டேசுவரர்,
துவாதச ஆதித்யர், ஏகாதச
ருத்திரர், மகரிஷிகள், பிருகு,
மார்க்கண்டேயர், ஆர்யன்,
லட்சுமணன்,
சாமிப்யம் பெற்ற அடியார் படிமங்கள்

**2. நவ தாளப்படிமங்கள் :**

**உத்தம நவ தாளம் ;**

தேவர்களும் அவர்தம் தேவி
யர்களும், அஷ்டமூர்த்திகள்,
அஷ்டவசுக்கள், லோக
பாலகர்கள், நிருதி, மகாகோடி,
குபேரன், மன்மதன், நாகேந்
திரன், கருடன், வசிஷ்ட்டன்,
விசுவாமித்திரர், பார்கவன்,
குரு, சுக்கிரன், சனி, ராகு,
செவ்வாய், சாலோக்யம் பெற்ற
அடியார் படிமங்கள்

**மத்திம நவ தாளம் :**

அஸ்திரமூர்த்திகள், யக்ஷர்கள்,
அப்ஸரசுகள், மருத்கணங்கள்,
வித்யாதரகணங்கள்.

**அதம நவ தாளம் :**

அசுரர்கள், சித்தர்கள்,
கந்தருவர்கள், பித்ருக்கள்

**3. அஷ்டதாள படிமங்கள் :**

மனிதப்படிமங்கள், காஸ்யபர்,
பிருகு, ஆழ்வார்கள்

**4. சப்த தாளப் படிமங்கள் :**

மனிதவடிவங்கள், ரிஷிகள்.
மத்திம சப்ததாளம் - அகத்
தியர், அனுமான்

5. ஷட்தாளப் படிமங்கள் :
குள்ளர்கள்

6. பஞ்சதாளப் படிமங்கள் :
உத்தமபஞ்சதாளத்தில் – விநாயகர், பாலஸ்கந்தர், வாமனமூர்த்தி, மத்திம தச தாளத்தில் – பூதங்கள், அதம தசதாளத்தில் – பாலகிருஷ்ணன்.

7. சதுஸ்தாளப் படிமங்கள்:
பாலர், வானரங்கள்

8. திரிதாளப் படிமங்கள் :
கின்னரர், கிம்புருடர்

9. துவிதாளப் படிமங்கள் :
மச்சவதார மூர்த்தம்

10. ஏகதாளப் படிமங்கள் :
ஆமை, முட்டைகூர்மா வதாரம், கபந்தங்கள் (தலையில்லா முண்டங்கள்)

**சகளத் திருமேனியின் பொது இலக்கணம்:**

படிமங்கள் தெய்வக் கலையோடு விளங்க நான்கு சிறந்த அம்சங்களைச் சிற்பிகள் கருத்திற் கொண்டு கடவுட் படிமங்களை இயற்றுதல் வேண்டும். அவை முறையே உடல், முகம், கண், மூக்கு, நான்கினைப் பற்றியதாகும்.

**உடல்:**

அவயவங்கள் உருண்டு திரண்டு, நீண்டும், அகன்றும், முழுமையான வளர்ச்சியுடையதாயும், சதைப்பற்றுடையதாயும் அமைதல் வேண்டும்.

**முகம்:**

சிருங்கார ரசமும், சாந்த பாவமும், அழகும் முழுமையும் கொண்டு மலர்ச்சியுடையதாய் முகம் விளங்கவேண்டும்.

**கண்:**

அகன்று, நீண்டு மலர் போன்று, கண்கள் அமைதல் வேண்டும்.

**மூக்கு:**

நேரியதாயும் எடுப்பாகவும் மூக்கு அமைதல் வேண்டும்.

இந்நான்கு கூறுகளும் ஒரு படிமத்தில் செம்மையாக அமையின் அது வியத்தகு அழகுப் படிமமாக விளங்கும்,

### *மத்திம தசதாளத்தில் அமையும் பெண்மானம் படிமத்தில் காணும் உறுப்புக்களும் சாயல்களும் :

| உறுப்புகள் | | சாயல்கள் |
|---|---|---|
| 1. சுருண்ட தலைமுடி | — | வண்டுக்கூட்டம், கூந்தற்பனை |
| 2. தலைப்பின்னல் | — | கரும்பாம்பு – வண்டுகளின் வரிசை |

o மத்திம தசதாளத்தில் அமையும் படிமங்கள் உமை, லட்சுமி, சரசுவதி, துர்க்கை, பூதேவி, ஜேஷ்டா தேவி, சப்தமாதர், அடியார் படிமங்கள் (சாரூப்யம்), இராமர் – '' சிற்பச்செந்நூல் '' பக்கம் 230 & 231.

3. நெற்றி — பிறை - அட்டமிப்பிறை
4. புருவம் — வில்
5. கண்கள் — குவளைமலர், தாமரை, அம்பு, வேல்,
— கெண்டை மீன்.
6. மூக்கு — எள்ளுப்பூ
7. மூக்குப்புடை — பாகல் விதை
8. முகம் — முழுமதி, மலர்ந்ததாமரை, முட்டை வடிவம், எள்ளின் வடிவம், மாங்காய் வடிவம்.
9. காது — சங்கு, கத்தரி, விதை நீங்கிய (மொச்சை) தோலுறை
10. உதடு — கோவைப்பழம் (நிறம்)
11. பல் — முத்து, முல்லையரும்பு
12. முகவாய் — முத்துச்சிப்பி
13. கழுத்து — வலம்புரிச்சங்கு, கமுகு
14. மேற்கையும் முன் கையும் சேர்ந்தால் — பனங்கிழங்கு, பசுவின்வால், பனை
15. கைவிரல் — கனிற்றுமீன், காந்தள்மலர்
16. நகம் — கிளிமூக்கு, பிறைமதி
17. ஸ்தனம் — பூச்செண்டு, நீர்க்குமிழி, குறும்பை, சொற் கோட்டான் காய், தாமரைமொக்கு, இளநீர், யானை மத்தகம், செப்பு
18. உடல் — சிங்கமுகம்
19. முலைக்கண் — நவமணி
20. வயிறு — ஆலிலை
21. நாபி — நீர்ச்சுழி
22. வயிற்றின் மடிப்பு — அலை
23. இடுப்பு — துடி, வச்சிரப்படை
24. நிதம்பம் (அல்குல்) — அரசிலை, பாம்பின் படம்
25. ஜகனம் (புட்டம், குண்டி) — மணல்மேடு
26. தொடை — வாழைத்தண்டு, யானைத்துதிக்கை
27. முழங்கால் — நண்டு
28. கணைக்கால் — விரால்மீன், அம்பருத்தூணி
29. பாதம் — ஆமை



படம் - 9

துவைதள விமானம் அமைப்பில் விளங்கும் திருக்கோயில் அமைப்பு.



படம் - 10

சிவாலயங்களில் கருப்பக்கிரகத்தின் மேற்கு கோஷ்ட மாடத்தில் விளங்கும் இலிங்கோத்பவர் திருமேனியின் வரைகோட்டுப் படம்.

[நன்றி : த. ப. கழகம், தஞ்சாவூர் - வெ. எண். 148]

30. கால்விரல் — அட்டை

31. நடை — அன்னம்

32. முழுத்தோற்றம் — மயில்

*** மேற்கு கோஷ்ட மாடத்தில் இலிங்கோத்பவர் :** ( படம் - 10 )

சிவாலயங்களில் கர்ப்பக்கிருஹத்தின் பச்சிம பாகத்தில் லிங்கோத்பவ மூர்த்தியின் பிம்பம் இருக்கும். ஒவ்வோர் ஆலயத்திலும் இருப்பது ஸம்பிர தாயம். கர்ப்பக் கிருகத்திற்கு வெளியில் பிரதக்ஷிணம் பண்ணினால் தக்ஷி ணத்தில் தக்ஷிணாமூர்த்தி இருப்பார். பச்சிம திக்கில் கர்ப்பக்கிருகத்துக்கு நேர் பின்பக்கத்தில் ஒரு மஹாலிங்கம் இருக்கும். அதற்குள் தீர்க்க விருத்தமாக அதாவது அண்டாகாரமாக ( **oval** ) உள்ள ஒரு இடத்தில் பரமேசுவர ஸ்வரூபம் மான் மழுவுடன் இருக்கும். சிரஸு மாத்திரம் தீர்க்க விருத்தமாக இருக்கும். அந்த ஸ்வரூபத்தில் சிரஸும் தெரியாது. பாதமும் தெரியாது. பாக்கி எல்லாம் லிங்கத்துக்குள் அந்தர்பாவமாக இருக்கும்.

இலிங்கோத்பவ மூர்த்தி என்பது பரமேச்வரனுடைய அறுபத்து நான்கு மூர்த்திகளுக்குள் ஒன்று. விருஷபாரூடர், அர்த்த நாரீச்வரர், ஹரி ஹரர், நடராஜமூர்த்தி, பைரவர், தக்ஷிணாமூர்த்தி, ஸோமசேகர மூர்த்தி, பிக்ஷாடனர், ஊர்த்வ நடனர், ஜலந்தராஸுர ஸம்ஹாரர், காலஸம்ஹாரர் இப்படி அறுபத்து நான்கு மூர்த்திகள் உண்டு. அவைகளுக்குள் ஒன்று லிங்கோத்பவ மூர்த்தி.

அந்த மூர்த்திதான் சிவாலயத்திலுள்ள லிங்கத்துக்கு நேர் மேற்கே பின் புறம் தீர்க்க விருத்தமாகக் காணப்படும். அதற்குக் கீழே ஒரு வராஹ மூர்த்தி இருக்கும் ; மேலே ஹம்ஸரூப மூர்த்தி ஒன்று இருக்கும்.

ஸ்ரீ ருத்திராபிஷேகம் பண்ணுவதற்கு முன்பு ஒரு தியான சுலோகம் சொல்லிவிட்டு அப்புறந்தான் அபிஷேகம் பண்ணுவது வழக்கம்.

* आपातालनभःस्थलान्तभुवनब्रह्माण्डमाविःस्फुर-
ज्ज्योतिःस्फाटिकलिङ्गमौलिविलसत्पूर्णेन्दुवान्तामृतैः ।
अस्तोकाप्लुतमेकमीशमनिशं रुद्रानुवाकाञ्जपन्
ध्यायेदीप्सितसिद्धयेऽद्रुतपदं विप्रोऽभिषिञ्चेच्छिवम् ॥

---

x '' நமது ஆலயங்களும் மூர்த்திகளும் ''

" ஆபா தாலநப: ஸ்தாலந்த புவந ப்ரஹ்மாண்ட மாவி: ஸ்புரத்
ஜ்யோதி: ஸ்பாடிக லிங்க மௌலி விலஸத் பூர்ணேந்து வாந்தாம் ருதை l
அஸ்தோ காப்லுதம் ஏகம் ஈசம் அநிசம் ருத்ராவாகம் ஜபன்
த்யாயேத் ஈப்ஸித சித்தயே அத்ருத பதம் விப்ரோபிஷிஞ் சேத்சிவம் "ll

**இந்த சுலோகத்தில் என்ன சொல்லி யிருக்கிறது:** பாதாளம் முதல் ஆகாச பரியந்தம் எல்லையில்லாத அநந்த ஸ்வரூபமாக பிரகாசிக்கின்ற ஸ்படிக லிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணுகிறேன் என்று சொல்லியிருக்கிறது. ஸ்படிக லிங்கம் நிர்லிப்தமானது. அதற்கு ஒரு வர்ணமும் சொல்ல முடியாது. சுத்தமானது. எந்த வஸ்துவை அதில் வைக்கிறோமோ அதனுடைய பரிணாமத்தை அது அடையும். குணதோஷம் இல்லாதது அது. ஞானம் எப்படி பரிசுத்தமாக இருக்கிறதோ அப்படி அந்த ஸ்படிக லிங்கம் இருக்கிறது, அதன்மேல் பச்சையை வைத்தால் பச்சையாகத் தோன்றும், சிவப்பை வைத்தால் சிவப்பாகத் தோன்றும். அது நிர் விகாரமானது. பரப் பிரம்ம ஸ்வரூபம் நிர்விகாரமாக இருந்தாலும் நம்முடைய மனோ பாவத்தை எப்படி வைக்கிறோமோ அப்படித் தோன்றுமென்பதற்கு திருஷ்டாந்தமாக அந்த ஸ்படிக லிங்கம் இருக்கிறது. அது எதையும் மறைக்காது. அதற்கு அப்புறம் உள்ள வஸ்துக்களையும் அதன் வழியாகப் பார்க்கலாம். ஞான ஸ்வரூபமானது. ஒன்றையும் வைக்காமற் போனால் சுத்தமாக இருக்கும். நிர்க்குணமான பரமாத்ம வஸ்துவுக்கு அது திருஷ்டாந்தம். நினைக்கிற, ரூபமாக அது ஆகும்.

அதன் சிரஸில் பூர்ணசந்திரகலை இருக்கிறது. ஸஹஸ்ரார கமலத்தில் சந்திர மண்டலத்தில் ஜ்யோதி ஸ்வரூபத்தைத் தியானம் பண்ணுகிறவர்களுக்கு சந்திர கலையிலிருந்து அமிருதம் ஒழுகுகிறது, அதனால் பரமானந்தம் உண்டாகிறது. ஸமஸ்த பிரபஞ்ச ஸ்வரூபம் அந்த ஜ்யோதி ஸ்வரூபமானது லிங்கந்தான். ஆகையால், அது குளிர்ந்தால் லோகமெல்லாம் குளிரும். ஸர்வ காலங்களிலும் ருத்திர அபிஷேகத்துக்கு முன்பு இந்த சுலோகத்தைச் சொல்லித் தியானம் பண்ணவேண்டும்.

சகலப் பிரம்மாண்டமும் சிவலிங்கம். அபிஷேக காலங்களில் இப்படித் தியானம் பண்ணவேண்டும். ஸ்ரீ ருத்திரத்தில் அதுதான் சொல்லப்பட்டிருக்கிறது, ஸர்வ பதார்த்தங்களும், நல்லது கெட்டது எல்லாம் – பகவத் ஸ்வரூபம் என்று தான் ஸ்ரீ ருத்திரம் சொல்லுகிறது. பரம மதுரமாகவும் சீதளமாகவும் உள்ள சந்திர மண்டலத்தைத் தியானம் பண்ணவேண்டும்; பின்பு அபிஷேகம் செய்ய வேண்டும். பதங்களை வேகமில்லாமல் சொல்லவேண்டும். துருதம் என்பது வேகம். அருத காலம் என்பதைத்தான் துரிதகாலம் என்று தப்பாகச் சொல்லுகிறார்கள்.

o **இலிங்கோத்பவ மூர்த்தியின்** பெருமை அந்தச் சுலோகத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. ஸ்படிகம் பரிசுத்தத்தைக் காட்டுகிறது. எப்படி எப்படிப் பார்க்கிறோமோ அப்படி அப்படி வந்து அநுக்கிரஹம் பண்ணுவதை அது குறிக் கிறது. ஜகத்முடிய அந்த ஸ்வரூபந்தான். விருத்தத்துக்கு அதாவது வட்டமான ஸ்வரூபத்துக்கு அடி முடியில்லை; ஆதியில்லை, அந்தமுமில்லை, மற்றவைகளுக் குண்டு. சதுரத்திற்கு உண்டு, இந்த தத்துவிளக்கிற்கு இருக்கிறது. ஆத்யந்த மில்லாத வஸ்து என்பதை லிங்காகாரம் காட்டுகிறது.

அந்த மாதிரி மஹாலிங்கத்தை அபிஷேகம் பண்ணித் தியானம் பண்ணு கிறபோது ஏதாவது ஓர் ஆகாரம் தெரிந்தால்தான் மனதிற்கு ஆநந்தம் உண்டாகிறது. யாராவது பந்துவை நினைக்கிறோம், அவருடைய ஆகாரத்தையும் பார்த்தால் ஸந்தோஷம் உண்டாகிறது. ஒரு மூர்த்திகரத்தோடு அநுக்கிரஹம் பண்ணினுல் மனதுக்கு சந்தோஷமாக இருக்கும். ஞானிகளுக்கு பரமாத்ம ஸ்வரூபத்தின் உண்மை தெரியும், ஆகாரத்தைப் பார்த்துப் பார்த்து ஆனந்தம் அநுபவிக்கிறவர்களுக்கு அப்படிக் கண்டால்தான் ஆனந்தம் உண்டாகும். அதற்காகத்தான் இலிங்கோத்பவ மூர்த்தியாகப் பகவான் இருக்கிருர்.

பல சிவாலயங்களில் இலிங்கோத்பவ மூர்த்தி கர்ப்ப கிருஹத்துக்குப் பின்பு இருக்கிருர். சில இடங்களில் அந்த இடங்களில் மஹாவிஷ்ணு இருப்ப துண்டு. இலிங்கோத்பவத்திலும் மஹாவிஷ்ணு வராஹமாக இருக்கிருர்.

அவர் ஜ்யோதிஸ்வரூபமாக நின்ருர். அந்த ஸ்வரூபம் (இலிங்கோத்பவம்) ஏற்பட்ட ஸ்தலம் அருணுசலம். ஜ்யோதிர்மயமாக இன்றைக்கும் தீபம் ஏற் பட்டிருக்கிறது.

அப்படி ஜ்யோதி ஸ்வரூபமாகப் பரமேசுவரன் நின்ற பொழுது விஷ்ணு பாதத்தைப் பார்க்கப் பாதாளத்துக்குப் போனுர். பூமியைக் கல்லும் ஸ்வபாவம் வராஹத்திற்கு உண்டு. அந்த ரூபத்தை எடுத்துக்கொண்டார்.

பிரம்மா ஹம்ஸ ஸ்வரூப்மானுர். பக்ஷிக்குப் பறப்பது ஸ்வபாவம். இரண்டு பேருக்கும் தேடிப்போனவை அகப்படவில்லை. ஹம்ஸம் வந்தது. 'நான் கண்டுவிட்டேன்' என்று பொய் சொல்லியது. அதனுல் பிரம்மாவுக்கு பிரத்தியேகமாகப் பூஜை இல்லாமற் போய்விட்டது. பரிவாரமாகமட்டும் வைத்துப் பூஜை செய்வதுண்டு. அந்தப் பிரம்மாவுக்கு அநுகூலமாகத் தாழம்பூ இருந்து பொய் சொல்லிற்று. அதனுல் அது சிவனுக்குக் கூடாதெனறேற் பட்டது. புராண ஐதிஹ்யத்தில் இப்படி இருக்கிறது. பிரம்மா ஹம்ஸரூபமாகப் போயும் சிரஸ் அகப்படவில்லை. விஷ்ணு வராஹரூபமாகப் போயும் பாதம்

---

o *இலங்கையில் உள்ள சிவாலயங்களில் மகா சிவராத்திரியின் இலிங் கோத்பவகாலத்தில் (இரண்டாம் காலம்) மேற்கு கோஷ்டத்தில் விளங்கும் இலிங்கோத்பவமூர்த்திக்கு சிறப்பு அபிஷேக ஆராதனை செய்யப்படும் எனப் பெரியோர்கள் கூறுகின்றனர்,*

அகப்படவில்லை. அத்யந்த ஹீனமானவர் அவர் என்பதுநான் இதனுல் அறிந்து கொள்ளவேண்டியது. அப்படி உள்ளதைக் காட்டுவதற்காக இந்த விஷயம் அருணுசல க்ஷேத்திரத்தில் ஏற்பட்டது.

அருணசல விஷயம் லிங்கோத்பவத்துக்காக ஆவிர்ப்பவித்தது. அருண ஜ்யோதிஸுக்கு அடையாளமாக பர்வதமும் ஜ்யோதிஸுக்குத் தீபமும் ஏற் பட்டிருக்கின்றன. அந்தப் பரமாத்மாவை கேவலம் ஆத்ரயந்த ரஹிதரென்றும் ஜ்யோதி ஸ்வரூபரென்றும் தியானிக்க வேண்டும். ஸ்படிக லிங்கம் ஸ்வயம் ஜ்யோதிஸுக்கு அடையாளம். அந்த ஜ்யோதி ஸ்வரூபத்தைத் தெரிவிக்கத் தான் கார்த்திகை தீபம் ஏற்பட்டிருக்கிறது.

**இலிங்கோத்பவர் சிற்பத்தில் மூன்று வகைகள் :** ( படம் - 11 )

**" முதல் வகை "** இலிங்கத்தின் நடுவில் இறைவனுகிய சிவன் நின்ற நிலையில் இருப்பார். பாதத்திற்குக் கீழே திருமால் பன்றி உருவத்தில் கீழே போகும் நிலையிலும் பிரம்மா அன்ன உருவத்தில் மேலே செல்வதாகவும் காட்டப்பட்டிருக்கும்.

**" இரண்டாம் வகை "** மேற்சொன்ன அமைப்பில் சிறுமாறுதல் செய்யப் படும். பிரம்மா அன்னப்பறவையின் மீது அமர்ந்து பறந்து செல்கின்ற நிலையில் இருப்பார். அத்துடன் இலிங்கத்தின் மேற்பகுதியில் தாழம்பூ காட்டப் பட்டிருக்கும். இறைவனுகிய சிவனைச் சுற்றி ( ஓவல் பகுதி ) திப்பிழம்புகள் காட்டப்பட்டிருக்கும்.

**" மூன்றும் வகை "** மேற்சொன்ன அமைப்போடு இலிங்கத்தின் இரு புறமும் பிரமாவும், திருமாலும் நின்ற நிலையில் ( முழு உருவத்தோடு ) கைகளைக் கூப்பி தொழுகின்ற நிலையில் இருக்கும்.

இவை தவிர சிற்பங்களில் பலவகை மாற்றங்களோடு இலிங்கோத்பவர் திருமேனி அமைந்துள்ளது.

**ˣ மரபுநிலை :**

சிவபெருமானது மகேசுரை வடிவங்கள் இருபத்தைந்தில் ஒன்று இலிங்கோற்பவமூர்த்தி. ஆகமங்களின் படி இலிங்கத்தின் நடுவில் சிவபெருமான் அமைக்கப்பட வேண்டும். இதன்மேல் பகுதியில் பிரமா அன்னப் பறவையாகவும், கீழ்ப்பகுதியில் திருமால் பன்றியாகவும் உருவாக்கப்படவேண்டும், இவ்வடிவின இருபுறமும் பிரமனும் திருமாலும் நான்கு கைகளுடனும் தமக்குரிய படைக் கலங்களுடனும் கைகளைக் கூப்பிய நிலையில் காணப்படவேண்டும்.

சிவாலயங்களில் கருவறைக்குப் பின்புறச் சுவரில் கி. பி. 871 முதல் 907 வரை சோழப் பேரரசனுக விளங்கிய முதலாம் ஆதித்த சோழன் காலத்திலிருந்து இலிங்கோற்பவ வடிவை அமைக்கும் மரபு பின்பற்றப்பட்டு வருகிறது. இலிங்கத்தின் நடுவில் சிவபெருமானும், மேல்பகுதியில் பிரமா

---

x " தென்னிந்திய சிற்பங்களும் கோயில்களும் " பக்கம் 59 - 71.

அன்னமாகவும், கீழ்ப்பகுதியில் திருமால் பன்றியாகவும் உள்ள இலிங்கோற்பவ வடிவம்தான் பொதுவாகக் காணப்படுகிறது. ஒருசில கோயில்களில், எடுத்துக் காட்டாகத் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த திருவாலீசுவரம் கோயில் போன்றவற்றில் மேலே குறிப்பிட்ட வடிவத்துடன் பிரமனும் திருமாலும் இருபுறமும் அமைக்கப்பட்டுள்ளனர். இவற்றினின்றும் வேறுபட்ட அரிய திருஉருவம் திருவண்ணாமலையில் உள்ளது.

**திருவண்ணாமலைக் கோயில் :**

இங்குள்ள கோயிலின் இரண்டாவது திருச்சுற்றில் மேலைக் கோபுரத்தை அடுத்துள்ள சிறிய திருமுன்னில் இந்த அரியவடிவம் காணப்படுகிறது. இலிங்கத்தின் மேல் பகுதியில் அன்னமும், கீழ்ப் பகுதியில் பன்றியும் எல்லா இடங்களிலும் உள்ளது போன்றுதான் அமைக்கப்பட்டுள்ளன, நடுவில் சிவபெருமான் தனியாக நின்ற நிலையில் காணப்படுவதற்குப் பதிலாக அன்னை பராசக்தியுடனும் தன் ஊர்தியான காளையுடனும் உருவாக்கப்பட்டுள்ளான்.

**அருட்சக்தியுடன் :**

அடியார்களுக்கு அருள் பாலிக்குபோது இறைவன் தன் சக்தியுடன் விடைமீது தோன்றுவதாகத்தான் கூறப்படுகிறது, எடுத்துக்காட்டாக, திருநீலகண்ட நாயனாரை இறைவன் ஆட்கொண்டபோது "துன்னிய விசும்பினூடு துணையுடன் விடை மேற்கண்டார்" என்றும், இயற்பகை நாயனாரை ஆட்கொண்டபோது "தன் துணையுடனே வானில் தலைவனை விடைமேற்கண்டார்" என்றும் சேக்கிழார் பெருமான் தம் "திருத்தொண்டர் புராணத்தில்" குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீவில்லிபுத்தூரார் தம் "பாரதத்தில்"

"ஓர்
பச்சை மயில் பாதியுடனே
துய்யவிடைமிது ஒரு செழுஞ் சுடர்நிகர்க்கவரு
தூயவன் எதிர்ந்த அளவிலே"

*(ஆரணிய பருவம் - 113)*

என அருச்சுனனுக்கு அருள்புரியச் சிவபெருமான் தன்துணையுடன் விடைமீது தோன்றியதாகக் கூறியுள்ளார். இதனின்றும் இறைவன் அடியார்களுக்கு அருள் செய்யும் போது அருட்சக்தியாகிய அன்னையுடன் அறக்கடவுளாகிய விடைமீது தோன்றுகிறான் என்பது தெளிவாகிறது.

தம் பிழையை உணர்ந்த திருமாலும் பிரமனும் தன்னை வணங்கிய போது அவர்களுக்கு அருளும் இந்த வடிவில் இறைவனுடன் அன்னையையும் விடையயும் அமைத்தது சாலப் பொருத்தமே.

**வடநாட்டில் :** (படம் - 12)

வடநாட்டில் - சிவன் அமர்ந்தும் பிரமனும், திருமாலும் வணங்கி வணங்கிய நிலையினையும் காணலாம், பாணத்தில் சுடர்கள் காட்டப்பட்டிருக்கும்.

---

# மகேசுவர வடிவங்கள் - முத்திரைகள் - ஆயுதங்கள் - மகுடமுடிகள் - ஆசனங்கள் அணிகலன்கள்

[ இப்பகுதியில் சுருக்கமாகப் பெயர்கள் மட்டும் கொடுக்கப்பட்டுள்ளன ]

**மகேசுவர வடிவங்கள் - (64 சிவ வடிவங்கள்) :**
*( சிவபராக்கிரமம் நூலில் )*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | இலிங்க | மூர்த்தி | 23 | கஜாயுத்த | மூர்த்தி |
| 2 | இலிங்கோத்பவ | மூர்த்தி | 24 | ஜ்வராபக்ன | ,, |
| 3 | முகலிங்க | ,, | 25 | ஸார்த்தூலஹர | ,, |
| 4 | சதாசிவ | ,, | 26 | பாசுபத | ,, |
| 5 | மகாசதாசிவ | ,, | 27 | சுங்காள | ,, |
| 6 | உமாமகேச | ,, | 28 | கேசவார்த்த | ,, |
| 7 | சுகாசன | ,, | 29 | பிட்சாடன | ,, |
| 8 | உமேச | ,, | 30 | சிம்ஹக்ன | ,, |
| 9 | சோமாஸ்கந்த | ,, | 31 | சண்டேசானுக்ரஹ | ,, |
| 10 | சந்திர சேகர | ,, | 32 | தட்சிணு | ,, |
| 11 | விருஷபாருட | ,, | 33 | யோகதட்சிணு | ,, |
| 12 | விருஷபாந்திக | ,, | 34 | வீணுதர தட்சிணு | ,, |
| 13 | புஜங்கலளித | ,, | 35 | காலாந்தக | ,, |
| 14 | புஜங்கத்ராஸ | ,, | 36 | காமதகன | ,, |
| 15 | சந்தியா நிருத்த | ,, | 37 | லகுளேஸ்வர | ,, |
| 16 | சதாநிருத்த | ,, | 38 | பைரவ | ,, |
| 17 | சண்டதாண்டவ | ,, | 39 | ஆபதுத்தாரண | ,, |
| 18 | கங்காதர | ,, | 40 | வடுக | ,, |
| 19 | கங்கா விசர்ஜன | ,, | 41 | க்ஷேத்திரபால | ,, |
| 20 | திரிபுராந்தக | ,, | 42 | வீரபத்ர | ,, |
| 21 | கல்யாண சுந்தர | ,, | 43 | அகோர | ,, |
| 22 | அர்த்தநாரிஸ்வர | ,, | 44 | தக்ஷயக்ஞஹத | ,, |

---

x 64, - சிவமூர்த்தங்கள், 25 - பஞ்சவிம்சதி மூர்த்தங்களின் ஸ்லோகம், ஆதீன வெளியீடாகிய "சோமாஸ்கந்தர்" "நூலில் காண்க - S. நாராயணசுவாமி, எம். ஏ., பி. எட்., வெ. எண் : - 407

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 45 | கிராத | மூர்த்தி | 55 | கௌரிலீலாசமன்வித | ,, |
| 46 | குருமூர்த்தி | ,, | 56 | விஷாபஹரண | ,, |
| 47 | அச்வாரூட | ,, | 57 | கருடாந்திக | ,, |
| 48 | கஜாந்திக | ,, | 58 | பிரம்ம சிரஸ்சேத | ,, |
| 49 | ஜலந்தரவத | ,, | 59 | கூர்மஸம்ஹார | ,, |
| 50 | ஏகபாதத்ரி | ,, | 60 | மத்ஸ்ய ஸம்ஹார | ,, |
| 51 | த்ரிபாதத்ரி | ,, | 61 | வராஹ ஸம்ஹார | ,, |
| 52 | ஏகபாத | ,, | 62 | பிரார்த்தனு | ,, |
| 53 | கௌரிவரப்ரத | ,, | 63 | ரக்தபிக்ஷப்ரதான | ,, |
| 54 | சக்ரதான | ,, | 64 | சிஷ்யபாவமூர்த்தி | ,, |

**பஞ்சவிம்சதி : ( 25 சிவவடிவங்கள்)**

1. சோமாஸ்கந்தர் 2. நட்ராசர் 3. ரிஷபாரூடர் 4. கல்யாணசுந்தரர் 5. சந்திரசேகரர் — சதாசிவப்பெருமானின் உச்சியில் உள்ள ஈசான முகத்திலிருந்து தோன்றியவர்கள்.

6. பிட்சாடனர் 7. காமாரி 8. காலாரி 9, சலந்தராரி 10. திரிபுராந்தகர் — சதாசிவப்பெருமானின் கிழக்கு முகமான தத்புருஷ முகத்திலிருந்து தோன்றியவர்கள்.

11. கஜசம்ஹாரர் 12. வீரபத்திரர் 13. தட்சிணாமூர்த்தி 14. கிராத மூர்த்தி 15, விஷாபஹரணர் — சதாசிவப் பெருமானின் தெற்குமுகமான அகோர முகத்திலிருந்து தோன்றியவர்கள்.

16. கங்காளர் 17. சக்ரதானர் 18. கஜாந்திகர் 19. சண்டேசானுக்ரகர் 20. ஏகபாதர் — சதாசிவப்பெருமானின் வடக்கு முகமான வாமதேவ முகத்திலிருந்து தோன்றியவர்கள்.

21. "இலிங்கோத்பவர்" 22. சுகாசனர் 23. உமாமகேசர் 24. ஹரிஹரர் 25. அர்த்தநாரி — *(சிவரூபம் - படம் - 13)* சதாசிவப்பெருமானின் மேற்கு முகமான சத்யோஜாத முகத்திலிருந்து தோன்றியவர்கள்

மேற்கூறப்பட்ட சிவவடிவங்கள் 25 - ம் போக வடிவங்கள், யோக வடிவங்கள், வேகவடிவங்கள் என மூவகைப்படுத்துவர்.

**மகேசுவர வடிவங்களும் — சக்திகளும்:**

(சோமாஸ்கந்தர் நூல் — பக்கம் 32, 33)

| | சுவாமி | | | அம்பாள் |
|---|---|---|---|---|
| 1. | சோமாஸ்கந்த | மூர்த்தி | — | புத்திரசௌபாக்யப்பிரதாயினி |
| 2. | நட்ராஜ | ,, | — | சம்பத்யோகப்பிரதாயினி |
| 3. | இட்பாரூட | ,, | — | தர்மா சித்திப்பிரதாயினி |

4. கல்யாண சுந்தர மூர்த்தி — சர்வதாமங்களப் பிரதாயினி
5. சந்திரசேகர ,, — தனதான்யப்ரதாயினி
6. பிட்சாடன ,, — யோகஷித் ப்ரந்த விமோசினி
7. காமதகன ,, — மோக விக்னவினசினி
8. காலசம்ஹார ,, — சர்வாரிஷ்ட விநசினி
9. சலந்தராவத ,, — துஷ்டவிநாசினி
10. திரிபுரசம்ஹார ,, — ஜன்மஜராமிருத்யுவிநாசினி
11. கஜசம்ஹார ,, — பராவி சாரஷ்மணி
12. வீரபத்ர ,, — சத்ருவிவேஷ்னசினி
13. தட்சிண ,, — மேதாப்ரஞாபிரதாயினி
14. கிராத ,, — .... ... ....
15. நீலகண்ட மூர்த்தி — விஷதோஷப்ரஞஷினி
16. கங்காள ,, — சர்வ பாவப்ரஞஷினி
17. சக்ரதான ,, — ... .... ....
18. கஜாந்திக ,, — சர்வ சித்தப்பிரதாயினி
19. சண்டேசாநுக்ரஹ ,, — மகா பாதகஞஷினி
20. ஏகபாத ,, — மகாரோகவிஞஷினி
21. இலிங்கோத்பவ ,, — மோட்சப்ரதாயினி
22. சுகாசன ,, — தர்மார்த்த காமமோட்சபிரதாயினி
23. உமாமகேச ,, — பார்யா சௌக்கியப்ரதாயினி
24. ஹரிஹர ,, — தர்மாதத்தாயினி
25. அர்த்தநாரீஸ்வர ,, — சர்வசௌபாக்கியப்பிரதாயினி

தென்குடித்திட்டை புராணத்தில் : (வடமொழி)

(தெட்சிணகுமந்விப க்ஷேத்ர மகாத்மியம்)

சுவாமி : அம்பாள்

1. " இலிங்கோத்பவ மூர்த்தி " — **" மோட்சப் பிரதாயினி "**
2. திரி ,, — வம்சவிருத்தி பிரதாயினி
3. கல்யாணசுந்தர ,, — சர்வதாமங்களப்ரதாயினி
4. உமாசகாய மூர்த்தி — பார்யாசௌக்யப்ரதாயினி
5. சுகாசன ,, — தர்மார்த்தகாமமோட்சப்பிரதாயினி
6. கங்காதர ,, — சர்வபாவப்ரதாயினி
7. நடேச ,, — சம்பத்யோகப்ரதாயினி
8. சண்டேசாநுக்ரக ,, — மகாபாதகஞசினி



படம் - 11

## திருவண்ணாமலையில்

மண்ணிற்கும் விண்ணிற்குமாய் சோதிவடிவாக நின்ற சிவபெருமானைப் பிரமனும் (அன்னவடிவு) திருமாலும் (வராகவடிவு) அடி முடி காண விழைதல்.



படம் - 12

இலிங்கோத்பவர்

அமர்ந்த நிலையில் விளங்கும் சிவனார் பிரமனையும், திருமாலையும் அருளுகின்றநிலை. வடநாட்டு ஓவியம்.

[ஆதாரம் : த. ப. க. வெளியீடு எண் : 148 - தஞ்சாவூர்]

9. ரிஷபாரூட மூர்த்தி — தர்மசித்திப்ரதாயினி
10. நீலகண்ட ,, — விஷதோஷப்ரஹாரிணி
11. ஹரிஹர ,, — தர்மார்த்ததாயினி
12. ஏகபாத ,, — மகாரோகவிநாசினி
13. அர்த்தநாரீஸ்வர ,, — சர்வசௌக்யப்ரதாயினி
14. தெட்சிணு ,, — மேதாப்ரக்ஞப்ரதாயினி
15. சோமாதிநாயக ,, — சர்வசித்திப்ரதாயினி
16. சோமாஸ்கந்த ,, — புத்ரசௌபாக்யப்ரதாயினி
17. சந்த்ரமௌலீஸ்வர ,, — தனதான்யப்ரதாயினி
18. வீரபத்ர ,, — சத்ருவித்வேஷநாசினி
19. காலசம்ஹார ,, — ஸர்வாரிஷ்டவிநாசினி
20. காமாந்தக ,, — ரோகவிக்னவிநாசினி
21. கஜாந்தக ,, — பராபிசாரசமநீ
22. திரிபுரசம்ஹார ,, — ஜன்மஜராம்ருத்யுவிநாசினி
23. பிட்சாடன ,, — யோஷித்ப்ருந்தவிமோஹினி
24. ஜலந்தரஸம்ஹார ,, — துஷ்டவிநாசினி
25. சரப ,, — அரிப்ரஹணசினி
26. பைரவ ,, — ரக்ஷாகரீ

( பஞ்சவிம்சதியில் ஒன்று கூடுதலாக உள்ளது ).

**கந்தபுராணம் - தட்சகாண்டம் :**

*( கச்சியப்பசிவாசாரியர் அருளியது )*

1. சிவலிங்க மூர்த்தி
2. சோமாஸ்கந்தர்
3. ஏகபாதர்
4. வேள்வி நாயகர்
5. இடபாரூடர்
6. சந்திரசேகரர்
7. நடராசர்
8. உக்கிரர்
9. அர்த்தநாரீஸ்வரர்
10. விஷாபகரணர்
11. சலந்தராரி
12. இலகுளிசர்.
13. சக்ரதானர்
14. அந்தகாசுரகரணர்
15. திரிபுராந்தகர்
16. கங்காதரர்
17. ஆபத்சகாயர்
18. சோதிலிங்கேஸ்வரர்
19. மச்சசங்கரர்
20. கூர்மசங்கரர்
21. வராகசங்கரர்
22. நரசிங்கசங்கரர்
23. கங்காளர்
24. காலபைரவர்
25. பிட்சாடனர்.

*( இதில் " இலிங்கோத்பவர் " மூர்த்தம் சேரவில்லை. மேலும் இவற்றுள் பல மகேஸ்வர வடிவங்கள் முன் கூறப்பட்ட வரிசையில் இல்லாதவைகளாகும்.)*

**திருவாவடுதுறை ஆதீனத்து முனிபுங்கவர் கவிராட்சச கச்சியப்ப முனிவர் அருளிய பேரூர்ப் புராணத்தில் மகேசுவர வடிவங்களும் பலன்களும் :**

* பேரூர்ப்புராணத்தில் 7 - ஆவது, '' **காலவன் வழிபடு படலம்** '' பாடல் 1 முதல் 12 பாடல்கள் நீங்கலாக, 13 ஆம் பாடல் முதல் 25 ஆம் பாடல் முடிய மகேசுவர வடிவங்களையும், பூசித்தால் உண்டாகும் பலன்களையும் இப் புராணம் கூறுகிறது.

1. '' **உருத்திரனை** '' வணங்கினல் உலக முழுவதையும் ஒரு நொடிப் போதிலே அழிக்கும் வன்மை உண்டாகும்.

2. '' **உமாமகேசர்** '' திருவடியைப் பூசித்தால், வேகத்தைத் தடுத்து, திருமண விருப்பை உதவுவார்.

3. '' **கல்யாண சுந்தரர்** '' திருவடியைப் பூசித்தால், பிரமனும் தலை யசைக்கத் திருமணத்தை முடித்தருள்வார்.

4. '' **அர்த்த நாரீஸ்வரராகிய** '' உமையொருபாதியரைப் பூசித்தால் பெண்கள் போகத்தில் மிக மோகம் விளைப்பர்.

5. '' **சோமாஸ்கந்தரை** '' வழிபடின், நற்புத்திரப் பேறும் சந்தான விருத்தியும் அளிப்பர்.

6. '' **சக்கரப்ரதரை** '' வழிபடின், உலகம் வியப்பப் பெரும்போகம் அளிப்பார்.

7. '' **தட்சிணாமூர்த்தியின்** '' திருவடியை வணங்கினல் தன்பால் அன்பும் உலகத்தின்பால் உவர்ப்பும் உண்டாக்குவர்.

8. '' **பிட்சாடனரை** '' வழிபடின் காதன் மனையாள் கையுதறப் போகத்தில் வெறுப்பை உண்டாக்குவர்.

9. '' **கங்காளரை** '' அன்புசெயின், அவர் உலகம் முழுதும் ஏவல்கேட்ப வைராக்கியத்தை அளிப்பர்.

10. '' **காமதகன மூர்த்தியை** '' வழிபடின், மெய்ஞ்ஞானம் தோன்ற தம் திருவடியைச் சாரும் பக்குவத்தை உண்டாக்குவார்.

11. '' **காலாரியின்** '' திருவடியைத் தொழுதால், பரிபாகம் பெற்ற அன்பர் களின் துன்பங்களனைத்தையும் துடைத்து, அபயம் அருளுவர்.

12. '' **சலந்தராரியைத்** '' தொழுதால் அச்சமின்றி யோகஞ் செய்வோரின் கோபக்கனலை அழிப்பர்.

13. '' **திரிபுராரியின்** '' திருவடியைத் தொழுதால் மாறுபட்ட ஆன்மாக்களை வசப்படுத்தும் முக்குணங்களையும் மாற்றுவார்.

---

x '' பேரூர்ப் புராணம் '' - ஆதீன வெளியீடு எண் : - 244 பக்கம் 107 முதல் 110 முடிய.

14. **'' சரப மூர்த்தியின் ''** திருவடியைத் தொழுதால் வலிய கன்மங்களும், மாயையும் விலகக் கடைக் கண்ணேக்கம் செய்வார்.

15. **'' நிலக்கண்டர் ''** மனத்தை ஒருமைப் படுத்தித் திருவடியைத் துதித்தால் ஆணவமலம் இனித் தனக்கு இடமில்லை என்று ஓடும்படித் திருக்கடைக்கண் அருள்வர். 16. **'' திரிபாத மூர்த்திக்கு ''** அடிமைசெய்யின் மீளவும் கருவிற் புகுதலை வெறுக்கின்ற சரியை கிரியை யோகங்களில் முயலும் முறையினை அருள்வர்.

17. **'' ஏகபாத மூர்த்தியை ''** வழிபடின் மனம் ஞான நிஷ்டையை விரும்ப அருள்வர். வேதங்கள் நான்கையும் நாயாக வரச் செய்யும் 18. **'' வடுகராகிய பைரவரைப் ''** பூசித்தால், வாழ்நாள் முழுதும் ஆசையை வென்று வாழ்வார்கள்.

19. **'' இடபாருடரை ''** வணங்கின், பரிபாகிகட்குக் கருணை செய்து பாதுகாப்பர்.

20. **'' சந்திர சேகரர் ''** திருவடியை மனத்தால் நினைத்தால், பிறப் பிறப்புக்களில் அச்சந் தோன்றச் செய்வர்.

21. **'' ஆனந்த நடராசர்க்கு ''** அடிமையாயின், பொறியடக்கம் பெற்றோர்க்கு அவர் ஆனந்த வெள்ளம் பெருகச் செய்வர்.

22. **'' கங்காதர மூர்த்தியை ''** வழிபடின் உயிர்கட்கு இடையீடில்லாத ஆனந்தம் அருளுவர்.

சொல்லிய * இருபத்து நான்கு மூர்த்திகட்கும் மூலமாய் அருவுருவத் திருமேனியாய், மயக்கம் நீங்கிய ஆண், பெண் உருவாகியும் தோன்றியது.

23. **'' சிவலிங்க மூர்த்தி ''** செல்வம், அரசாளும் பெருமை, தேவருலகாளும் பெருமை, இவை அனைத்தையும் மற்றும் வீடு அடையும் பேறு இவற்றுள் எதை விரும்பினலும் விரைவில் அருளும்.

**காசியப சில்ப சாத்திரர் & சில்ப ரத்தினம் நூல்களில் காணும் 18 மகேசுவர வடிவங்கள் :**

1. சுகாசனர்
2. சோமாஸ்கந்தர்
3. சந்திரசேகரர்
4. இடபவாகனர்
5. நிருத்தமூர்த்தி
6. கங்காதரமூர்த்தி
7. திரிபுராந்தகமூர்த்தி
8. கல்யாணசுந்தரமூர்த்தி
9. அர்த்தநாரீஸ்வரமூர்த்தி
10. கஜசம்ஹாரமூர்த்தி

---

*x - ஷி காலவன் வழிபடுபடலத்தில் - 24 ஆம் பாடலில்* **'' மொழிந்த நாலிரு மூவர்க்கு மூலமாய் ,, - என்ற தொடரின் பிரகாரம் ஒரு மகேசுவரமூர்த்தம் குறைவாக உள்ளது. அறிஞர்கள் ஆராயத் தக்கதாகும்.**

| | | | |
|---|---|---|---|
| 11. | பாசுபதமூர்த்தி | 15. | சண்டேசானுக்ரகமூர்த்தி |
| 12. | கங்காளமூர்த்தி | 16. | தெட்சிணாமூர்த்தி |
| 13. | ஹரிஹரமூர்த்தி | 17. | காலசம்ஹாரமூர்த்தி |
| 14. | பிட்சாடனமூர்த்தி | 18. | **" இலிங்கோத்பவமூர்த்தி "** |

**சகளாதிகாரம் நூலில் 16-மகேசுவர வடிவங்கள் :**

( தஞ்சை சரசுவதிமகால் வெ. எண் 92 )

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | சோமாஸ்கந்த | லக்ஷணம் | 9. | பாசுபத | லக்ஷணம் |
| 2. | சந்திரசேகர | ,, | 10. | கங்காளமூர்த்தி | ,, |
| 3. | விருஷபவாஹன | ,, | 11. | ஹரிஹரார்த்த | ,, |
| 4. | நடேஸ்வர | ,, | 12. | பிட்சாடன | ,, |
| 5. | கங்காதர | ,, | 13. | சண்டேஸ்வரப்ரசாத | ,, |
| 6. | திரிபுராந்தக | ,, | 14. | தட்சிணாமூர்த்தி | ,, |
| 7. | கல்யாணசுந்தரர் | ,, | 15. | காலதகன | ,, |
| 8. | அர்த்தநாரிஸ்வரர் | ,, | 16. | **" இலிங்கோத்பவ "** | ,, |

**மூர்த்தித் தியானம் நூலில் மகேசுவர வடிவங்கள் - 21 :-**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | சதாசிவத் | தியானம் | 12 | பைரவத் | தியானம் |
| 2. | சட்டநாதத் | ,, | 13. | க்ரோதபைரவத் | ,, |
| 3. | சந்திரசேகரத் | ,, | 14, | உன்மத்தபைரவத் | ,, |
| 4. | சபாபதித் | ,, | 15. | கபாலபைரவத் | ,, |
| 5, | அஷ்டபுஜ சபாபதித் | ,, | 16. | பீஷண பைரவத் | ,, |
| 6. | சோமாஸ்கந்தத் | ,, | 17. | சண்ட பைரவத் | ,, |
| 7. | நடேசத் | ,, | 18. | சம்ஹார பைரவத் | ,, |
| 8. | லகுலீஸ்வரத் | ,, | 19. | ஊர்த்துவ வடுகபைரவத் | ,, |
| 9. | தட்சிணாமூர்த்தித் | ,, | 20, | ஸ்வாயம்புநாத பைரவத் | ,, |
| 10. | ,, | ,, | 21. | க்ஷேத்ரபாலத் | ,, |
| 11. | பிட்சாடனர் | ,, | | | |

**x ஸ்ரீதத்வநிதி சிற்பநூலில் முதற்பாகத்தில் மகேசுவர வடிவங்கள் :-**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | மகேசுவர | தியானம் | 7. | உமாமகேச | தியானம் |
| 2. | மகாகைலாசமூர்த்தி | ,, | 8. | சபாபதி | ,, |
| 3. | துவாத்ரிம்சத்புஜ அகோர | , | 9. | சத்யோஜாத | ,, |
| 4. | தச புஜ அகோர | ,, | 10. | வாமதேவ | ,, |
| 5. | நீலகண்ட | ,, | 11. | அகோர | ,, |
| 6. | ருத்ரமூர்த்தி | ,, | 12. | தத்புருஷ | ,, |

---

** தஞ்சை சரசுவதிமகால் வெளியீடு எண் :- 104ல் ஸ்ரீ தத்துவநிதி முதற்பாகத்தில் பக்கம் 228 முதல் 342 வரையில் சிவதத்வ தியானங்கள் பல உள்ளன. இங்கு மகேசுவர வடிவத்தியானங்கள் மட்டும் தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இவைகளை காரணாகமத்திலும் காணலாம்.*

## முத்திரைகள் :

படம் - 14



## முத்திரைகள் :

படம் - 15



13. ஈசான தியானம்
14. ஆனந்த தாண்டவ ,,
15. சந்தியா ,, ,,
16. திரிபுர ,, ,,
17. சம்ஹார ,, ,,
18. பவாதி அஷ்டமூர்த்தி ,,
19. ஏகாதச (,,) ருத்திரர்கள் ,,
20. சந்திரசேகர ,,
21. உமாமகேசுவர ,,
22. விருஷபாரூட ,,
23 நாட்ய மூர்த்தி ,,
24. கல்யாணசுந்தர ,,
25. பிட்சாடண மூர்த்தி ,,
26. காமதகன ,, ,,
27. காலஹர ,, ,,
28. திரிபுராரி ,, ,,
29. ஜலந்தரஹர ,, ,,
30. பிரம்மச்சிரச்சேத ,, ,,
31. கஜாசூரசம்ஹார ,, ,,
32. விரபத்ர ,, ,,
33. ஹரி ஹர ,, ,,
34. அர்த்த நாரீஸ்வர ,, ,,
35. கிராதார்ஜுன ,, ,,
36. கங்காள ,, ,,
37. சண்டேசானுக்ரக ,, ,,
38. விஷாபஹர ,, ,,
39. சக்ர தான ,, ,,
40. விக்னேஸ்வர - பிரசன்ன ,, ,,
41. சோமாஸ்கந்த ,, ,,
42. ஏகபாத ,, ,,
43. சுகாசன ,, ,,
44. தட்சிணாமூர்த்தி அல்லது வியாக்யான ,, ,,
45. "இலிங்கோத்பவ" ,, ,,
46. சரப மூர்த்தி ,, ,,
47. வீரபத்ர ,, ,,

48. சுவர்ணாகர்ஷண பைரவ தியானம்

49. வடுக ,, ,,

50. மல்லாரி சிவத்தியானம்

51. கட்கராவண தியானம் - பைரவ அஷ்ட அஷ்டகத்திற்தள் 50. முதலாவது பைரவாஷ்டகத் தியானம் முதல் 2, 3, 4, 5, 6, 7, 8 - வது பைரவாஷ்டகத் தியானம் முடிய

[காமிகம், காரணம், அஜிதம், ரௌரவம் முதலான ஆகமங்களில் விசேஷமான மகேசுவர வடிவங்களின் பிரதிட்டை, கும்பாபிஷேகம் உற்சவம் முதலான செய்திகளை விரிவாகக் கூறுவதனைக் காணலாம்.]

**x முத்திரைகள் :-** (படம், 14, 15, 16)

1. அபய கரம்
2. வரத ,,
3. & 3 அ கடக கரம்
4. & 4 அ சிம்மகர்ண ,,

---

***x முத்திரைகள், ஆயுதங்கள், ஆசனங்கள் இவைகளின் விளக்கங்களை, தட்சிணாமூர்த்தி பாகம் 1 ல் காண்க. ஆ. வெ. எண். 384. - சு. நாராயண சுவாமி, எம். ஏ, எம். எட்., - பக்கம் 9-40.***

| | | | |
|---|---|---|---|
| 5. | 5 அ, 5 ஆ, வியாக்கியான சரம் | 19. கடி | கரம் |
| 6. | சூசி ,, | 20. ஊரு | ,, |
| 7. | தர்ஜனி ,, | 21. ஆலிங்கன | ,, |
| 8. | கர்த்தரிமுக ,, | 22. தனுர்க் | ,, |
| 9. | அலபத்ம ,, | 23. டமருக | ,, |
| 10. | விஸ்மய ,, | 24. தாடன | ,, |
| 11. | பல்லவ ,, | 25. அஞ்சலி | ,, |
| 12. | நித்ரா ,, | 26. தியான | ,, |
| 13. | அர்த்தசந்திர ,, | 27. புஷ்ப புட | ,, |
| 14. | அர்த்தபதாக ,, | 28. தர்ம சக்கர | ,, |
| 15. | திரிசூல ,, | 29, 29 அ, கஜ | ,, |
| 16. | முஷ்டி ,, | 30. தண்ட | ,, |
| 17. | சிகர ,, | 31. டோல | ,, |
| 18. | பூ ஸ்பரிச ,, | 32 பிரசாரித | ,, |

இவ்வாதீனத்தின் 17-ஆவது о குருமூர்த்திகள் ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் - காளிகா புராணத்திலிருந்து தொகுத்தருளிய முத்திரைகள் :-

| | | | |
|---|---|---|---|
| 1. | தேனு | 17. | புடகம் |
| 2. | சம்புடம் | 18. | அர்த்த சந்திரன் |
| 3. | ப்ரான்ஜலி | 19. | அங்கம் |
| 4. | பில்வ | 20. | த்விமுகம் |
| 5. | பத்மக | 21. | சங்கம் |
| 6. | நாராசம் | 22. | முஷ்டிகா |
| 7. | முண்டம் | 23. | வஜ்ரம் |
| 8. | தண்டம் | 24, | ஆபத்தம் |
| 9. | யோநி | 25. | விமலம் |
| 10. | அர்த்தயோநி | 26. | விமலம் |
| 11. | வத்தனி | 27. | கடம் |
| 12. | மகாமுத்ரா | 28. | துங்கம் |
| 13. | வைஷ்ணவி | 29. | புண்டரம் |
| 14. | மகாயோநி | 30. | சிகரிணி |
| 15. | பகம் | 31. | சிகரிணி |
| 16. | நிஸ்ஸங்கம் | 32. | அர்த்நதேனுக |

---

о ஷெ குருமூர்த்திகள் எழுதிய கையெழுத்துப் பிரதி ஆதீனத்து சரசுவதிமகால் நூல் நிலைய ஆய்வு மையத்தின் - சுவடிப்புலத்தில் உள்ளது.

முத்திரைகள் :

படம் - 16



## படம் - 17-ன் விபரங்கள்:

1. அபயஹஸ்தம்
2. வரதஹஸ்தம்
3. கடகஹஸ்தம்
4. சிம்மகர்ணம் (வலது)
5. சிம்மகர்ணம் (இடது)
6. நித்ராஹஸ்தம்
7. சூசி ஹஸ்தம்
8. மழு ஏந்திய ஹஸ்தம்
9. பரசு ஏந்தியஹஸ்தம்
10. மலர் ஏந்தியஹஸ்தம்
11. டமருகம் ஏந்தியஹஸ்தம்
12. கபாலம் ஏந்தியஹஸ்தம்
13. திரிசூலம் ஏந்தியஹஸ்தம்
14. கட்டியம் ஏந்தியஹஸ்தம்
15. மான் ஏந்திய ஹஸ்தம்

16, 17, 18, பலநிலை ஜடாமகுடங்கள்

19. சுகாசனம்

## —: முத்திரைகள் :—



படம் - 17

[முத்திரைகள் விபரம் முன் பக்கம் காண்க




படம் - 18 ஆயுதங்கள் - முத்திரைகள் - ஆசனங்கள் :

1) மான்
2) மழு
3) பரசு
4) சூலம்
5) வஜ்ரம்
6) கேடயம்
7) சர்ப்பம்
8) ப்ரசம்
9) தநுசு
10) அம்பு
11) அங்குசம்
12) கமண்டலம்
13) அட்சமாலை
14) கமலம்
15) சூரிகை
16) மணி
17) நிலோற்பலம்
18) தண்டம்
19) சத்தி
20) பாலம்
21) பிண்டிபாலம்
22) கட்கம்
23) அஞ்சலி
24) அபயம்
25) வரதம்
26) சூசி
27) விஸ்மயம்
28) கடகம்
29) கடி
30) கோசம்
31) உத்குடிகாசனம்
32) சுகாசனம்

33. சம்மிலினி
34. குண்டம்
35. சக்கரம்
36. சூலம்
37. சிம்மமுகி
38. கோமுகம்
39. ப்ராங்நாம
40. உன்னமநம்
41. பிம்பம்
42. பாசுபதம்
43. சுத்தம்
44. த்யாகம்
45. சாதனி
46. ப்ரசாதனி
47. உக்ர முத்திரை
48. குண்டலி
49. வ்யூகம்
50. த்ரிமுகம்
51. அஷிவல்லி
52. யோகம்
53. ப்ரான்ஜலி
54. பேதம்
55. சம்மோகனம்
56. பாணம்
57. தனுஸ்
58. தூணிரம்

**தந்திரசாரம் நூலில் காணும் முத்திரைகள் :-**
**சிவனுடைய முத்திரைகள் :-** (படம் 17, 18)

லிங்கம், யோனி, திரிசூலம், அட்சமாலா, அபயம், மிருகம், கட்வாங்கம், கபாலம், டமருகம்.

**விஷ்ணு முத்திரைகள் :**

சங்கு, சக்கரம், கதை, பத்மம், வேணு, ஸ்ரீ வத்சம், கௌஸ்துபம், வனமாலா, ஞானமுத்ரா, பில்வா, காருடா, நாரசிம்ஹி, வாராகீ, ஹயக்ரீவீ, தனுஸ், பாணம், பரசு, ஜகன் மோகினி, காமமுத்ரா.

**கணேச முத்திரைகள் :**

சப்தமுத்திரை, தந்தம், பாசம், அங்குசம், விக்ன முத்திரை, பரசு, வட்டு, பூஜபூர முத்திரை.

**அக்னி முத்திரை :** சப்தஜிஹ்வ

**சூர்ய முத்திரை :** பத்மம்

**சக்தி முத்திரைகள் :**

பாசம், அங்குசம், வரா, அபீதி, தனுஸ், பாணம், கட்கம், கர்மமுத்திரை, முசலம், துர்க்கை, சக்கரம், லக்ஷ்மி, வீணு, புஸ்தகமுத்ரா, வியாக்யாஞ, காலினி, கும்பமுத்ரா, தந்தம், பிரார்த்தனு, அன்ஜலி, காலகர்கணிகா, விஸ்மயம், நாதமுத்ரா, பிந்து, சம்ஹாரம், மத்ஸ்யம், கூர்மம், முண்டம். லேலிஹான, மகாயோனி, தூமகேது, திரிகண்டா, சம்ரோக்ஷபகாரணி, வித்ராவினி, ஆகர்ஷணி, வஸ்யகரி, உன்மாதினி, மகாங்குசா, கேசரி, பீஜம், யோனிமுத்ரா, சௌபாக்யதாயினி, பூதனி.

**x பிரம்மனின் முத்திரைகள் :**

அபயம், வரதம், ஞான முத்திரை, அஞ்சலி, ஜபமாலை, புஸ்தகம், சிருக், சிருவம், யோகநிலை, கும்பம், யாகம் செய்தல், கதை, கமண்டலம், குண்டிகை, தாமரை, பத்மாசனம், அர்த்தபத்மாசனம், சுகாசனம், சமபாதகஸ்தானம், ஜடாமகுடம், அல்லது கிரீட மகுடம்.

**ஆயுதங்களும் பிறபொருட்களும் :** (படம் 19 to 22)

**போர்க் கருவிகள் :**

சக்தி, சூலம், சங்கு, சக்கரம்,
வஜ்ரம், தண்டம், உடைவாள், சூரிகை, கேடயம், வில், அம்பு, மழு, கதை சம்மட்டி, ஈட்டி, வேல்.

**தொழிற் கருவிகள் :**

கலப்பை, உலக்கை, கொட்டாபுளி, சிருக், சிருவம், கந்தம், கத்தரி, எழுத்தாணி, தாளம், உழவாரப்படை, அங்குசம், பரசு, குந்தாளி, அரிவாள், சாட்டை, யோகதண்டம், முழக்கோல், உளி, வ்சிறி, சாமரம்.

**இசைக் கருவிகள் :**

யாழ், பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ், வில்யாழ், நாரத யாழ், கீசகயாழ், ஆயிரப் பேரியாழ், வீணை, குழல், முரசு, மத்தளம், பஞ்சமுக வாத்யம், உடுக்கை, எக்காளம், மிருதங்கம், தம்புரா.

**உயிரினங்கள் :**

ரிஷபம், சிம்மம், குதிரை, மான், ஆடு, பசு, மூஷிகம், நாய், ஆமை, அன்னம், மயில், சேவல், கிளி, காகம், சர்பம், முயலகன், வேதாளம் பூதம், கற்பகவிருக்ஷம், காமதேனு, புருஷாமிருகம், யாளி, யானை.

**பூக்கள் பத்ரங்கள் :**

வெண்தாமரை, செந்தாமரை, குவளை, அல்லி, ஊமத்தை, எருக்கம்பூ செங்கழு நீர், கொன்றை, தாழம்பூ, தும்பை, வில்வம், பாரிஜாதம் மற்றும் பஞ்சவில்வங்கள்.

**பொதுப் பொருள்கள் :**

மணி, கண்ணாடி, தீபம், கலசம் கமண்டலம், கெண்டி, அட்சமாலை, ஸ்படிகமாலை, தாமரை மணிமாலை, நவரத்தினமாலை, முத்துமாலை, ஏடு, கொடி, கபாலம், கட்வாங்கம், குடை, வீரக்கழல், சாமரம், சிலம்பு, செங்கோல்,

---

x இம்முத்திரைகள் பிரமனுக்குரியனவாக சில சுவடிகளில் காணப் படுகின்றன. இவைகளை ஆதினத்து சரசுவதி மகால் நூல்நிலைய ஆய்வு மையத்தில் - சுவடிப்புலத்தில் காண்க.

## சிற்பங்களில் விளங்கும் ஆயுதங்கள் (தனித்த நிலையில்)




படம் - 19

1. பாசம்
2. அங்குசம்
3. தந்தம்
4. வேதாளம்
5. சக்தி
6. அம்பு
7. வில்
8. சக்காம்
9. கத்தி
10, கேடகம்
11, சம்மட்டி
12. கதை
13. நாகபாசம்
14. சூலம்

### சிற்பங்களில் விளங்கும் ஆயுதங்கள் ( தனித்த நிலையில்)




படம் - 20

| | | |
|---|---|---|
| 15. குந்தாலி | 20. பரசு | 25. ஜபமாலை |
| 16. மழு | 21. கரும்புவில் | 26. சாமரம் |
| 17. கொடி | 22. சங்கம் | 27. கட்டுவாங்கம் |
| 18. தண்டம் | 23. புஷ்பபாணம் | 28. தீ அகல் [வேறு |
| 19. கமண்டலம் (வேறுநிலை) | 24. கோடரி | 29. வீணை |

## சிற்பங்களில் விளங்கும் ஆயுதங்கள் மற்றும் மங்கலப் பொருள்கள்



படம் - 21

தாமரை—தண்டம்—வச்சிரம்—உருத்திராக்கமாலை—கட்கம் கேடகம்—குலிசம்—கமண்டலம்—கோழிக்கொடி—அம்பு—கொடி சக்கரம்—பாசம்—கதை

## சிற்பங்களில் விளங்கும் ஆயுதங்கள் மற்றும் சில வாகனங்கள் :



படம் - 22

அங்குசம் - வில் - சூலம் - சங்கு - கலப்பை - மணி - உளி மலரம்பு - கரும்புவில் - தோமரம் (உலக்கை) - மலர்மொட்டு யானை - மயில் - ஆடு.

தலைக்கோல், தீச்சுடர், கரும்புவில், மலர்க்கணை, மோதகம், கொக்கிறகு, கங்கை, நெற்கதிர், கும்பம், மலை, பாசம், லிங்கம், பலிபீடம், திருவாசி, இன்னும் பல பொருட்கள்.

**மகுடமுடிகள் :** ( படம் 23, 24, 25 )

ஜடாமகுடம், ஜடாபாரம் ( இதில் இரண்டுவகை ) ஜடாபந்தம் ( இதில் வேறொரு வகையும் உண்டு ) சுடர்முடி, விரிசடை கேசபந்தம், ஜடாமண்டலம் சர்ப்ப மௌலி, ஜடாமண்டலம் வேறுவகை.

**ஆசனங்கள் :** ( படம் 26 )

1. சமபாத ஸ்தானகம், 2. வைதஸ்திக ஸ்தானகம், 3. அர்த்த வைதஸ்திக ஸ்தானகம், 4. காயோத் சர்க்கம், 5. சுகாசனம், 6. பத்மாசனம் 7. லளிதாசனம், 8. மகாராஜலிலாசனம் 9. வீராசனம், 10. உத்குடிகாசனம், 11. யோகாசனம், 12. ஸ்வஸ்தி காசனம், 13. கருடாசனம், 14. சயனாசனம், 15. வைசாக ஸ்தானகம், 16. வைஷ்ணவம், 17 ஸ்வஸ்திகாசனம், 18. ஆலீடாசனம், 19. பிரத்யாலீடாசனம், 20. ஊர்த்துவஜானு, 21. ஏகபாதஸ்தானகம்

*** அணிகலன்கள் :** ( பொது )

**தலையணிவகை :**

முடி, சுடிகை, சேகரம், கிரீடம், சூடிகை, மகுடம், மௌலிமேலே கண்ட முடிவகை, ஐந்துறுப்புக்களையுடையவை. அவை முறையே தாமம், மகுடம், பதுமம், கோடகம், கிம்புரி, என்பனவாம்.

தொய்யகம், முகசரம், பூரப்பாளை, புல்லகம், தென்பல்லி, வடபல்லி, சிலம்பகம், சூடை, தலைச்சுட்டி, சூடாமணி, சூரியப்பிரபை, சந்திரப்பிரபை, சூளாமணி, வலம்புரி, சீதேவி, கோதை, நெற்றிச் சுட்டி, ஓடை, சுடிகை, சூட்டு, பட்டம், சடைநாகம், சடைத் திருகு, குச்சம், குஞ்சம்,

**கழுத்தணி வகை :-**

அரும்பொட்டி, மணிவம், கண்டவலயம், கிரீவம், சரப்பளி, கொத்து, அரும்புச் சரம், மலர்ச் சரம், கண்டசரம், கண்டமாலை, அட்டிகை, கண்டாபரணம், ஞாண், சவடி, கோதை, காரை: பொட்டு, சூலம், தாலி, புலிப் பற்றாலி, தும்பு, திரு, ஆரம், கண்டிகை, தொடையல், வீரசங்கிலி, நேர்ஞ் சங்கிலி, மதாணி, மாலை, வடம், கோவை, மணியாரம், முத்தாரம், முன்றாலி, பின்றாலி, பதக்கம், சன்னவீரம், ஐம்படைத் தாலி, புலிநகத் தாலி, தாழ்வடம்,

---

x "சிற்பக் கலையில் அறிய வேண்டுவன" பற்றி விரிவாக "சண்டேசுவரர்" நூலில் பக்கம் 41 - 51 முடிய உள்ளது. ஆ. வெளியீடு எண் 417, ஆசிரியர். S. நாராயணசுவாமி.

மாங்காய் மாலை, மணிமிடை பவழம், நெல்லிக்காய் மாலை, சந்திர ஆரம், ஏக ருத்ராட்சம், ருத்திராட்ச மாலை.

**காதணி வகை :-**

தோடு, ஓட்டு, ஓலை, சின்னப்பூ, கன்னப்பூ, குழை, கம்பி, வல்லிகை, குணுக்கு, தருப்பு, கடுக்கன், மகரி, வீரசன்னம், திரிசரி, பஞ்சசரி, நவசரி, நவகண்டி, அட்டிகை, கடிப்பிணை, தண்டட்டி, குண்டலம், கொப்பு, புகடி, முருகு, செவிப்பூ, மடல், சன்னவீரதஞ்சம், பாம்பணி, நாகபடம், பாம்படம், குதம்பை, நீலக்குதம்பை, சந்திரபாணி, குரடு, செவியிடு.

**மூக்கணிவகை :**

மூக்குத்தி, புல்லாக்கு, பேசரி, நத்து.

**கையணி வகை :**

வாகுவலயம், கேயூரம், அங்கதம், தோள்வளை, தொடி, ஆடகம், கைச்சரி, வளை, தொடி, கங்கணம், மகரவாய், புரிவளை, புரியகம், கடகம், கைக்கட்டு, முறுக்கு, காப்பு, வால்வளை, பைந்தொடி, கொலுசு, சுருது, சரி, வண்டு, சங்கு, எங்கி, சூடகம், கன்று, பிடிகை, ஆளிக்காப்பு, தோடா, பவளப் பல்வளை, நவமணிவளை, இடைச்சரி, பாசித்தாமணி, நெளிவளை, முடுகு, பாட்டுலா.

**கை விரலணிவகை :**

மோதிரம், ஆழி, வீகம், இலச்சினை, அரும்பு, தடை, நெறி, வாளைப் பகுவாய், மரகதச்செறி, மகரவாய் மணியாழி, எட்டப்பூ, மரகத நாயகம்.

**இடையணிவகை :**

மேகலை ( 7 வடம் ), காஞ்சி ( 8 வடம் ), கலாபம் ( 16 வடம் ), பருமம் ( 18 வடம் ) விரிசிகை ( 32 வடம் ), தோரை, அந்நு, மணு, அரைப்பட்டிகை அரைஞாண், உதரபந்தம், இரதனம், கடிசூத்திரம், கீர்த்திமுகம், இடைச் செறி, சதங்கை, மணிக்கோவை, ஐம்படைக்கோவை, அரைச் சதங்கை, அரைவடம், அரைமுடி, கச்சி, கச்சைப்புறம்.

**துடையணிவகை :**

குறங்குசெறி, கவான்செறி.

**பாத அணிவகை :**

பாடகம், பாதசரம், கிண்கிணியாரம், புனையரம், பாதசாலம், சதங்கை, சிறுமணி, நூபுரம், பரிபுரம், பரியகம், சிலம்பு, அரவம், தண்டை, பாதகடகம், குடச்சூல், ஞெகிழம், புஜங்க கட்டகம், கண்டை, வீரக்கழல், கொடைக்கழல், காற்சரி.

**கால் விரலணிவகை :**

கால் மோதிரம், மிஞ்சி, மெட்டி, பலி, மகரவாய், நெளி, காலாழி.

---

## மகுடமுடிகள் :




படம் - 23

மகுடமுடிகள் :




படம் - 24

மகுடமுடிகள் :




படம் -25

ஆசனங்கள்.




படம் - 26

# புராண வரலாறு

[ சிவரகசியம், கந்தபுராணம், அருணாசலபுராணம் ]

அன்னமாய் விசும்பு பறந்து அயன் தேட அங்ஙனே பெரியநீசிறிய
என்னையாள் விரும்பி என் மனம் புகுந்த எளிமையை என்றும் நான் மறக்கேன்
முன்னம் மால் அறியா ஒருவனும் இருவா ! முக்கணா ! நாற்பெருந் தடந்தோள்
கன்னலே ! தேனே ! பாகே ! அமுதமே ! கங்கை கொண்ட சோளேச் [ சரத்தானே. திருவிசைப்பா

ஓராயிரம் சதுர்யுகங்கள் அயனுக்கு ஒரு பகலாம். அதுபோன்றே மற்றும் ஓராயிரம் சதுர்யுகங்கள் இரவாகும். இவ்விரண்டும் சேர்ந்த நாளினை கற்பம் என அழைப்பர். அயனின் ஒருபகல் முடிந்ததும் உண்டாகும் " தினப் பிரளயம் " எனப்படும் ஊழி முடிவில் அயன்படைத்த உலகு ஒடுங்கி நிலப் பரப்பு முழுதும் நீர்முடிநிற்கும், அதன்பின் ஓராயிரம் சதுர்யுக அளவும் அயன் ( இரவுப் போதாதலின் ) ஓய்வெடுத்து உறங்குவான். அவ்வாறு ஓரிரவு உறங்கிக் காலைப் போதில் எழுந்த " **அயன்** " ஒருவன மீட்டும் உலகைப் படைத்தனன். இதற்கிடையில் " **அரி** " குழந்தை உருவில் ஆலிலை மேற் கொண்டு சிவயோகஞ் செய்திருந்தார்.

துயின்றெழுந்த அயன் உலகினை முன்போல் படைத்து, தான் துயில்கையில் உலகு அழிந்து, தன்னால் மீண்டும் படைக்கப் படுதலால் " **தானே முழு முதல்** " எனத் தருக்குக் கொண்டான். தான் படைத்த உலகினை வலம் வருகையில், அலைகடல் நடுவில் துயின்ற அரியினைக் கண்டு வெகுண்டு, அகந்தை தூண்ட, அரியினைத் தட்டி எழுப்பி, ' இவ்வுலகினைப் படைத்த முதல்வனும் என்னை மதியாமை ஏன்? " என வினவினான். அரி சிரித்து, " உன்னையும் படைத்த முதல்வன் நான். என்னை முதலில் வணங்குக " என்றார். சினங்கொண்டு அறிவிழந்த அயன், " உன் பல அவதாரங்களையும் நான் படைத்தவன், எனவே நானே முதல்வன் " என்றான். இவ்வாறு தொடங்கிய வாய்ப்போர் முடிவில்லாமல் நீண்டது. முடிவில், " நாமிருவரும் போர் புரிந்து, வெற்றிபெற்றோரே முதல்வர் எனக் கொள்வோம் " என இருவரும் முடிவு செய்து கடும்போர் தொடங்கினர்.

இருவரும் பெரும்போர் தொடங்கினர். பல்வகை அஸ்திரங்களையும் சஸ்திரங்களையும் வீசினர். பின் தெய்வப் படைகளை வீசிப் போரிட்டனர். வானும் கடலும் பிறவும் நடுங்கின, இறுதியாய் இருவரும் தத்தம் வசம் இருந்த சிவப் படைக்கலங்களை வீசினர், அப்படைகள் உலகை எரிக்கத் தொடங்கின. சிவன் ஆணையால் நாரதர் அவர்களிடம் வந்து போரை நிறுத்துமாறு வேண்டினர். ஆயினும் அவ்விருவரும் போரினைத் தொடர்ந்தனர்.

நாரதர், முழுமுதலாம் சிவமே சோதியாய் நின்று உங்கள் அகந்தையை ஒடுக்கும், எனக்கூறி அகன்றார். மேலும் போர் தொடரவே, அவர்க்கிடையில் " பாரோடு விண்ணாய்ப்படர்ந்த " ஒர்சோதிப்பிழம்பு எதிர் நின்றது, அதன் தோற்றத்தொடு, " இதன் அடியையோ முடியையோ காண்பார் உங்களில் முதல்வராவர் ", என வானொலி ஒன்று முழங்கியது. ஒளிப்பிழம்பின் தரிசனம் அவர்கள் கோபத்தினை நீக்கியது. எனினும் ஆணவம் குறையாமையால் அயன் " இதன் முடி காண்பேன் ", எனவும், அரி " இதன் அடிகாண்பேன் ", எனவும் கூறி, அதனைத் தொடர்ந்தனர், மேல் பறந்து செல்ல அன்ன உருவினை அயனும்; கீழ் தோண்டிட வராக உருவினை அரியும் கொண்டு தம் செயல்களில் முயன்றனர்,

பல நூறுயுகங்கள் கீழ்தோண்டியும் சோதிப்பிழம்பின் அடி காணுதல் இயலாது, உடல் வருந்தி, எய்த்த திருமால் அகந்தை ஒழிந்து சிவபிரானை நினைந்து உருகிச் சிறிது வலிமை பெற்று நில உலகுக்கு வந்து சேர்ந்தார், பறந்து சென்ற அயன் சோதியின் சிகை மேல் நோக்கி வளர்ந்து செல்லுதல் கண்டு திகைத்து எய்த்தார். அப்போது சோதித் திரு உருவினின்று வெளி வந்த சித்தர் சிலர் அயனைநோக்கி, " முழுமுதற் சோதியின் அடியையும் முடியையும் காணஇயலாது என்பதை உணராத நிலையில், இந்நிலையிலேனும் நிலம் நோக்கிச் செல்லாது மேற்செல்லின், இப்பறவை அழிவது திண்ணம் ", எனக் கூறினர், அதோடு நில்லாது, " வராகமாய் பூமியைத் தோண்டிச்சென்ற அரி, இதனை உணர்ந்ததால் நிலவுலகு திரும்பினன் ", எனவும் கூறினர், இதுகேட்ட அயன் அகந்தையழிந்து, கழிவிரக்கங்கொண்டு நிலம் நோக்கித் திரும்பி, திருமாலைக் கண்டு " நாம் சிவ பிரானின் அடிமைகள் என்பது மறந்து கெட்டோம், நாமுய்ய எழுந்த இச்சோதி லிங்கத்தினைப் பூசிப்போம்", எனக் கூறினன். இசைந்த மனத்துடன் இருவரும் சோதிலிங்கத்தை முறையாய் வழிபட்டனர். சோதி உருவினிடையே சந்திரசேகரராய் சிவபிரான் தோன்றி அவ்விருவர்க்கும் அருளித் தத்தம் தொழிலைத் தொடரும் வலிமையையும் ஆளுரிமையும் வழங்கினர்

[சோதிலிங்கத்தின் இடையில் – உத்பவித்ததால், (தோன்றியதால்) இம் மூர்த்தி இலிங்கோத்பவர் என அழைக்கப்பருகிறார்.]

சிவபிரான் இவர்கட் கருள் புரிந்தபின் அச்சோதிலிங்கத்துட் கரந்தனர், பாரொடு விண்ணாய் நின்ற அச்சோதித்தம்பம் சுருங்கி இக்கலியில் கல்மலை உருவாயிற்று, இதுவே திருஅண்ணாமலை என்பர்.

## அருணசலப்புராணம் :

[ சைவஎல்லப்பநாவலர் ]

முற்காலத்து ஒரு ஊழியின் முடிவில் துயிலினின்று எழுந்த அயன், தான் துயின்ற காலத்து ஒடுங்கிய இந்நில உலகினை மீண்டும் முன்போற் படைத்தனன், அவ்வாறு படைத்தபின் இவ்வாறு ஒவ்வொரு நாளிலும் நடைபெறுதலை எண்ணி, " யான் படைக்கும், உலகு என் தூக்க நிலையில் அழிந்து

அழிந்து, என்னிலிருந்தே தோன்றி மீட்டும் தொழிற்படலால், யானே முழுமுதல்'' எனத் தருக்கினன். அப்போது திருமால் அவன் முன் தோன்றினர். "நீ என்னிலிருந்து தோன்றியவன். உன் போற் பலரை ஒடுக்கித் தோற்றிவித்துள்ளேன். எனவே உனக்கும் முதல்வனும் என்னை வணங்குக'', என்றார். அகந்தையாற் கோபங் கொண்ட அயனும், "நேற்றுப் பகலில் உனது அவதார உடல்களை நானே உருவாக்கியதை ஏன் மறந்தாய் ? '' என்றனன், இருவருக்குமிடையே கடும் போர் மூண்டது. இப்போரினுல் உலகும், உயிரினங்களும் நிலைதடுமாறித் துயருற்றனர்.

உயிர்களின் துயர் துடைத்தலே தன் கடமையாய்க் கொண்ட முதற் பொருளாம் சிவம் அவர்தம் கண்காண, "பாதாளம் ஏழின் கீழ் சொற்கழிவு பாதமலராயும், எல்லாப் பொருள் முடிவாம் போதார் புனை முடியுமாய்க் கொண்ட பேரொளிப் பிழம்பாக'' எதிர் நின்றான். அத்துடன் நில்லாது வானொலியால், "இச்சோதியின் அடியையோ அல்லது முடியையோ உம்மில் யார் கண்டிடினும் அவரே முழுமுதற்பொருளாவர்'' எனவும் அறிவித்தான். ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியாற்றூண்டுவித்தபடி, அயன் இச்சோதியின் முடியினைக் காண்பேன் எனத் தருக்குடன் அன்ன உருவில் பறந்து மேற் சென்றான். திருமால் அயனிலும் பக்குவம் பெற்ற ஆன்மநிலை கொண்டவராதலின், சோதியின் அடிகாண வராக உருவில் தம் முயற்சியைத் தொடங்கினர்.

நாற்பதினாயிரம் ஆண்டுகள் சென்றன. அன்ன உருவில் பறந்த அயன், சோதியின் முடி வளர்ந்து கொண்டே செல்வது கண்டான். அவ்வாறு அடிதேடிப் புவிதோண்டிச் சென்ற திருமால் அரனும் சோதியின் அடி நீண்டு கொண்டே செல்வது கண்டார். ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் சோதியின் முடியும் அடியும் ஆதிக்கும் அந்தத்துக்கும் உட்பட்டோரால் காண இயலாதவை என உணர்ந்தார். தம் முயற்சியைக் கைவிட்டு நில உலகு திரும்பித் தம்முன்னை உருக்கொண்டு சோதியாய் நின்ற முழுமுதலை வழிபடத் துவங்கினர்.

இந்நிலையில் மேலே பறக்க இயலாது அன்ன உருவில் தத்தளித்த அயன், மேலிருந்து கீழாக விழ்ந்து கொண்டிருந்த ஒரு தாழை மடலைக் கண்டு அதனைத் தன் அலகால்பற்றினர். அதனிடம் அது எங்கு நின்று வருகிறது எனவினவினர். அம்மடல், தான் சிவத்தின் முடியிலிருந்து விழ்ந்து கொண்டிருப்பதாய்ச் சொல்லியது. அயனும் தான் முடிகாணப் புறப்பட்ட வரலாறுகூறித் திருமாலிடம் தான் முடிகண்டு வந்ததாய்க் கூறினல், அப் பூவினுக்கு உலகில் பூக்களின் அரசுரிமை அளிப்பதாய்க் கூறினர் தாழையும் அதற்கிசைந்தது.

நிலம் திரும்பிய அயன், அன்ன உருவில் நின்றவாறே, "இச் சோதியின் மணிமுடிகண்டேன், இத்தாழை மடல் இதற்குச் சான்று'', என்றார். தாழையும் "ஆம்'' என்றது, உடன், அச்சோதியின் இடையில் சந்திரசேகரராய் நின்ற பெருமான், பொய் புகன்ற காரணத்தால் அயன் பிறரால் வழிபடும் நிலையை

இழக்குமாறு ஆணையிட்டார், தாழை இனி சிவ பூசனைக்கு உதவாது எனவும், தன்னினர், திருமாலுக்குத் தம் மடியாரில் முதல்ஸ்ரோம் நிலையளித்தார். கழி விரக்கம் கொண்ட அயன் தன் முன்னை உருவினைப் பெற இயலா நிலையில், அரன்தாளினைச் சரணடைந்து தம்மை மன்னிக்க வேண்டினர், திருமாலும் அவ்வாறே வேண்ட, '' தன்னடைந்தார்க்கின்பங்கள் தரும் பெருந்தகை '' அயன் தன் முன்னுருப் பெறவும், படைப்புத் தொழிலாற்றலை மீண்டும் பெறவும் அருள் செய்தார், எனினும் அயனுக்குத் தனி ஆலய வழிபாடு இல்லாது அந்தணர் பெறும் வழிபாடு அயனுக்காகும் என விதித்தார், அரனாணையால் பாரொடு விண்ணாய்ப் பரந்து நின்ற அச்சோதி உரு சுருங்கி கிருதயுகத்தில் மாணிக்க மலையாயும், திரேதாயுகத்தில் பொன் மலையாயும், துவாபரயுகத்தில் வெள்ளி மலையாயும், கலியுகத்தில் கல் மாலையாயும் நின்று சிவரூபமாய் வழிபடப்பெறுகின்றது.

'' உண்ணு முலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான் மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம் முழவதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவணம் அறுமே ''

திருஞானசம்பந்தர் :

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வார்
ஆடிப் பாடி அண்ணாமலை கைதொழ
ஓடிப் போம் நமதுள்ள வினைகளே. ''

திருநாவுக்கரசர் :

# திருமந்திரத்தில் அடிமுடிதேடலின் மெய்ப்பொருளியல்

* ( பிரமனையும் மாலையும் தெளிவடைவித்தல் )

**அதிகார இயைபு :** பிரளயத்தின்போது எலும்பாகவும் கபாலமாகவும் நின்ற அயனும் அரியும், மீளவும் அண்டங்கள் உண்டாதற்பொருட்டுப் படைப்புறுவர். அங்ஙனம் படைப்படைந்த அவர்கள், தம்மைத்தந்த முதல்வன் யாரென அறியமாட்டாதே திகைப்புறுவர். இந்தத் திகைப்பினுல் முதல்வன் எதிரே இருந்தும் தெரியமாட்டாதவராவர். அப்படித் தெரியமாட்டாது அலமரும் அவர்களுக்குத் திகைப்பு நீங்க இறைவன் என்ன செய்தான் என்பதைக் கூறுதல் முறையாகலின் இவ்வதிகாரத்தால் அதனைக் கூறலுறுகிருர் ஆசிரியர். இதனுல் அதிகார இயைபு விளங்கும்.

மற்றும், அடிமுடிதேடுதல் என்பதனுல், ஞானமும் விடுபேறும் நம்மறிவால் அறிந்து அடையப்படும் தன்மையன அல்ல என்பதும், அவ்விரண்டும் இறைவனருளால் உயிர்களுக்கு விளைவன என்பதும், அவனருள் என்பது நம் மருள் ஒழிந்தால் கிடைப்பது என்பதும், நம் மருள் அவனடியில் நம்முடிபட அன்பு மிக்கு வழிபடுவதனுல்தான் ஒழியும் என்பதும் இவ்வதிகாரத் தலைப்பினுல் நாம் தெரிந்துகொள்ளல் தக்கதாம். ஆருயிர்வர்க்கம் பேரின்புறற்காம் அடிப்படைச் செய்கையை இவ்வதிகாரம் நம்மனேர்க்கு உணர்த்தும் திறத்ததாமென்க.

## 1. பிரமன் மால் பேதைமைச் செயல்

பிரமனும் மாலும் ' பிரானேநான் ' என்னப்
பிரமன்மால் தங்கள்தம் பேதைமை யாலே
பரமன் அனலாய்ப் பரந்து முன்நிற்க
அரனடி தேடி அரற்றுகின்றுரே. ( பாடல் - 372 )

பிரளயத்தின் பின்னர் உலகம் முத்தொழிற்பட வேண்டிப் பிரமனுதியோர் படைப்புண்டசெய்தி முன்னரே கூறப்பட்டது. அங்ஙனம் படைத்தபோதிலும் இறைவன், தான் யாரும் அறியொணு நிலையனுகவே இருப்பன். அதாவது தன் எங்கும் நிறைதன்மையனுகவே நிற்பன் என்றபடியாம். தான் ஒரே அருள் வெளியாய் இருந்துகொண்டே தன் ஆற்றலை விந்துவில் கலக்தவன்; நாத முதலனவற்றைத் தோற்றுவிப்பன், அப்போது இறைவற்கு அருவம்

---

*இவ் ஆதீன வெளியீடு எண் : 146, " திருமந்திரக்கட்டுரை " - இரண்டாம் தந்திரம் - முற்பகுதி - பக்கம் 228 முதல் 261 - ஆதீனப்புலவர் தே. ஆ. ஸ்ரீநிவாசன் - 1961ம் பதிப்பு.

உருவம் என்னும் இருவகை வடிவம் இன்றும். தெரிவதற்கரிய பிரமமாகிய இந்நிலையிலேதான், அரிபிரமர்கள் திகைப்புற்றனர். கடவுள் வியாபகத்துள் ஏகதேசப்பட்டுக் கிடக்கும்எவரும், ( கடவுளின் திருவருள்வயப்பட்டா லல்லது ) கடவுளை அறிதல் இயலாது.

நிர்மானுஷ்யமான பாலைவெளியிலே இருவர்மாத்திரம் ஒருசமயம் நிற்கநேர்ந்தால், அவர்கள் உடனே அந்தப் பாலைவெளி முழுதுக்கும் தாமே தலைவர் என எண்ணித்தான்திருவர், மற்றொருவரைச் சந்திக்கநேரிடு மளவும் இந்தத் தலைமைக்கருத்து அவர்களை விடாது. பிறகு, அவ்விருவருள் யார் தலைவர் என்பதுபற்றிய விவாதம் முன்பு எழுந்ததும் மூன்றுமவரைக் காண நேரிட்டபிறகு முடிவுக்குவரும். அப்படித்தான் பிரளயப்பெருவெளியிலே இருக்க நேரிட்ட அரி பிரமரும், தம் தோற்றத்திற்கான காரணத்தைக் கருதாதவ ராகித் தம்மையே தனித்தனி தலைவராகக் கருதிக்கொள்ளலுற்றனர். இவ்வாறு தேவர்களிற் சிறந்தவர்களாயிருந்தும் கருதநேரிட்டமைக்குத் திருமூலர், பேதைமையாலே பிரானேநான் என்று கருதினரெனக் காரணம் காட்டுகின்றனர். அவர்கள், தம்மையே ஒருவருக்கொருவர் சுட்டியுணர்ந்தனர். தம் தோற்றத்திற் கான காரணத்தை அவர்கள் சிற்றறிவால் கருதினரிலர். இத்தகையதானது பசுஞான இயல்பு. ஆதலால் பேதைமையால் என்றனர் ஆசிரியர்.

இவ்விருவரும் நம்மினும் புண்ணியமிக்கவராவர். ஆதலால், இவர்கட்குப் பரமன் அவர்களறிய அனற் பிழம்பாய் அடி முடி தெரியவொண்ணுதபடி வளர்ந்தான். கூட்டுக்குள் அடைபட்டுள்ளசிங்கம், எவ்வளவு பராக்கிரமம் உடையதாயினும் அக்கூட்டுக்குள்ளேயேதான் மேலும் கீழும் பார்க்கலாம்; அலையலாம். அப்படித்தான் இந்த அரிபிரமரும் அடியையும் முடியையும் அறியமாட்டாமல் தேடிப்பார்த்துத் தம் வாலாமை தோன்றக் கதறினர். கதறினர், கதைவரலாறு நாமறிந்த ஒன்றாகலால், அடிதேடி என்று கூறப் பட்டிருப்பதுகொண்டு பிரமன் முடிதேடியமையையும் நாம் உணர்தல்கூடும்.

இவ்வரலாற்றிலிருந்து நாமும் நமது பேதைமையின் வன்மையை அறிந்து அதனை நீக்கினுலல்லது பதிஞானம் கிட்டாதென உணர்ந்து, அதற்கு அரனடியைப் பரவி அழுதலொன்றே உபாயமெனத் தெளியவேண்டியவராக உள்ளோம், இதன் முன்பாடலில் வானவர் மணிமுடி உடையவர் எனக் கூறப்பட்டுள்ளமை தெரிவோம். இப்போது அத்தேவர்கள்ள் தம்மணிமுடி அரனடி தோய அரற்றுகின்றாராயினர். '' அழுதால் உன்னைப் பெறலாமே '' என்ற உபாயம் இங்கு மேற்கொள்ளப்படுதல் காணலாம். இக்கருத்தை உள்ளடக்கியிருப்பது '' அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும் விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்போல் '' என்னும் திருவெம் பாவை வரி. விண் இங்கு விந்துவெளியாம். மற்றும், இப்பாடற்சொற்களை ஒட்டியிருக்கும், 'பிரமனரி என்றிருவரும் தம் பேதைமையால்' எனத் தொடங்கும் திருத்தோள்நோக்கப் பாடலையும் படித்துப் பார்க்கலாம். **(36)**

## 2. ஞானச்செயல்

ஆமேழ் உலகுற நின்ற எம் அண்ணலும்
தாமேழ் உலகில் தழற்பிழம் பாய் நிற்கும்
வானேழ் உலகுறும் மாமணி கண்டனை
நானே அறிந்தேன் அவனுண்மை யாலே, - ( பாடல் - 373)

இப்படிப் பிரமனும் மாலும் அறியமுடியாத அண்ணலைத் தான் அறிந்ததாகத் திருமூலர் இப்பாடலில் சொல்லிக் காட்டுகின்றார். போற்றித் திருவகவல் இறைவனை விசுவரூபி, எனக் கூறிக் காட்டுவதாகும். அதனில், 'பரம்பரம் சோதிப்பரனே' என்று சொல்லியிருப்பது காணலாம், மற்றும் அதனில், "நாத என்று அரற்றி உரைதடுமாறி உரோமம் சிலிர்ப்பக் கரமலர் மொட்டித்து இருதயம் மலரக் கண் களிகூர நுண்துளி அரும்பச் சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர் தாயே ஆகியவன் " பரமன் என்று எளியனும் திறமும் கூறப்படுதல் அறியலாம். மேலும் இங்கு " உலகமே உருவமாக யோனிகள் உறுப்பதாக இலகுபே ரிச்சா ஞானக் கிரியை உட்கரணமாக அலகிலா உயிர்ப்புலன்கட் கறிவினை ஆக்கி ஐந்து நலமிகு தொழில்களோடு நாடகம் நடிப்பன் நாதன் " என்னும் சித்தியார்ச் செய்யுளும் நோக்கற் குரித்தாம். இதனுல் எல்லா உலகுமாய் நின்றவன் பரமன் என்பது தெரியப்படும், பிரமராதியர்க்கு வெளியே தழற்பிழப்பாய் நிற்கும் பரமனே எல்லா உலகுயிருள்ளும் சோதியாய் நிற்கின்றுனவன். இப்படி உள்ளும் புறம்பும் ஒளியாகி நின்றிடும் பரனை, அவ்வொளி பெற்றேதான் காணமுடியும். அங்ஙனம் காண விரும்பித் தற்போத மற்றுச் சிவபோதத்துக்கு ஏங்கி நிற்பார்க்கு இறைவன் வெளிப்பட்டுக் காட்சி தந்துதவுவன். இந்த எளிமைப்பாடு தெரியும் பொருட்டே மாமணி கண்டனை என்று தேவர்கு அபயமளித்துதவிய செய்தியை அமைத்துச் சொல்லுகின்றுர் ஆசிரியர். அக்கறை, மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே " என்பது மேற்கோளாகக் கருதற்குரியதாம்.

நாம் ஆண்டவனிடம் அடிமைத்திறம் பூண்டு அவனையே ஆள்வோனுக முற்றிலும் கொண்டிட்டால், இறைவன் காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல, உண்ணின்றும் வெளிப்பட்டும் அறிய வைப்பான். அப்படித் திருமூலர் முயன்று பார்த்து வெற்றி கண்டவராதலால் " கண்ணுல் - (அருட்கண்ணுல்) யானும் கண்டேன் காண்க " என்பதையொப்ப நானே அறிந்தேன் அவன் ஆண்மையாலே என்று கூறுகின்றுராயினுர். இது தன்னனுபவம் கொண்டு கூறப்படுவதாதலால் பரஞானத்தால் பரம்பரனைப் பார்த்திருக்கும் நிலைபெற்றுத் திருமூலர் கூறுவதாகும். 'நானே' என்பதில் உள்ள ஏகாரம், " எனக்கே பறைதருவான் " என்ற இடத்து ஏகாரம் போல்வதாகும். இச்செய்யுளால் இறைவனுடைய அதீதநிலையும், கோசரமாம் நிலையும் கூறப்பட்டதென்னலாம். நாம் பக்குவமுற்றுல் கண்ணுதலால் காட்டப்பெற்றுக் காணலாம் நிலை எய்தக் கூடும் என்று தெரிவோமாக! (37)

## 3. சர்வ அந்தரியாமிநிலை (சர்வ உபாதான நிலை)

ஊனாய் உயிராய் உணர்(வு) அங்கி ஆய்முன்னம்
சேணாய் வான்ஓங்கித் திருஉருவாய் அண்டத்
தாணுவும் ஞாயிறும் தண்மதியும் கடந்(து)
ஆண்முழு(து) அண்டமும் ஆகிநின் றானே. (பாடல்-374)

கடவுள் எந்தவித உபாதியுமில்லாதவன். ஆதலால் அவனுக்கு யாருடைய உதவியும் தேவையில்லை. எந்த அண்டமும் அவனுக்குத் தேவையில்லை. என்றாலும், இத்தகைய உபாதி ஒன்றும் இல்லாதவனாகிய உயர்வுடைய பரமனே, எல்லாவிதக் குறைபாடுகளும் கொண்டுள்ள உயிர்களை ஈடேற்றவேண்டுமென்கிற இணையற்ற கருணை உடையவனாக எப்போதும் உள்ளான். இந்தக்கருணையை நீக்கிட அவனும் ஆகாது. எனவே, கருணை ஆண்டவனைவிட்டுப் பிரியாத இயல்பாகும். இந்த நீங்காக் கருணைநிலையமாக இறைவன் இருத்தலால் அவர் உயிர்களுக்கென ஓய்வின்றி உழைத்த வண்ணம் இருக்கிறான். இந்த அவனுடைய உழைப்பைத் திருக்கூத்து என்பர். இந்தக் கூத்தினால் விளையும் பயன் உயிர்களுக்கேயன்றி இறைவனுக்கிலது. ஆதலால், இறைவன் உயிர்களுக்கென என்னென்ன உதவிகளைச் செய்யவேண்டியவனாகிறான் என்பதை இப்பாடல் பகருவதாகும்.

உயிர்கள்யாவும் மைக்குள் புதையுண்ட பொன்னைப்போல் அறிவு விளக்கமின்றிக் கேவலப்பட்டுக் கிடக்கின்றன. இந்தக் கேவலநிலையானது உயிர்களின் காரணாவத்தைகள் மூன்றனுள் முதலதாகும். இவையன்றி உயிர்கள் அனுபவிக்கும் காரியாவத்தைகளும் உண்டு, அவை சாக்கிரம் முதலிய ஐந்தாகும். இந்த அவத்தைகளினால்தான், புடமிடப்பட்ட பொன்னானது மையும், மாசும், களிம்பும்நீங்கி மாற்றில் உயர்வது போலச் சுத்தம் அடைகின்றன ஆன்மாக்கள். இந்த அவத்தைகளுக்கு ஆவன எல்லாம், உயிர்கள் தாமாகவே ஆக்கி அமைத்துக் கொள்ள இயலாது, ஆகையால் இறைவன், உயிர்களிருக்கவும் அறியவும் அனுபவிக்கவும் தேவையான யாவற்றையும் ஏதும் குறைவின்றித் தருகிறான். இதுவே, இறைவன் புரியும் மிகப் பேருதவியாகும். இந்தவகையில், கண்ணுக்குப் பார்வையொளியும் விளக்கொளியும் பொருட் காட்சியும் அமைவதுபோலவே, உயிர்க்கும் அமைய வேண்டியுள்ளது. அவ்வாறு அமைவனற்றுள் உயிருக்கு உடம்பு தேவைப்படுகிறது. இங்ஙனம் தேவைப்படும். மூலஉடம்பையும் மாற்றுடம்புகளையும் ஒரேமுறையிலும் வினைக்கு ஏற்பவும் இறைவன் தந்திடுகிறான், ஆதலினால்தான், நம் உடம்பு நமக்குச் சொந்தமான உடைமையன்று; இறைவனுக்கே உடைமையாயுள்ளது. அடுத்த படியாக, காரணஉடம்பினுள் உயிரை நிறுத்தியுதவுகிறான் கடவுள். இல்லாவிடில் அவ்வுடம்பினுள் புக்கிருக்கும் ஆற்றல் உயிருக்கு உண்டாகாது. உடம்பும் உயிரும் ஒன்றுபட்டால் போதாது. அதனில் உணர்ச்சி ஏற்படவேண்டும் ஆகவே அவ்வுணர்ச்சிக்கிடமான உள்ளமும் இறைவனருளால் ஏற்படுகிறது.

இவ்வளவும் இருந்தாலும், ஜீவனது உடம்புதோறும் உள்ளிருந்து உள்ளத்தைத் தொழிற்படுத்தி அறிவடையவேண்டுவது முக்கியமாதலால்,

இறைவன் அங்கியாகிய உயிருள் அமர்ந்திடுகின்றார். இப்படி ஒரு பொருளோடு இறைவன் கலக்கும் நிலையினையே நடத்த இயல்பு என்பர். இது எல்லா உயிர்கட்கும் பொதுப்படச் செய்யப்படுதலின் இதனைப் பொது இயல்பு என்பர். இந்நிலைமைகள்யாவும் உயிருக்குத் தருபவன் இறைவனுவான். இதனையே, ஊனுய் உயிராய் உணர்வு (ஆய்) ஆங்கிஆய் என்று கூறிக் காட்டியுள்ளார் ஆசிரியர்.

இவ்வாறு உயிர்க்குயிராய் இறைவன் தழைத்திடும் ஒரே இயல்பினன் அல்லன். அங்ஙனம் தழைக்க முன்பேயும் எவ்வுயிர்க்கும் எட்டாத சொரூப (சிறப்பு) நிலையும் உடையவனுவன். இந்தச் சொரூப வல்லமைதான் யாவற்றையும் புரிகின்றதாகும். இது நம்மனோர் அறிவுக்கு எட்டாத நிலையதாதலின் சேண் ஆய் எனப்பட்டது.

மணியை அடிப்பதனுலேயே சப்தம் நம் காதுக்கு வந்துவிடாது. கேட்கும் காதுடைய நமக்கும் மணிக்கும் இடையே அந்த நாதம் பரவி வருவதற்கும் தொடர்பு கொள்ளுவதற்கும் கண்ணுககுப் புலப்படாத வகையில் ஆகாசம் இருந்து உதவுகிறது. இப்படி யாவற்றின் நடைபேற்றிற்கும் இருப்புக்கும் ஆதாரமான வானுகவும் எல்லையின்றி இறைவன் உள்ளான். இதுவே வான் ஓங்கி எனப்படுவதாகும்.

அப்பால் ஊனுள்தங்கிய உயிர்கள் அனுபவத்தா லறிவடைவதற்கு எத்தனையோ போகப்பொருள்கள் தேவைப்படுகின்றன. இந்தப் பொருள்களெல்லாம் நம்மையும் ஆண்டவனையும் முறையே அறிவதற்கு அனுகூலப்படும் பண்டங்களேயாகும். கண்ணுனது, தன்னைத் தானே பார்த்துக்கொள்ள முடிவதில்லை. ஆனுல் ஒரு கண்ணுடி மூலம் தன்னைக் காண்கிறது. பிறகு தானிருக்கும் முகத்தையும் முகத்தை உடையவனையும் பார்த்தறிகிறது. இப்படித் தன்னழகை அறிவதற்கே ஒரு கண்ணுடியைக் கண் காணவேண்டியுள்ளது. அதுபோலவேதான், ஆத்மா தன்னையும் தலைவனையும் காணப்பெறும் காட்சி எய்துவதற்காகப் போகப் பொருட்கள், கவர்ச்சிகரமானவையாகத் தேவைப்படுகின்றன. இவையெல்லாம் இறைவனுதவியால் இயைகின்றன என்பதை, திரு உருவு ஆய் என்ற தொடர் காட்டும்.

இதுகாறும் தனுகரணபோக சாதனங்களை இறைவன் தந்தருளுகிறுன் என்பது கூறப்பட்டது. இனிப்புவன சாதனங்கள் தரப்படுவதும் சொல்லப் படுவதை அண்டம் தானுவர், ஞாயிறும் தண்மதியும்... ஆகி நின்றுனே என்ற இடம் தெரிவிப்பதாம். எனவே, இறைவன் புவனங்களை ஏற்படுத்தி அவற்றிற்குக் கம்பம்போல் ஆதாரமாகவும் இருந்து, புவன விளக்கங்களாகிய சூரியன் சந்திரன் ஆகியவற்றையும் அருளுகின்றுன் என்பதை நாமறியக்கூடும். தண் என்றமை ஞாயிற்றின் வெம்மையை உணர்த்தும் போக்குடைய சொல்லாம்.

இங்ஙனம் உயிர்களுக்குத் தனுகரண புவனபோகங்களை அளித்துதவுவதே அன்றி எல்லாவிதமான மாயா புவனங்களையும் தன்னுள் ஏகதேசத்தில் அடங்குமாறு நிறுத்தி அவற்றையெல்லாம் கடந்து தன் சர்வ வல்லமையால் யாவகை அண்டங்களையும் தோற்றுவிக்கின்றுனுவன் இறைவன், இதனை,

' கடந்து ஆண்முழுது அண்டமும் ஆகி நின்றான் ஏ ' என்பதனால் அறியலாகும். நின்றானே என்பதனால், இவற்றையெல்லாம் ஒடுக்கி விடுங்காலத்திலே தான் ஒருவனேயாகி நிற்கின்ற தனிப் பொருளாவான் பெருமான் என நாம் உணரலாம். " ஊன் கருவின் உள்நின்ற சோதியானே "; " பொற்றூணைப் புலால் நாறு கபாலம் ஏந்தி ... காளத்தி மலையான் " என்னும் அப்பரடிகள் திருவாக்குகள் ஈண்டு நோக்கத் தக்கனவாம். (38)

## 4. நாடஒண்ணாநிலை

நின்றான் நிலமுழு(து) அண்டத்துள் நீளியன்
அன்றே அவன்வடி வஞ்சினர் ஆய்ந்தது
சென்றார் இருவர் திருமுடி மேற்செல
நன்றாம் கழலடி நாடஒண் ணாதே. (பாடல் - 375)

இச்செய்யுள் அந்தாதித்தொடையாக உள்ளது. சர்வ அண்டங்களையும் தனனுள் அடக்கி அவற்றினும் அப்பாலாய் எப்பாலும் உள்ள தன்மையன் இறைவன். அத்தகையவன், நிலபுவன முழுவதும் கலந்தும் வேறாகவும் நின்றவனுவன். இதனால் சர்வ புவனங்களும் புவனபதிகளும் இறைவனால் தொழிற்படும் பரதந்திர முடைமையேயன்றிச் சுதந்திரமாம் இயல்பினவும் இயல்பினருமல்லர் என்பது புலப்படும். இதனை அண்டத்துள் நீளியன் நிலமுழுது(ம்) நின்றான் என்பதனால் தெரியலாம். ' ஏழண்டத்தப்பாலான் இப்பால் செம்பொன் புனத்தகத்தான் ' என்பது திருக்காளத்தித்தாண்டகம்.

இவ்வாறு உள்ளும் புறம்புமான ஒப்பற்ற பரம் பொருளை அவன் ஓங்கழலாய் எழுந்தபோது இன்னதென அறியமாட்டாமல் அஞ்சினர் ஆதி மாலயனுவார்கள். ஆதலின் அவன் பிரளய ஊழிக்காலத்து வடிவினை எவரும்கண்டு அஞ்சாதிருக்க இயலாது, இஃது அவ்விறைவனுடைய பெருநீர்மை பேசுவதாகும். இது அன்றே அவன் வடிவு அஞ்சினர் என்பதனாலறியப்படும். இவ்வாறான அறியொணா மலர்ச்சோதியானாகிய இறைவனை இவ்வண்டத்தும் இருவர் முன்னம் தம்செருக்கினால் ஆராய்ந்து கண்டுவிடலாமெனத்துணிந்து தேடினர். அவர் அண்டாதிபதிகளான பிரமனும் மாலும் ஆவர், ஆராய்ச்சியறிவினால் ஆண்டவன் அறியத்தக்க வனல்லன். அநுபவ ஞானத்தால்தான் அறியலாகும், அநுபவஞான மென்பது பதிஞான மாகும். இப்பதிஞானத்தை மதியாதே ஆராய்ச்சியறிவால் பிரமனும் மாலும் முறையேமுடியும் அடியும் காணமுற்பட்டனர். இதனை, அது ஆய்ந்து இருவர் சென்றார் என்ற தொடர் செப்புந் தரத்ததாகும்.

அங்ஙனம் முடியினைத்தேடிய பிரமனால் காண ஒண்ணாதபடித் திருமுடியானது அப்பாலுக்கு அப்பாலாய் மேற்சென்றுகொண்டே இருந்தது. அங்ஙனமே திருவடியானது திருமாலால் நாட ஒண்ணாதபடிப் பாதாளம் ஏழினும் கீழ்ச்சென்றுகொண்டே இருந்தது, மேலே கூறப்பட்ட இருவரும் தத்தம் அண்டத்து அடிமுடி யளவும் தான் ஆராய்ந்து தேட முடிந்தவர்களாவர்,

அப்பாலும் முடியும் அடிகளும் சென்றமையால் காணமுடியாதவராயினர், திருமுடிமேல் செல்ல, நன்று ஆம் கழல் அடி நாட ஒண்ணாதே என்பது இதனைக் கூறுவதாகும்.

கூற்றுதைத்துக் காக்கும் அடியாதலின் கழல் அடி எனப்பட்டது. பிறவிப்பிணிக்கு மருந்தாதலின் நன்றும் அடி எனப்பட்டதாகும். நன்றும் என்றமையால் தற்போதமற்றார்க்கு எளிவந்து நன்மைபுரிவன திருவடிகள் என்பது பெறலாம். சுந்தரர் பொருட்டாகப் பரவையார் இல்லிற்குப் பானுட் கங்குலில் நடந்து நலம் செய்தன இத்திருவடிகள் என்பது உதாரணமாகும். நாம், பிறவிக்கடல் கடத்தல் பொருட்டாகப் புணையொத்த திருவடிகளையே பற்றவேண்டும் என்று தெரியலாம். நாட என்பதனுல் நாடுதல் அரிது; நண்ணுதல் எளிது என்பது கருத்தாகக்கொள்ளலாம். (39)

## 5. திருப்பாதச்சிறப்பு

**சேவடி ஏத்தும் செறிவுடை வானவர்**
**மூவடி தாளன் ருறும் முனிவரும்**
**பாவடி யாலே பதம்செய் பிரமனும்**
**தாவடி யிட்டுத் தலைப்பெய்து மாறே** **(பாடல் - 376)**

கடவுள் எனப்படும் அகண்டாகார சோதிப்பெரு வெளிக்குள்ளே மைபொதி சிற்றொளி விளக்குகள் ஏகதேசம் செறிந்திருப்பனபோன்று ஆன்மாக்கள் தங்கியிருக்கின்றன. எனவே, எவ்வகை ஆன்மாக்களுக்கும் இறைவெளியே அயலற்ற ஆதாரமாக உள்ளதாகும். இந்த நிலைமையை உயிர்வருக்கங்கள் முந்தி உணர வேண்டும். அங்ஙனம் உணர்கையில், உணர்வின் மூர்த்தியாகிய பரமன் உணர்வுக்குள் ஒளியாய்த் தான் ஒளிரும் உண்மைநிலை காட்டி ஆட்கொள்வன். இந்த உணர்ச்சி நம் உள்ளத்தே நிலைபெற வேண்டுமானுல் கரையற்றதான காமக்கடலை நாம் கடக்கவேண்டும். ஆசையற்ற தெய்வ உணர்வே பக்தி எனப்படும்.

ஆசை என்பது இந்திரியங்களின் வாயிலாக விளைகின்றது. ஆகவே இந்திரியங்களைக் கட்டுப்படுத்தித் தெய்வ உணர்ச்சியை நாம் பலப்படுத்த வேண்டியுள்ளோம். இதுவே உண்மையன்பாய் ஒழுகும் முறையாம். இவ்வாறன்றி, உள்ளத்தே போக விருப்புடன் வழிபடுதலும், அண்டமாளும் அதிகார விருப்புடன் பூசித்தலும், இதயபூர்வமான பணிவின்றிய மந்திரம் செபித்தலும் இறைவனைக் காணும் நன்னெறி ஆகமாட்டாவாம். ஏனெனில் இம்மூன்றுவகை உபாயங்களும் உள்ளத்தை ஒன்றியிருந்த நிலையவிடாமல் தாவடியிட்டு ஓடுமாறு செய்வனவாம். மேலே கூறப்பெற்ற கருத்துக்களை, “உரைமாண்ட உள்ஒளி உத்தமன் வந்து உளம்புகலும் – கரைமாண்ட காமப்பெருங்கடலைக் கடத்தலுமே - இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்து ஓடத் - துரைமாண்டவா பாடித் தோணேக்கம் ஆடாமோ ” என்னும் திருவாசகப்

பாவினில் காணலாகும். மற்றும் இறைவன் திருவடிப்பெருமையைத் திருவாசக நூலின் தொடக்கத்திலே அருளிச் செய்யப் பெற்றுள்ள முதல் பதினைந்து வரிகளின் கருத்துக்களாலும் நாம் தெரியலாம்.

அமரபோகங்களிலே ஆசை வைத்துக்கொண்டே அகத்தினை அலையவிட்டு அமரர்கள் ஆவார். இறைவனுடைய செஞ்சரணங்களைக் கூட்டமாகக்கூடி வழிபடுவதனாலே சந்திக்க மாட்டார்கள் என்பதைச் சேவடி எத்தும் செறிவுடை வானவர்...தாவடியிட்டுத் தலைப்பெய்துமாறு எங்ஙன் ? என்று வினவி ஆசிரியர் தெருட்டுகின்றாராயினர். 'வான்வார்கழல்' ஆதலாலும், 'செம்மை நலம்' செய்தற்கே விரைவன ஆதலாலும் சேவடி என்றார் ஆசிரியர். ஆசை அறுப்பவர் தன்னந் தனியே இருந்து தியானிக்கவே விரும்புவர்.

"தனியே இருந்திடற் கெண்ணினேன்" என்பர் தாயுமானாரும். அறிவும் தியானமும் ஒருபோதும் பொதுவுடமை ஆகமாட்டா, கூட்டங்கூடித் தீர்மானம் செய்வதற்காக இறைவன் இணங்குபவனல்லன். இதனைச் செறிவுடை என்றசொல் செப்புவதாகும், சிவபோதநிழலில் திருமூலரும் மூவாயிரம் ஆண்டளவும் தனியேயிருந்தே சலனமற்ற உள்ளத்துடன் போற்றியமை நாம் தெரியத்தக்கதே. அடுத்தபடியாக, மாபலி ஆண்ட அண்ட முழுதும் தனதாக்கிக்கொள்ள 'முறை நிரம்பாவகை' இரந்தான் திருமால், இது அதிகாரவிருப்பினைத் தெரிவிக்கும் இயல்பினதாகும். பலியின் முடியினைத் தன்னடிக்கீழ்க்கொண்ட முறைமையைத் தன்விஷயத்தில் திருமால் எண்ணிப் பார்த்தானிலன், என்ற குறிப்புடையது, மு அடிதா என்றுனும் என்னும் தொடர்.

இறைவன் சேவடியினையன்றி வேறு எதனையும் உள்ளத்தே கொள்ளாமல். அலையற்ற கடல்போலவும், அசையாத மலைபோலவும், காற்றால் கலங்காத தீபஒளி போலவும் முனிவர்களாவார் வழிபாடு இயற்ற வேண்டியவராவர், "உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகியரும் மெள்ள எழுந்து" எனனும் இடத்து விரிவுரை ஈங்குப் பொருத்திக்காண்டல் தகுவதாம், தம்மை மறந்திடாமல் தியானிக்கும் முனிவர்களுக்கும் இறைவனடி கிட்டாது என்பதை முனிவரும் என்பதனால் அறியலாம், இஃது இந்திரிய நிக்கிரகத் தேவை கூறியவாறும்.

மந்திரங்கள் இதயததினின்றும் வெளிப்பட்டால்தான் இதயம் வேறு நினைவற்றிருக்கும் அங்ஙனம் அன்றிச் சுவரபேதம் முதலான வெளி விஷயங்களிலே மனம் ஈடுபட்டிருக்கும்போது வாயினின்றுதான் மந்திரம் வெளிப்படும், இவ்வாறு கூறப்படும் மந்திரப்பதங்கள், நாதங்கடந்த இறைவன் பதங்களை எய்துவிக்கும் திறப்பாடுடையன ஆகா என்பதைப்பா அடியாலே பதஞ்செய் பிரமனும் என்னுந்தொடர் கூறுவதாகும். இறைவனருளில் மூழ்கப் பெற்றார்க்கே அவனடிகிட்டும் என்பதைத் தாவடி இட்டுத் தலைப்பெய்துமாறே! என வினவியும் எள்ளியும் கூறிக்காட்டியுள்ளார் ஆசிரியர் என்னலாம், இச்செய்யுளாலே அன்புகலவாமல், ஆசை, கூட்டம், அதிகாரம், அலையும் நெஞ்சம், ஆரவாரம் இவற்றை உபாயமாகக்கொண்டு இறைவனை அடைந்திடல் எளிதன்று! என நாம் தெரிதல்தகும். (40)

## 6. மும்மூர்த்தியர் முதற்கடவுளல்லர்

தானக் கமலத் திருந்த சதுமுகன்
தானக் கருங்கடல் ஊழித் தலைவனும்
ஊனத்தின் உள்ளே உயிர்போல்உணர்கின்ற
தானப் பெரும்பொருள் தன்மைய தாமே - ( பாடல் - 377)

கடவுள் உயிர்களை ஈடேற்றும்பொருட்டே தொழில்புரியும் தன்மை உடையவனாகிறான். இல்லையாயின், கடவுளுக்குத் தடத்த இலக்கணமே தேவையில்லாமற்போய்விடும். ஆனால், அவர், நாமாகவும், நம்மின் வேறாகவும், நம் உடனாகவும் இருந்து, ஊனும் உயிரும்போலவும், கண்ணொளியும் கதிரோனும் போலவும், உயிரும் உணர்வும்போலவும் நம்மை நடத்தி வருகின்றார். அவர் இதற்காக ஐந்தொழில்கள் ஆற்ற வேண்டியுள்ளார். அவை படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவாம், முதல் மூன்று தொழில்களும் நம் உடம்பைப்பொறுத்தவை ஆம். இறுதி இரண்டும் நம் அறிவைப் பொறுத்தன ஆம். உடம்பைப் பொறுத்தனவாம் முத்தொழில்களையும் பிரமன், மால், உருத்திரன் ஆகியவர்களைத் தந்து நடத்துகின்றான். பின் இரண்டையும் தன்னுடைய திரோதானம் திருவருள் என்னும் இருவித சத்திகளைக் கொண்டு நடத்துகிறான். ஆகவே இவ்வைந்தொழில்களையும் பேரளவில் நடத்துபவர்கள் பிரமன் முதலானவர்களாயினும், உண்மைத் தன்மையில் நடத்துபவன் பரமனே ஆவன்.

மேற்கூறப்பட்ட ஐந்தொழில்களுள், முதல் மூன்று தொழில்கள் நம் உடம்புபற்றியவையாக இருத்தலின், அம்மூன்று தொழில்களே இறைவன் புரிபவை என எண்ணுகிறோம். அப்படி எண்ணுவதிலும், படைப்பவனை இறைவன் எனவும், காப்பவனை இறைவன் எனவும், அழிப்பவனை இறைவன் எனவும், நம்பிவிடுகிறோம். அப்படி நம்புவதிலும், இந்த மூவரையும் ஒருவரே நடத்துவதனால் அங்ஙனம் நடத்தும் இயல்பினரே முதல்வர் ஆவர் என நாம் துணிந்திடல்வேண்டும், மேற்கூறப்பட்ட மூவரும் அண்டங்கள்தோறும் வேறு வேறாக உளர். ஆதலால் பல பிரமர்களும், பல மாயோன்மார்களும், பல உருத்திரர்களும் இருக்கலாகின்றனர். எல்லாப் பிரமர்களும் ஆதிப்பிரமன் ஆணைப்படி நடக்கவேண்டியவர் ஆவர். அவ்வாறே, மாலோன் தொகுதியர் ஆதிமாலவன் கருத்தின்வண்ணம் ஒழுகவேண்டியவராவர். அப்படியே உருத்திரர் தொகுதியருமாவர். ஆகவே, ஒவ்வொருதொகுதியரின் தலைவரும் இறைவன் ஆணைப்படி நடப்பவராவர். எனவே, இறைவனே அவர்களின் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் இருந்து நடத்துகின்றாராவர். ஆகவே, பரம்பொருளின் இயல்பன்றி இவர்கள் தமக்கென வேறான இயல்புடைய சுதந்தரர் ஆக மாட்டார்கள். இவ்விஷயத்தையே இப்பாடல் உணர்த்துகின்றதாகும்.

**கமலத்தானத்து இருந்த சதுமுகன்(உம்) :**

பிரமனுக்கு இருக்கை கமலம் ஆகும். ஆனால் இறைவனுக்குரிய தடத்த இருக்கை அப்பிரமனின் இதயக்கமலம் ஆகும். இறைவன் முக்காலத்தும்

ஒத்தியல் பண்பினராவர். பிரமன் அவருக்கான ஊழியில் மறைந்திடுவன். இப்படியே, ஒவ்வொருவரும் பிரளயப் போதில் மறைவர். எனவே, இவர்கள் முக்காலத்தும் தத்தம் தானங்களிலே நிலைத்திருப்பாரல்லர் ஆவர். ஆதலின், ஆசிரியர் இருந்த என்றார். "முக்காலத்தும் ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழும்காலத்தானே" என்பது இலக்கண விதியாம். முகங்கள் பலவாயிருத்தலால் பெருமை ஏதுமில்லை என்பதைச் சதுமுகன் என்ற சொல் காட்டவல்லதாம். தானக் சருங்கடல் என்பது மாயோனைக்குறிக்கும் தொடராம். பிரளயக் கடல் ஒன்றே நிற்க, மாயோனையும் இறைவன் ஒடுக்கிச் சொள்ளுதலை இத்தொடர் குறிப்பதாகும். ஊழித் தலைவனும் என்பது அந்தந்த ஊழி அளவை நிகழ்ந்துபவரைக் குறித்திடும். தலைவன் என்றமையால், முதல்வன்போலும் தோற்றமுடையர் இவர் என்பது தெரியலாம்.

இவர்கள், முதல்வன் தொழிலை ஆற்றற்குரிய கருவிகளை நிகர்ப்பர் என்பதை ஊனத்தின் உள்ளே உயிர்போல் என்ற தொடர் குறிக்கும். இவர்களையும் அவர்களறிவுக்கறிவாய் இருந்துநடத்தும் முதன்மை இறைவற்கு உள்ளமையை உணர்கின்றதான அப்பெரும் பொருள் தன்மையது ஆம் என்பது தெரிவிப்பதாகும். பெரும்பொருள் என்பதனுல் ஏனையோரின் சிறுமை உணர்த்தப்பட்டது. தன்மையது என்றமையால், இறைவன் சங்கற்ப நீர்மையே இவர்களை நடத்துகின்றதென நாம் உணருதல்கூடும். இதனுல் ஐந்தொழில் ஆட்டமும் ஒருவனுலேயே நிகழ்த்தப்படுகின்றதென்ற உறுதி நாம் கோடல் வேண்டும் என்க. இதனுல் பரிணாமவாதம் செல்லாதென்பது தெரியப்படும். "பற்றுமாகி வானுளோர்க்கு" என்னும் தேவாரம் ஈண்டு மேற்கோளாம். (41)

## 7. அருள்கூடும் மார்க்கம்-இறைவன் ஆணைவழி ஒழுகுதல்

ஆலிங் கனம்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேல்இங்ஙன், வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண்(டு)
ஆலிங் கனம்செய் துலகம் வலம்வரும்
கோலிங் கனமஞ்(சு)அருள் கூடலும் ஆமே. (பாடல் - 378)

ஓர் அரசன் குடிமக்களின் நன்மைக்காகவே அரசியல் ஒச்சுவான். குடிமக்களும் அவ்வரசனிட்ட ஆணைப்படி நடக்கும் கடமை உடையவர் ஆவர். அரசியலை நேர்மையாக நடத்தும் பொறுப்பைக் குடிமக்களும், குடிமக்களைப் பாதுகாக்கும் பொறுப்பை அரசனும் பரிமாறிக்கொண்டு அனுசரிப்பார்களானுல் அதுவே எல்லோருக்கும் சொர்க்க வாழ்வளிக்கும். இதற்காகவே அரசியலில் அநேக ஏற்பாடுகளும் சட்ட திட்டங்களும் தண்டனைகளும் நிறைந்துள்ளன. 'மான் உயிர் என்பது அறிகை" வேந்தர்க்குக்கடன் ஆகும். ஆதலின் அரசனும் குடிமக்களும் அறமே ஆற்றல் என்று நம்பிக் கடமையைச் செய்ய வேண்டியவராவர். இந்த அடிப்படையைக்கொண்டு இப்பாடற்பொருளை நாம் ஆராய்வது பொருத்தமுடையதாகும்.

ஆலிங்கனம் செய்து எழுந்த பரஞ்சுடர் :

உலகையெல்லாம் ஒளி அடையச் செய்யும் சுடர் சூரியனே. அதுபோலச் சர்வாண்டங்களையும் பாதுகாப்பவர் கடவுள் ஒருவரே. தன்னின் மேலானவர் ஒருவரை இல்லாதவரே கடவுள். சுடுவதும் ஒளிர்வதும் கொண்டதே சுடர் ஆகும். ஆன்மாக்களிடம் உள்ள அறியாமை சுடப்பட வேண்டும். அறிவு ஒளிர்த்தப்படவேண்டும். ஆதலால், கடவுளைச் சுடர் என்பர். சுடருக்கு ஒருவிதமான ஆற்றல் உண்டு. எரிந்து கொண்டிருக்கும் நெருப்பினிடம் அதற்கு உகந்ததான நெய்யை ஊற்றினல் மண்டி எரியும். அதற்குப் பதிலாக நெருப்பை அவிக்கக்கூடிய குப்பையைக் கொட்டினல், பெருநெருப்பானது அந்தக் குப்பை கூளத்தில் உள்ள ஈரத்தைச் சுட்டுப் போக்கிப் பிறகு அதனையும் தான் ஏற்றுக் கொண்டு எரியச்செய்து மண்டுகிறது. எனவே, தன் விரோதியையும் தன்னை அடைந்தால் தன் வியாபகத்துள் அடக்கித் தன்மயமாக்கிக் கொள்ளும் திறமை சுடருக்கு உண்டு என்பது விளங்கும். சாமானியச் சுடருக்கே இவ்வகை இயல்பிருத்தலை நாம் அறிகிறோம். இறைவனுகிய சுடர் எல்லையற்ற வகையில் இவ்வாற்றல்களை உடைய பொருளாகும். ஞானிகளை - தன் ஆணைவழி நிற்பாரை - உவந்து ஏற்று இன்புறச் செய்கின்றது இறையாம் சுடர்.

அன்றியும் அறியாதவராயினும் தன்னடைந்தாராயின் அவர்களையும் ஏற்றுக் கொண்டு அறியாமை போக்கி அறிவளித்து இன்பம் உறச்செய்கின்றது இறைச்சுடர். “ தன்னடைந்தார்க்கு இனியன் இடைமருதனே ” என்ற இடம் கருதத்தக்கதாகும். “ வைதாரையும் வாழவைப்போன் ” என்பதிலும் இக்கருத் திருத்தல் காணலாம். இத்தகையதான, ஆன்மாக்களை உகந்தேற்று இன்பு அளிக்கும் திறம் கடவுள் ஒருவருக்கே உளது. ஆதலின், பரம் சுடர் எனலானுர் ஆசிரியர்.

மற்றும், பரம்சுடர் என்பது பரிபூரண ஞானத்தைக் குறிக்கும் ஓர் உருவகக்குறி ஆகும். பரிபூரண ஞானசொரூபம என்பதை ஒருவாறு நம் சிற்றறிவுக்கு எட்டச்செய்வதற்காக இங்ஙனம் கூறுவர். இதனுல் பரிபூரண ஞானமே, கடவுள் எனப்படுவதென நாம் தெரியலாம். பரிபூரணஞானம் என்பது எப்போதும் யாவரிடத்தும் ஒத்த அன்பைச் செலுத்துவதிலேயே கொண்டுசேர்க்கும் ஆற்றலுடையதாகும். இத்தகைய பரிபூரணஞானம் ஒருசமயம் அன்புகொண்டு எழுந்து பரஞ்சுடராகக் காட்சியளித்தது. அது, மாலும் பிரமனும் பேருணர்ச்சியால் உந்தப்பட்டுத் தம் அறிவுக்கு அப்பாற்பட்ட ஒன்றைக்குறித்துப் போரிட்ட சந்தர்ப்பத்தில் நிகழ்வுற்றது. இக்கதை நாம் அறிவோம். தன்னுடைய ஆணைக்கு அடங்கி நடக்கக் கடமை பூண்ட இருவர், அதனை மறந்து போரிட்டுக் கொள்ளுங்காலத்து இறைவர் சும்மா வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்திருப்பாராயின் அவர் கடவுள் எனப்படமாட்டார். அவ்விருவரும் தம் குடிமக்களே ஆதலால் இருவரிடமும் அன்பு கொண்டு பரஞ்சுடராக எழுந்தனர்.

இருவரையும் ஒருமித்த கருத்துக்குக் கொண்டுவந்து ஒன்றுபடுத்தி உண்மை தெரியச் செய்தனர். இதுதான் சித்தாந்தம் எனப்படும். அதாவது, மாறுபட்டவர்களை மாறுபாடொழியுமாறு உண்மையில் ஒன்றுபடச் செய்து அன்பால் அவர்களைத் தழுவிக்கொள்வதே ஆகும். இந்தக் கொள்கைதான் சிவம் செய்துகாட்டிய நெறி ஆகும். ஆதலினால்தான் சைவசித்தாந்தம் மிக உயர்ந்த கொள்கை எனப்படுகிறது. நூற்றுக்கணக்காகக் கூறப்படும் எந்தக்கொள்கையும் இந்தச் சித்தாந்தத்துட்பட்டதேயாகும். இங்கு, "நூறு விதமாய்க் கூறினாலும் மதம் ஒன்றுதான் உண்டு" என்னும் 'பெர்னார்ட்ஷா" உரை சிந்திக்கத்தக்கதாம்.

மேற்கூறப்பட்ட மாலயன் பூசலிடையே தோன்றிய பரமன், அவர்களை அன்பால் தழுவிக்கொண்டு ஆட்படுத்தியருளினர். இந்த நெறியையே சித்தாந்த சைவம் மேற்கொண்டிருப்பது. இதுவே இதன் தனிச் சிறப்பு. இச்சிறப்புக்குக் குறையின்றி நாம் நடந்து கொள்வதே தனிப்பெருமை தரவல்லதாகும். எனவே, பிரமன் மால் பகைமையை வளரவிடாமலும் அவர்களைத் துவேஷிக்காமலும் அவ்விருவர்பாலும் அன்பு செலுத்திப் பரமன் ஆட்கொண்ட இந்தச் செந்நெறியையே இங்கு, ஆலிங்கனம் செய்து எழுந்த எனலுற்றார் ஆசிரியர். இதுதான் சைவசித்தாந்தத்தின் நுட்பம் உணர்த்தும் இடமாம். எழுந்த என்றமையால் பரஞ்சுடராக விளங்குவதொன்றே இறைவன்குறி என நாம் கொண்டுவிடாமல் நம் அறிவுக்கு எட்டக்கூடியவகை இஃதொன்றே எனவும், இதனின் மேம்பட்ட இறைநிலை எவராலும் அறிய ஒண்ணாதது எனவும் தெரிந்துகொள்ளுதல் நன்றாம்.

படைத்தல் காத்தல் தொழில்கள் தொடங்கப்படுதற்கு முந்தியே இறைவன், பரஞ்சுடராகத் தோன்றிச் சித்தாந்தநெறி இன்னதுதான் எனச் செயல்முறையில் காட்டிப் பிரமனாதியோர்க்கு உணர்த்தியமையை இவ்வரியால் அறிகிறோம். இதுதான் செந்நெறி – மெய்ந்நெறி - சுத்த அத்துவிதநெறி – மேல்நெறி - தனிநெறி - என்றெல்லாம் புகழத்தக்கதாகும். இது சிவமே சாதித்துக்காட்டிய பகைமையற்ற அன்புநெறியாம். இதன் சிறப்பையே ஆசிரியர் நமக்கு இங்கு, பரஞ்சுடர் ( ஆனவன் ) மேல் இங்ஙன் வைத்தது ஓர் மெய்ந்நெறி என்று கூறித் தெருட்டியுள்ளாராவர். இத்தொடரை மேல் நெறி – இங்ஙன் வைத்தது ( ஆம் ) நெறி – ஓர் நெறி – மெய்ந்நெறி – என்றெல்லாம் கொண்டுகூட்டி நாம் பொருள்செய்துகொள்ளல் நன்றாம்.

அரசன் ஆணைப்படி நடப்போரை அரசன் விரும்புவன்; சன்மானிப்பன். அதாவது, அரசனுடைய அருளை அடைய விரும்புபவர்கள் அரசனாணை வழியொழுக வேண்டும் என்பதாம். நெறி தவறியவரை அரசன் மறக்கருணை என்னும் அருள்பற்றித் தண்டித்துத் திருத்தி ஆட்கொள்வன். இதுவே உலகின் அரசியல் நெறி. ஆதிமாலுக்கும் அயனுக்கும் இவ்வாறே ஒழுகுமாறு பரம்பொருள் ஆணையிட்டருளினன். ஆதலின், இவர்களால் படைக்கப்பட்டும் காக்கப்பட்டும் வருகின்ற நாமும் இத்தகையதான இறைவனாணை வழியே நிற்கக் கடமை பூண்டுள்ளோம் என்பது தெரியலாம்.

ஆதலினுலே, நாம் அரனுலே முன்னே காணப்பட்டதாகிய இந்தச் செந்நெறியை மேற்கொள்ள வேண்டும், இஃது பரமனுல் உயிர்களிடம் உள்ள அன்பின் பெருக்கினுலே ஏற்படுத்தப்பட்ட ஆட்சிமுறை என நாம் தெரியவேண்டும். இந்த இறைவன் ஆணையே உலகம் முழுதும் சுற்றிவரும் செங்கோல் அல்லது ஆக்ஞை என்று நாம கருதிப் பார்க்க வேண்டும்; ஏற்கவேண்டும். பிறகு, இந்தத் திருவருள் நெறியிலேயே அமைந்தொழுக வேண்டும். இப்படிநடந்தால் நாம் தங்குதடையின்றி இறைவனருளைப் பெற்றே தீருவோம். ஆற்று வெள்ளத்துட்பட்டதாயின் துரும்பெனினும் அவ்வழியே செல்லுவதால் கடலிடத்தை அடைவதில் தவருது. அப்படித்தான், இறைவன், ஆதிப்பிரமனரியாதியர் முன்னிலையில் அருளிச்செய்து காட்டிய அன்பு நெறியே கடைப்பிடித் தொழுகுவோ மாயின் தட்டாமல் அவனருள் கிட்டப்பெறுவோம் என்பது நிச்சயமாம். இதனை, முன்கண்டு, ஆலிங்கனம் செய்து உலகம் வலம் வரும் – கோல் இங்கு அமைஞ்சு அருள் கூடலும் ஆம் ஏ என்ற வரிகளால் அறியலாம். முன்கண்டு என்பது இச்செந்நெறியின் முதன்மை உணர்த்தி நிற்பதாகும். ஆலிங்கனம் செய்து என்பது, இறைவனுக்கு ஆருயிர்களாம் ஆன்மாக்களாகிய நம்மீது உள்ள அன்பினை வெளியிடுகின்றது.

உலகம் வலம் வரும் கோல் என்பது இறைவனுடைய ஞானச் செங்கோலை அல்லது ஆணையை உணர்த்தி நிற்பதாகும். வலம் வரும் என்பது சர்வ அண்டங்களிலும் இவ்வாணை செல்வதென்பதைத் தெரிவிப்பது காண லாகும். இங்கு என்பது, இவ்வுலகத்தை – நம்மை – அவ்வழிநிற்கவேண்டுமென அறிவித்திடுதல் காணலாம். அமைந்து என்ற சொல் அமைஞ்சு எனப்பாடலில் வைக்கப்படலாம், இதன்படி, மனத்தில் வேறு நாட்டமின்றி அமைதியாகச் சரியையாதி மெய்த்தவ வழியைப் பின்பற்ற வேண்டுமென்பது புலனுகின்றது. மற்றும் சித்தாந்தச் செந்நெறியிலுள்ள ஆருயிர்கட்கெல்லாம் அன்புசெய்தல் முதலிய அமைதிகளையும் நாம் கொள்ளலாகும். இவ்வாறெல்லாம், நாம் ஒழுகினுல் தடையில்லாமல் இறைவனுடைய கருணைக்கு ஆளாவோம் என்பதை, அருள் கூடலும் ஆமே என்பதுணர்த்துகின்றதாகும். 'கூடலும்' என்பதில் உள்ள உம்மையானது, அருள் கூடுதலிலுள்ள அருமையைப் புலப்படுத்துகின்றது. மற்றும் அருளைக்கூடாமல், இறையைக்கூடுதல் இயலாது என்பதையும் உணர்த்து கின்றது. மேலும், பிற நெறிகளில் அருளைக்கூடிப் பின்னர் ஆண்டவனை அணுதல் என்கிற நியதி தெளியப்படாதென்பதையும் தெரிவிக்கின்றது என்னலாம்,

இதுகாறும் கூறியவாற்ருல் இச்செய்யுள்தான், சித்தாந்தசைவநெறிக்குத் தொடக்கத்தையும் சிறப்பையும் எடுத்துக்காட்டுகின்றதென நாம் கோடல் கூடும். மற்றும், இச்செய்யுளுக்கு வேறுவகை உரைகளும் உண்டு. அவற்றை இவ்வாதின வெளியிடு 126 – ல் கண்டுகளிக்கலாகும். இங்கு அவ்வுரைகளை விவரித்தல் நூலைப் பெரிதாக்கிவிடும் என்க.

முடிவாகக்கூறின், பரஞ்சுடர்வைத்த மெய்ந்நெறி கண்டு, வலம் வரும் கோல் இங்கு அமைஞ்சு, அருள கூடலும் ஆம் என்பது நம்மால் தெரியப் படல் வேண்டும் எனனலாம். **(42)**

## 8. அரனை அறியும் சுய அனுபவம்

**வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்கள்**
**ஆள்கொடுத்(து) எம்போல் அரனை அறிகிலர்;**
**ஆள்கொடுத்(து) இன்பம் கொடுத்துக் கோள்ஆநத்**
**தாள்கொடுத் தான்அடி சாரகி லாரே. - (பாடல் - 379)**

முந்திய செய்யுளில், அருள் கூடும் மார்க்கம் திருமூலரால் கூறப்பட்டது. அருள்வழியால் அரனடி அடைதலே சித்தாந்த மார்க்கமாகும். அயல்வழிப் படர்வோர் கொஞ்சிப்பாதை செல்வோரை ஒப்பர். ஆதலால்தான் சுத்த அத்துவித மார்க்கத்தை மெய்ந்நெறி எனலுற்றார் ஆசிரியர். சிவம் வகுத்திட்ட இவ்வழி பின்பற்றி எவர் பேறுபெற்றனர் என்ற கேள்வி எழுவது இயல்பே. ஆதலால், அதற்கு விடை அளிக்கும் முகமாக இப்பாடலை அமைக்கலுற்றார் திருமூலர். ஒரு விஷயத்தின் பலாபலன்களை நூலறிவால் நுவலலாம். அதனினும் உறுதியுள்ளது அதனை ஆராய்ந்து தெரிவித்தலாகும். இதனைவிட திடமானது பிறர் அனுபவத்தைச் சான்றாகக்காட்டல். மேலவற்றின் மிகவும் சரியானது சொந்த அனுபவத்தையே சொல்லிக்காட்டல் ஆகும். இதனாலேதான் ஆசாரிய ருபதேசம் அனைவருபதேசங்களிலும் சிறந்ததெனப்படுகின்றது. இந்தமுறையில் திருமூலர், அருளால் அரனடியடைந்து இன்புறுதலுக்குத் தமது அனுபவத்தையே நமக்கு அத்தாக்ஷியாகக் கூறிக்காட்டுகின்றார் இச்செய்யுளில் என்னலாம். அதுமட்டிலல்லாமல் அங்ஙனம் அடைய மாட்டாது துன்பத்துட்பட்டாரையும் எதிரிடையால் வலியுறுத்தற்காகக் கூறுதலும் செய்துள்ளார். அதற்காகத், தானே அங்கலாய்த்தும் இரங்குகின்றார். ஆப்தர்கள் இப்படித்தான் இரங்குதல் வழக்கம்.

நம் இம்மை வாழ்க்கை உடம்பைத்துணைக்கொண்டு நடைபெறுகின்றது. உடம்பு என்பது தத்துவத்தொகுதியாலாயது. ஆகையால், நாம் தத்துவங்களின் வேறாயிருக்கும் உண்மையை முதலில் அறிந்தாகவேண்டும். இந்த அறிவை நாம் எய்துகையில் இறைவனருளில் ஒருகூறு அடையப்பெறுகிறோம். அப்பால், நாம், இவ்வுடம்போடு வாழ்வதற்கு இடமாயிருக்கும் இப்புவனத்தைப்பற்றிய உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டியுள்ளது. இப்புவனம் பஞ்சபூதப் புணர்ப்பினைப் பெறிடும்கொண்டமைவதாகும். இப்பஞ்சபூதப் புணர்ப்பாலாகிய புவனம் வேறு: நாம் வேறானவர் என்று இரண்டாவதாக அறியவேண்டும். இந்த அறிவு உறுதிப்பட்டபின்னர் இறைவனருளில் பின்னும் ஒருகூறு நமக்குவாய்த்திடும். மூன்றாவதாக, நாம் இறைவனின் சங்கற்ப சத்தியாகவுள்ள திரோதையின் விரிவாகிய கலை விஷயங்களைப்பற்றித் தெரிந்திடவேண்டும் அந்தக்கலை ஐந்து பிரிவாக இருந்து நமக்கு மறைப்புச் செய்வதன்மூலம் உண்மையறிவு வரச்செய்கிறது. எனவே, நான்காவது இந்தத் திரோதை முற்றும் விலகிவிடுமாறு நாம் நடந்துகொண்டால், இறைவனின் அருட்சத்தி அழகினை அடையப்பெறுவோம்

இந்த அருட்சத்தி என்பது, முன்னே கலைவடிவாக இருந்து நமக்கு மறைப்புமூலம் துணைசெய்துவந்த திரோதானசத்தியேதான், இந்தத்திரோதானம்

மாறி அருளாகக் காட்சிப்பட்டு நம்மை ஆட்கொள்ளும் போதுதான் நமக்கு மெய்ந்நெறியின் சாதனமாகிய மெய்ஞ்ஞானம் ஏற்படுகிறது. இதுதான் அருளைக்கூடும் நெறி ஆகும். இந்த நான்கையும் முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் உபாயங்களால் நாம் அடையலாம். இவ்வளவும் அருள்தரிசன நெறி எனப்படும். ஐந்தாவதாக நாம் இவ்வருட் காட்சியால் ஆனந்தானுபவத்தை முடிவாக அடைகிறோம். இந்த ஐந்து வழிகள்தாம், உலகம் வலம் வரும் இறைவனுணை – கோல் எழி இங்கு அமைந்து அருட்பயன் எய்தச் செய்வன ஆகும். இதுதான் சித்தாந்தநெறி எனப்படுவது.

இந்த நெறிவழிப்படர்ந்து இம்மையிலே பேரின்பம் துய்த்திடற் காகத்தான் கடவுள் பெருங்கருணையால் நமக்கு உயர்ந்ததான உடம்பு என்னும் கருவியை அளித்துள்ளார். இவ்வுடப்புதான் (மக்கட் பிறப்புதான்) அடிப்படை யான சாதனம். இந்தவகையான உடம்பில் சிற்சில விசேடங்களுடன் அமையப் பெற்றவரே அமரர். இவர்களுடைய சரீரம் திவ்யத்தன்மை உடையது. ஆதலால், குளித்தல் முதலான சில தூய்மைச் சடங்குகள் அமரர்க்குத் தேவையில்லை. களைப்பில்லாமையால் உறக்கம் இவர்களுக்கு வேண்டுவது இல்லை. ஆகவே, ஒளிபொருந்திய உடம்பினை உடையவர் தேவராவர். இது இவர்களின் புண்ணியத்திற்கு ஏற்ப இறைவனால் அமைப்புறுவதாகும்.

இவ்விதமான ஒளிமய உடம்பைப் பெற்ற தேவர்கள் இறைவனை, ஊண் உறக்கங்கூட இல்லாமல் தியானித்து அருள்பெற்று அரனடி அணையப்பெறலாம். ஆனால், இவர்கள், துன்புற்றகாலை அரன்காலைப் பற்றுவர், வழிபடுவர். பிறகு திரோதைவயப்பட்டு மறந்து திரிவர். இப்படிச் செய்வதற்கு மாறாக இவர்கள் சற்றுச் சிந்தனைசெய்து தேவபோகங்களை வெறுத்துத் தம்மை இறைவனுக்குத் தொண்டர்களாகக் கருதி அவன் அருள்வழி நிற்கப் பெறுவாராயின் தேவபோகத்தினும் ஏற்றமுடையதான பேரின்ப வாழ்வினை எய்தப்பெறலாம். ஆதலின், திருமூலர், தம் உடல் பொருள் ஆவி இம்மூன்றனையும் இறைவனுக்கே உடைமையாக்கி அவனருள்வழியே நின்று இறைவனை அறிந்து அடையப் பெற்றவர். இப்படித்தான் நம்மையும் ஒழுகி நன்மையடையும்படிச் சொல்லுகிறார். இதனை, வாள் கொடுத்தானை வழிபட்ட தேவர்கள் ஆள்கொடுத்து எம்போல் அரனை அறிகிலர் என்று கூறியிருப்பதனால் நாம் தெளியலாம். " எண்தோள் முக்கண் எம்மானே " என்று பெருமானை வழிபட்டு மணிவாசகர். " அன்றே என்தன் " எனத்தொடங்கி விளம்புவதை இவ்விடத்தே நாம் கருதிப் பார்த்தல் கருத்துடைத்தாம்.

ஏன் அரனை இங்ஙனம் வழிபடவேண்டும் என்பதற்குரிய காரணங்களையும் ஆசிரியர் கூறிக்காட்டுதல் காணலாம். இறைவனுக்கு நாம் நம் திரிகரணங்களும் ஒத்து நன்றிசெலுத்துவதொன்றே போதும். அதற்கு மேல் நாம் ஏதும் செய்யவும் முடியாது. ஏனெனில், அதற்குமேல் செய்யக்கூடிய சுவதந்திரம் நமக்குக் கிடையாது. நாம் இப்படி நன்றிகூறும் வண்ணம், இறைவன் நமக்கு என்ன செய்துவிட்டான் என்று ஒருசிலர் வினவுதல் கூடும். அரன் நமக்கு ஆற்றிவரும்

அளவற்ற உதவிகளை மூன்று விதங்களில் அடக்கி ஆசிரியர் கூறிக் காட்டியுள்ளார். ஆள்கொடுத்து, இன்பம் கொடுத்து, கோள் ஆகத் தாள்கொடுத்தான் என்பது அவ்வாக்கியமாகும்.

நமக்கு வேண்டிய தனுவாதிகளைக் குறிப்புணர்ந்து செய்யும் ஏவலாள் போல இயற்றி உதவியுள்ளான் இறைவன். நாம் கேட்டு இவற்றை அவன் தரவில்லை. தன் கருணையாலே நம் வினைக்கு ஏற்ப நாம் கேளாதே பன்முறை உதவுகின்றான்: பிறப்புந்தோறும் உதவுகின்றான். இப்படி எவரும் உடனிருந்து ஆள்பட்டுச் செய்யமாட்டார்கள். மற்றும், நமக்கு அவ்வப்போது உடலங்களை மாற்றி மாற்றி இளமையாக்கி உதவவும், அவ்வுடலங்களைப் பேணவும், அவற்றைச் சுழற்றி இளைப்பாறவும் உதவும்படிப் பிரமன் முதலான பலப்பல தேவர்களை நமக்கு ஆளாகக்கொடுத்து உதவியுள்ளார் இறைவன். இதனையே ஆள்கொடுத்து என்ற தொடர் குறிக்கும்.

சுவையூசி மருந்தூட்டுவதுபோல "குளஜிஹ்வா நியாயம்" பற்றி நமக்கு அவ்வப்பிறப்பிலும் பற்பல விதமான இன்பங்களை இறைவன் அளித்து நடத்துகின்றான். இல்லையானால் ஒரே துன்ப உணர்ச்சியால் அறிவில் சோர்வடைந்து, நாம் ஈடேற வேண்டுமென்ற எண்ணமே பெறமாட்டாமல் அலுத்துப்போவோம். இப்படி அனந்தமான இன்பங்களை இறைவன் அளித்திடுவதை இன்பம் கொடுத்து என்பது உணர்த்தும். முடிவாக உயிர்கட்கு உய்தியும் எய்திடவுதவுகின்றான் அரன். அருளைப்புரிந்து அதனிலே திளைக்கச் செய்து அப்பால் மெய்ஞ்ஞானத்தை விளங்கச் செய்து அப்பால் தன்னையே பரமன் நமக்கு நிலைக்களமாகத் தந்துவிடுகிறான். அபலார் பலர் பலர் கைப்பட்டுத் திகைக்கும் ஒரு குழந்தை, கைமாறிக் கைமாறிக் கடைசியில் தன்னை வளர்த்த செவிலித்தாய் கைப்பட்டுப் பிறகு அவளால் பெற்றதாயின் வசமாகி, அப்பால் அப்பன் அணைப்புட்பட்டிடுவதுபோல உள்ளது நம் சஞ்சாரம். அன்னையோடு கூடிய அப்பன் கைப்பட்ட பின்னரே குழந்தை திகைப்படங்கிய இன்பம் அடைகிறது, இங்ஙனமே இறைவனும் கோள் ஆக தாள் கொடுத்தான் ஆகிறான். இவ்வாறெல்லாம் உதவி வரும் இறைவனை நாம் அணைவதற்கு அவன் அடிசேர் ஞானத்தைப் பெறுவதே முறையாம். இதனைவிட்டு, நாம் வேறு எவரெவர் அடிகளிலோ முடிசூடி மயல்வாய்ப்பட்டு உழல்கின்றோம். இதனைப்பார்த்து ஆசிரியர் நம்மடமையை எள்ளி இரங்கி அடிசாரகிலாரே என்கின்ற பரிவினைப் பார்க்கலாகும்.

வானத்திற்கடக்க வானவூர்தியும், கடலிற்கடக்கக் கப்பலும், நிலத்திற் செல்ல ஊர்தியும் எவ்வாறு துணையாகின்றனவோ அவ்வாறே பிறவியைக் கடந்து கரை ஏறுதற்காக இறைவன் தாள் தந்துள்ளானுவன். படகுக்காரன் படகினுள் தானும் இருந்து பக்குவமாய்க் கடத்துவதுபோல இறைவனும் பற்றுக்கோடாக இருந்து உதவுகிறான் என்பதைக் கோள் ஆக கொடுத்தான் என்ற தொடர் தெரிவிப்பதாகும். இச்செய்யுளால், உடம்பாலும், நன்றியில்லா வழிபாட்டாலும், துணை ஏதும் இல்லா நிலைமையாலும் நாம் உய்திபெற முடியாது என்பது தேறலாம். (43)

## 9. பிரமற்கு அதிகார ஞானம் அருளல்

ஊழிவலஞ்செய்(து) அங்(கு) ஒரும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்
விழித் தலைநீர் விதித்(து) இது தா என
ஊழிக் கதிரோன் ஒளியையென் றானே.

ஊழி எனப்படும் மகாசங்காரத்தைச் செய்பவன் இறைவன், அங்ஙனம் அழித்தல்மாத்திரம் செய்து அமைந்துவிடுபவனல்லன் இறைவன். உலகம் நிலை பெறுங்காலத்துத் தமது ஆணையை எங்கும் செல்லச் செய்து உயிர்களை நடத்து பவனும் அவனே. அவனுக்கு யாரும் 'இது செய்' என அறிவிக்கவேண்டுவ தில்லை. தானே யாவருள்ளும் யாவற்றினுள்ளும் இருக்கும் தகையனுதலின் சுட்டி அறியவேண்டாமலே இருந்தாங்கு எல்லாம் அறியும் வல்லமையும் உடையவன். ஆதலால், அவனே, பிறர் உணர்த்தவேண்டாமல் எதையும் செய்யும் வல்லமை உடையோன் ஆவன். இத்தகை மேம்பாடுகளை உடைய இறைவன் இணையற்ற முதல்வன் ஆவன். இவற்றை, ஊழி வலம் செய்து அங்கு ஒரும் ஒருவற்கு என்பதனுல் உணரலாகும்.

உயிர்களைப் பிரளயத்தின் பின்னர் மலபரிபாகம் அடைந்து உய்தி அடையச் செய்தற் பொருட்டாக இறைவன் மீளவும் படைக்க எண்ணுவன். அங்ஙனம் அவன் கருதியமாத்திரையில் வழிவழியாக வரும் தலைவர்களில் படைத்தற்கு உரிமை பூண்டுள்ளோனுன பிரமன் தோன்றிடுவன். சதாசிவர் முதலானவர்கள் வரிசையில் பிரமன் வருதலை வாழி என்றுர் ஆசிரியர். வெளிப்படும் என்றதனுல் முன்னே சங்கரிக்கபட்டமை தெரியலாம். வந்து என்பதனுல் சத்தி அதிட்டித்தலால் பிரமன் தோன்றுதல் தெரியப்படும்.

இங்ஙனம் பிரமன், வெளிப்பட்ட பின்னர் தனக்குரிய பரம்பரையான தொழிலை இன்னதென அறியக்கோருவன். பிரமன், தனது இஷ்டப்படி உடனே படைத்தலைச் செய்திடமாட்டான். ஏவுதற் கருத்தாவாகிய பரமன், பிரமற்கு உணர்த்திய பிறகே பிரமன் தன் கடமையை உணர்ந்து செய்யும் வல்லமை உடையவனுவன். ஆகவே, பிரமன், பரமன் விரும்புதலை இன்னதெனப் பரமனுலே விதிக்கப்பட்டு அறிந்து தரவுறுவான். இதனுல், பிரமன் பரமனை வேண்டி நிற்பனுவன். அவன் பரமனை அவன் விருப்பப்படியுள்ளதான தனக்கு உரிய கடமையைத் தெரிந்து கோடற் பொருட்டு, 'நீர் வீழித்தலை விதித்து இது தா' எனவேண்டி நிற்பன். விழித்தலை என்பது விரும்புதலை எனப்பொருள் பட்டுச் சங்கற்பித்தலை இங்குக் குறிப்பதாகும், இது என்பது அங்ஙனம் விதித்ததொரு பணியினை நிறைவேற்றற்பொருட்டுத் தேவைப்படும் சத்தி யதிட்டித்தலாகிய வல்லமையைக் குறிப்பதாகும்.

அங்ஙனம் வேண்டி வழிபட்ட பிரமற்கு முதல்வனுனவன் தனது ஊழிக்காலத்துச் சூரியன் போன்றதொரு ஒளியினமிசத்தை உதவுவன். அவ்விதமாக உதவி ஆட்கொள்வன். வெல்லுதல், ஈண்டு ஆளாக்கி நடத்துதலை

உணர்த்துவதாகும். இது, ஊழிக் கதிரோன் ஒளியை வென்றுனே என்பதனுல் விளங்குவதாம். தாம் பரமனை வழிபாடுசெய்து (ஆள்கொடுத்து) அறிந்ததாக முன்பாடலில் கூறிய திருமூலர், அதனைத் தொடர்ந்து நிற்கும் இச்செய்யுளில், வழிபடும் தேவர்களில் ஒருவனுன பிரமன், படைத்தற்கான அதிகார ஞானத்தை வேண்டி அவ்வாறே அடையப் பெற்றதை நமக்குக் கூறிக்காட்டுகின்ருராவர். பரமன், தன் திருவருளின் ஒருகூற்றினுல் பிரமனை நடத்துந் திறத்தினை ஒளியை வென்றுனே என்பதனுலறியலாம்.

பிரமனின் (வாள்) பொன்னொளி இறைவனின் பேரொளிமுன் கதிரோன்முன வைககப்பட்ட தீபத்தின் ஒளிபோல் மங்கிக்காட்டுதலை இத்தொடர் குறிக்கின்றதாகும். இதனுல் முடிதேடிய பிரமற்குப் படைப்பு எனப்படும் அடித்தொழில் அளிக்கப்பட்டதென்பது தெரியலாகும். ஆகவே, ஒரு பேரரசன் அதிகாரம்போல இறைவனது அதிகாரம் பல தேவர்களிடமாக நின்று தொழிற்படுத்துகின்றது என்பதே துணிபாம், இதனுல் சத்தி அதிட்டித்த கலை (அதாவது) வேருென்றின் வாயிலாகத் திருவருட்சத்தி அமிசம் தொழிற் செய்தல் இன்னது என்பது தெரியலாகும். '' காப்பாய் படைப்பாய் '' என்னும் புணர்ச்சிப்பத்துப் பாடல் ஈண்டுக்காண்டல் தக்கதாம். '' நான்முகன் முதலா வானவர் தொழு தெழ '' என்ற இடமும் ஈங்குப் பொருந்திக்கொள்ள லாகும். (44)

**அதிகாரச்செய்திச் சுருக்கம் :**

மகாசங்காரகாலத்திலே எவரும் எவையும் அழிக்கப்படும். அங்ஙனம் அழிக்குங்கால் மகாசங்கார மூர்த்தியாகிய இறைவன், திரும்பவும் படைப்பு ஏற்படுவதற்கு ஆதாரமானவைகளைத் தன்னுள்ளே தாங்கி நிற்பன். அப்படி அவை, சூக்குமப்படுத்தித் தாங்காவிட்டால் புனருற்பவம் இல்லாது போம். உய்தி என்பதே இல்லாமல் உயிர்கள் உழலவேண்டி வரும். எனவே மகாசங்கார கருத்தாவே முதல்வன் ஆவன். அதனை அறியாமல் ஒருசமயம் பிரமனும் மாலும் தேடி அரற்றினர். அவர்களைப் பரமன் அனலாய்ப்பரந்து அகப்படுத்தி அறியச்செய்தான். அப்படி, இறைவன் முதன்மையை அறிந்து அவன் ஆணைவழியே நிற்போமாயின் மாமணிகண்டனை நாமும் எளிதாக அறியலாகும். இறைவன் ஊன், உயிர், உணர்வு, அங்கி, வான், ஞாயிறு, மதி, அண்டம் ஆகிய யாவையுமாய் நிற்பன்; இவற்றைக் கடந்தும் இருப்பன்; சர்வாண்டங்களாகவும் இருந்து அவற்றைக்கடந்தும் வியாபித்து இறைவன் இருப்பதனுலேதான், ஓர் அண்டத்துமட்டில் வியாபகமுடையவரான பிரமனுலும் திருமாலாலும் அறியமுடியாதவராக இருக்கமுடிந்தது. இறைவனை, அவனருளின்றி நாம் அறிய இயலாது. அவனருளைவிட்டு அரனை அறிய அலேதல் பயனற்ற செயலாகும்.

சதுமுகன் முதலான தேவர்களுக்குள்ளும் இருந்து காட்டிக் காண்கின்றான் இறைவன் ஒருவனேயாவன், ஆகவே, இறைவனை அவனருளின்றி அறியவோ அடையவோ இயலாது என்பதையும், அவ்வருளை எப்படிப் பெறுவது என்பதையும் எடுத்தியம்புவதே சித்தாந்தம் எனப்படும். இது,

முதல்வனுலேயே அவனுணைப்படி அமையப் பெறறது ஆதலின் சைவ சித்தாந்தம் எனப்படுவதாயிற்று, சித்தாந்தத்தின் சிறந்த கொள்கையாவது நம்மை ஆண்டவனுக்கு அடிமையாக்கிவிட வேண்டும் என்பதேயாகும். இப்படித் திருமூலர் செயல்முறையிற்கொண்டு அரனை அறியப்பெற்றவராவர். எவரும் இறைவனின் தாழ்ந்தவரே யாதலால் வழிபட்டே நலம் பெற வேண்டியவராவர். நலம், இறைவன் விருப்பப்படியும் நம் தகுதிப்படியும் நல்கப்படுவதாம். இதனைப் பிரமன், படைப்புத்தொழில் அதிகாரத்தை வேண்டி அடையப்பெற்றமை கொண்டு தெரியலாகும், குறிப்பாகச்சொன்னல், சித்தாந்த சைவத்தின் உற்பத்தியும் அதன் சிறப்பும் இவ்வதிகாரத்தே கூறப்பட்டுள என்னலாம். நாமும் அந்த மெய்ந்நெறிபற்றி உய்தி பெறுவோமாக!

# காமிகாகமம் - உத்தரபாகம்
# இலிங்கோத்பவர் பிரதிஷ்டாவிதி
## ( 50-வது படலம் )

**1. தோற்றுவாய்**

**லிங்கோத்பவஸ்ய தேவஸ்ய ப்ரதிஷ்டாத்யம் நிகத்யதே ।**

லிங்கோத்பவப் பெருமானின் பிரதிட்டை சொல்லப்படுகிறது

**2. அளவை: ( i ) பாணம்**

**கர்ப்பமாநவசாத் லிங்கம் ப்ராக்வத் சம்யக் ப்ரகல்பயேத் ।। 1**

முன்கூறியவாறு கருவறை (அல்லது கோஷ்டம்) அளவுக்கு ஏற்ப (இலிங்க) பாணத்தை அமைக்க.

**லிங்கோச்சே வேதபம் சதுஸ் ஸப்நாம்சேசம் அதஸ்த்யஜேத் ।**
**தத் ஸமம் வா ததர்த்தம் வா த்யக்த்வா ச ஊர்த்வே ததர்தரே ।। 2**

(கோஷ்டத்தில்) லிங்கத்தின் மேற்பகுதியில் நான்குபாக இடைவெளியும், கீழ்ப் பகுதியில் ஏழுபாக இடைவெளியும் கொள்க, பாணத்தின் மேற்பகுதியிருந்தும் இவ்வாறு இடைவெளி கொள்க. பாணத்தின் கீழ்ப்பகுதியில் தகுந்த இடைவெளி கொள்க. அதனிடையில் ....

**( ii ) மூர்த்தி**

**பூர்வவத் காரயேத் ஸம்யக் சந்த்ரசேகரமூர்த்தி நம் ।**
**லிங்காதோ சர்வ ஜாந்வந்த பாகே நேந்திரிய கோசரம் ।। 3 ।।**

முன் கூறப்பட்ட உருவமைதியின்படி முழந்தாளின் கீழ் உள்ள அவயவங்கள் லிங்கபாணத்தின் கீழ்ப் பகுதியில் மறைந்துள்ளவாறுக சந்திர சேகரமூர்த்தியை (துகையினுள்) செதுக்குக.

**லிங்கோர்த்வ அத: ப்ரதேசேது ஹம்ஸஸூகர ம் ஆகரேத் ।**
**பிம்பஸ்ய ஆநநமாத்ரேண காரகேபத்ஹம்ஸம் ஆதராத் ।। 4 ।।**
**பிம்பத்விமுக மாநே ந பூக்ருஷ்டாஸ்யந்து சூகரம் ।**
**தல்லிங்க ரஸபாகைக த்விதிரிவேத சரைர் ந்யஸேத் ।। 5 ।।**

லிங்க பாணத்தின் மேற்பகுதியில் சந்திரசேகரரின் முக அளவினில் அன்னப்பறவையை அமைக்க. சந்திர சேகரரின் முழந்தாளின் கீழ் (பாணத்தில்) அவரின் முக அளவில் இருபங்கு கொண்ட வராக உருவினைக் கீழ் நோக்கும் முகத்துடன் நிலம் கீறும் பாவனையில் அமைக்க. லிங்க பாணத்தின் ஆறு அம்சத்தின் கீழ் எட்டுப்பாக அளவில் அமைக்க.

**ப்ரம்ஹ விஷ்ணுத்வி பார்ச் வஸ்நௌ நதௌ தஸ்யாநு கூலகௌ ।**

**திர்யக்கத சுபாதௌ தௌ சர்வாயவ சுந்தரௌ || 6 ||**

இடுப்புக்குமேல் தம்முருவமைதிகளும் கீழ்ப்பகுதி பறவை உடல்; மற்றும் வராக உடலாயும் அயனையும் அரியையும் அமைக்க. சிவனருள் பெற வணங்கி நிற்போராயும் அமைக்க. வாணத்தின் வலப்புறம் அயனையும் இடப்புறம் அரியையும் அமைக்க.

**லிங்கோத் பூதஸ்த்விதி க்யாதோ ப்ரம்ஹவிஷ்ணவபிநந்தித : ।**
**ப்ரம்ஹவிஷ்ணூ விஹீநோவா ஹம்ஸஸூகர சம்யுத: || 7 ||**
**இத்தம் லட்சணம் ஆதிஷ்டம் ... ... ... தே ।**

அயனும் அரியும் வணங்கும் இலிங்கோத்பவரின் உருவமைதி கூறப் பட்டது. அயனும் அரியும் தனியே வைக்கப்படுதல் இன்றியும், பாணத்தில் அன்னம், வராகம் ஆகியவை மட்டும் கொண்டும் இலிங்கோத்பவரை நிறுவலாம் இவ்வாறு உருவமைதி சொல்லப்பட்டது.

**3. பிரதிட்டை விதி:**

**... ... ப்ரதிஷ்டா விதி: உச்யதே ।**

(மூர்த்தியை) நிறுவும் வகை கூறப்படுகிறது.

**(i) காலநிர்ணயம்**

காலச்ச பூர்வவத் க்ராஹ்ய: ... ... ....

முன்கூறிய வகையால் உரிய காலத்தை நிர்ணயிக்க..

**(ii) அங்குரார்ப்பணம்**

**... தத்வத் ஏவாங்குரார்ப்பணம் || 8 ||**

அவ்வாறே முளையிடுதலைச் செய்க.

**(iii) மண்டப நிர்மாணம் முதலியன :**

**பஸ் சாத் மண்டப நிர்மாணம் க்ருத்வா தத்ரைவகல்பயேத் ।**
**குண்டானி பரிதோச்ராணி நவபஞ்சைச சங்க்யயா || 9 ||**

**திகச்ராண் யத வ்ருத்தாநி ரத்ந ந்யாஸோத்ர நாஸ்திஹி ।**
**நயநோந்மீலநம் பஸ்சாத் பேரசுத்திம் அநந்தரம் || 10 ||**
**ப்ரதட்சிணம் புராதிநாம் ஜலே சைவாதிவாஸநம் ।**
**பூஷணம் மண்டபஸ்யைவ வாஸ்து ஹோமமத : பரம் || 11 ||**

**பூபரிக்ரஹமாதௌவா பூர்வவத் காரயேத் புத : ।**
**வேத் யூர்த்த்வே ஸ்தண்டிலம் க்ருத்வா சயநம்கல்பயேத் புத : || 12 ||**

அதன்பின் குடமுழுக்குச் சடங்குகள் நடைபெறுதற்காக புதியமண்டபம் அமைக்க, மண்டபத்தில் யாகசாலைக்கான வேதிகைகள் குண்டங்களை அமைக்க நாற்சதுரம், வட்டம் முதலிய குண்டங்களை ஒன்பது அல்லது ஐந்து என்ற வகையால் அமைக்க. இங்கு ரத்ந நியாஸமில்லை. மேல் கண்திறத்தல், பேரசுத்தி, கிராம ஊர்வலம், நீர்ப்படை செய்தல், மண்டப அலங்காரம், வாஸ்துஹோமம்; ம்ருத்சங்கிரகணம், முதலியவற்றை முன் கூறியது போற்செய்க. அறிஞன் ஆன ஆசார்யன் வேதிகையின் மேல் உரியமுறையில் தானியங்களைப் பரப்பி, அதன்மேல் பருத்தி; கம்பளி, பட்டு ஆடைகளால் மூர்த்திக்கான பள்ளியைத் தயாரிக்க.

## (iv). ஜலோத்தாரணம், ஸ்தண்டிலசயநம்.

*ஜலாத் உத்தார்ய தேவந்து ப்ரதிமாம் சோதயேத்தத :।*
*க்ருத்வா கௌது கபந்தந்து சாயயேத் சயனோபரி । 13*
*நயநோந் மீலநாத்யந்து ப்ரம்ஹவிஷ்ணோஸ்துகல்பயேத் ।*
*ப்ரஹ்மாணம் தக்ஷிணேசைவ விஷ்ணும் வாமேது சாயயேத் । 14*
*வஸ்த்ரைஸ் சைவது சம்வேஷ்ட்ய கந்தாத்யைரர்ச்சயேத்தத :।*

லிங்கோத்பவரை நீரினின்றெடுத்து பேரசோதனை செய்க, கங்கண பந்தநம் செய்து பள்ளியில் அமர்த்துக. அயனரி சிலைகட்டும் கண்திறப்பினைச் செய்க, லிங்கோத்பவரின் வலப்புறம் அயனையும், இடப்புறம் அரியையும் பள்ளியின்மேல் வளர்த்துக. புத்தாடை; சந்தனம்; மலர்களால் அணிசெய்து பூசித்துப்போற்றுக.

## (v). கலச ஸ்தாபனம் :

*ப்ரதாநகும்பம் தேஷாந்து சிரோபாதேது விந்யஸேத் ।। 15*
*வர்த்தநீம் விந்யஸேத் தீமான் சிவகும்பஸ்யச உத்தரே ।*
*அபிதஸ்ச கடான் அஷ்டௌ ந்யஸ்யவித்யேச்வராத்மகான் ।। 16*
*லக்ஷ்ணோதிதரூபந்து த்யாயேத் ஸ்வஹ்ருதி தேசிக: ।*
*ரூபஸம்ஸ்தாந பாவைஸ்து பூஜயித்வாயதாவிதி ।। 17*
*தேவஸ்ய ப்ரஹ்மணோவிஷ்ணோ : தத்வ மூர்த்தாதிகம்ந்யஸேத் ।*
*ப்ராக்வத் தேவஸ்ய தத்வாத்யா: சவிஷ்ணோஸ்துயதோதிதம் ।। 18*

மும்மூர்த்திகளின் பிரதாந கலசங்களை அவரவர் சிரஸினருகில் வைக்க. வர்த்தநி ( சக்தி ) கலசத்தினை சிவ ( லிங்கோத்பவர் ) கும்பத்தருகில்வைக்க, அவற்றைச்சுற்றிலும் அட்டவித்தியேசர்கள் உறையுளாய் எட்டு கலசங்களை வைக்க, அவரவர்க்குரிய உருவமைதி மற்றும் மந்திரங்கள் கொண்டு தியானித்துப் பூசிக்க, உரிய மந்திரநியாஸம் செய்க. முன் கூறியவாறே அவ்வத் தேவர்கட்குரிய தத்துவ நியாஸங்களைச் செய்க.



படம் - 27

மகேந்திரவர்ம பல்லவன் எழுப்பித்த காஞ்சீபுரம் ஸ்ரீகைலாசநாதர் திருக்கோயிலில் எண்தோள்களையுடைய இலிங்கோத்பவர் (பல்லவர் காலம்)



படம் - 28

வேளச்சேரி - ஸ்ரீ தண்டீஸ்வரர் கோயில் மான் மழு மாறி அமைந்த இலிங்கோத்பவர்-முற்காலச் சோழர் காலத்திய திருமேனி

(Vi) ஹோமபூசை :

*ததோ ஹோமம் ப்ரகுர்வீத மூர்த்திபைஸ்ஸஹ தேசிக : |*
*சமிதாஜ்யாந்ந லாஜைஸ்ச திலசர்ஷப வைணவை : || 9*

*பலாசோதும்பராஸ்வத்த ப்லக்ஷா : பூர்வாதி திக்ஷுச |*
*சம்யபாமார்(க்)க ஸ்ரீ வ்ருக்ஷ மாயூராவந்ஹி கோணத:|| 20*

*ப்ரதாநஸ்ய பலாசஸ்து ஸச ஸர்வத்ரவாமத : |*
*த்ரவ்யை: ஏபி: க்ரமாத் ஹுத்வா ப்ரஹ்மாணம் விஷ்ணுமேவச || 21*
*குரு : ப்ரதாநகுண்டேது தர்ப்பயேத் சமிதாதிபி : |*
*ராத்ரி சேஷம் வ்யபோஹ்யாத ப்ரபாதே விமலேதத : || 22*
*தேசிகஸ்ஸு விசுத்தாத்மா மூர்த்திபை : ஸஹதத்வவித் |*
*பிம்பாநுத்த்ருத்ய ஸம்பூஜ்ய கும்பான் குண்டேஷு பாவகாந் || 23*
*தேசிகாதீம்ஸ்ச ஸம்பூஜ்ய தக்ஷிணாம் தாபயேத் தத : |*

தனது உதவியாளர்களுடன் கூடிய ஆசார்யன் குண்டங்களில் ஹோமத்தைத் தொடங்குக. சமித்; நெய்; அன்னம்; நெற்பொரி; தேன்; எள்; வெண்கடுகு ஆகியவற்ருல் ஹோமம் செய்க,

பலாசு; முருக்கு; அசோகு; அத்தி; வன்னி; ஆல்; வில்வம்; மயிற்கொன்றை; ஆகியவை சமித்துக்களாம். ப்ரதாநகுண்டத்தில் பலாசு கொள்க. அதையே எல்லாக் குண்டங்களிலும் கொள்க. மற்ற த்ரவ்யங்களாலும் அயன், அரி ஆகியோரையும் ஹோமத்தால் பூசிக்க.

குருவானவர் பிரதான குண்டத்தில் ஹோமம் செய்க. இரவுப் போது கழிந்தபின் காலையில் புனித வேளையில் தத்துவ ஞானியாகிய குரு தன் உதவியாளர்களுடன் எழுப்பி, உரிய இடத்தில் நிறுவிப் பூசிக்க. கும்பங்களைப் பூசித்து ஹோம பூசையும், பூர்ணுதியும் முடிக்க. ஆசார்யனுக்கும் உதவியாளர்கட்கும் உரிய சன்மானத்தைச் செய்விக்க.

4. திருக்குடக்முழுக்கு :

*முகூர்த்த நாடிகா பூர்வே மந்த்ர ந்யாஸம் ஸமாசரேத் || 24*
*வேத்யா : கும்பான் சமுத்த்ருத்ய ததக்ரே ஸ்தண்டிலே ந்யஸேத் |*
*கும்பாத் பீஜம் ஸமாதாய தேவஸ்ய ஹ்ருதி விந்யஸேத் || 25*
*வர்த்தந்யா : பீஜமாதாய பாததேசே ऽபிஷிசேத் ஷேசயேத் |*
*வித்யே சேப்ஸ்ததாந்யஸ்த்வா தஜ்ஜலைர்ஸ்நாபயேத் ப்ரபும் || 26*
*ப்ரம்ஹவிஷ்ணோஸ் ஸ்வபீஜந்து தத்வத் ந்யஸ்த்வாऽபிஷேசயேத் |*
*ஸ்நபநம் பூஜநம் குர்யாத் அந்தே சோத்ஸவ ஸம்யுதம் || 27 ||*

*பிம்பாந் ஸம்ஸ்தாபயேத் பஸ்சாத் ப்ரம்ஹாணம் தக்ஷிணே குரு: ।*
*வாமபாகே து தேவஸ்ய விஷ்ணும் சம்ஸ்தாபயேத் குரு : ॥ 28 ॥*
*அநுக்தம் அத்ர ஸாமான்யம் ப்ரதிமா ஸ்தாபநோ க்தவத் ।*

குறித்த புநித வேளையில், வேதிகையினின்று கும்பங்களை எடுத்து பிம்பங்களின் எதிரில் மேடை மேல் வைக்க. மந்த்ர ந்யாஸம் செய்க. பிரதான கும்பங்களிலிருந்து மூலத்தை எழுப்பி, மூர்த்திகளின் இதயத்தில் பதிவிக்க, வர்த்தனி பீஜத்தை லிங்கபாதத்தில் பதித்தபின், அந்நீரால் அபிடேகிக்க. பின் வித்தியேச குடநீரால் இறைவர்க்கு முழுக்கிடுக. அயன், அரி, உருவங்களையும் நன்கு நிறுவி அவரவர் குட நீராலாட்டுக. இங்கு சொல்லப்படாத சடங்குகளை பொது விதியின் அடிப்படையில நிறைவேற்றுக.

**5. பலச்ருதி :** (பயன் தெரிவித்தல்)

*லிங்கோத் பவ ப்ரதிஷ்டாந்து குர்யாத் ஏவம்ஹி யோதர : । 29*
*இஹைவதநவாந் ஸ்ரீமாந் சோடந்தே ஸாயுஜ்ய மாப்நுயாத் ॥ 29½*

லிங்கோத்பவ மூர்த்தியின் பிரதிஷ்டையை இங்குக் கூறியபடி யாரொருவர் செய்விக்கின்றனரோ, அவர் இம்மையில் அறிவும், திருவும் பெற்று; முடிவில் திருவடியில் ஒன்றுவர்.

**இதி லிங்கோத்பவ பிரதிஷ்டாவிதி படல :**
**பஞ்சாசத் தம ;**

இவ்வாறு ஐம்பதாம் படலமாகிய இலிங்கோத்பவ பிரதிஷ்டைவிதி படலம் நிறைவுற்றது.

# காரணாகமம் - பூர்வபாகம்
# இலிங்கோத்பவர் பிரதிஷ்டாவிதி
## ( 74 - வது படலம் )

1. தோற்றுவாய் :

*ஸ்தாபநம் சம்ப்ரவக்ஷ்யாமி பரம் லிங்கோத்பவஸ்யது |*
*யத்ததம் ச்ரீகரம் புண்யம் ராஜராஷ்ட்ர விவர்த்தநம் || 1 ||*

திருவும் மெய்ப்பொருளும் தருவதும் அரசுக்கும் நாட்டுக்கும் நன்மை தருவதுமான, உயர்நிலை தரும் லிங்கோத்பவரின் பிரதிட்டையைச் சொல்லுகிறேன்.

2. காலநிர்ணயம் :

*உத்தராயண காலேது சுக்லபட்சே சுபேதினே |*
*சுபவாராதிபிர் யுக்தே பிரதிஷ்டாம் சம்யகாசரேத் || 2 ||*

உத்தராயண காலத்தில் சுக்லபட்சத்தில் நன்னாளில் நல்லோரை முதலிய கூடிய நாளில் பிரதிட்டையைச் செய்க.

3. முன்சடங்குகள் : (i) நேத்ரமோட்சணம் [கண்திறப்பு]

*ரத்ந ந்யாஸம் ப்ரகர்த்தவ்யம் பூர்வோக்தவிதிநா புத : |*
*அத: பரம் விசேஷேண குர்யாந்நயன மோட்சணம் || 3 ||*
நேத்ரத்வ்ய யுதர்க்ஷேஷு ஸுமுஹூர்த்தே ஸுலக்நகே |

அறிஞர்கள் முன்சொன்ன விதிப்படி ரத்ந ந்யாஸம் செய்க. நல்வேளையில் நல்லோரையில் இருகண்களையும் திறந்திடுக.

(ii) தான்யசயனம் :

விசித்ரமண்டபே மத்யே ஸ்தண்டிலம் சாலிபி: குரு || 4||
தஸ்யோர் த்வே விந்யஸேத் பிம்பம் தட்சே வாமேத்வஜம் ஹரிம் |
ஹேமஸூசி ப்ரஹாராப்யாம் பக்ஷ்மரேகாம் சமாலிகேத் || 5 ||
அஸிதம் மண்டலம் லிக்ய த்ருஷ்டி மண்டல மாலிகேத் |
நேத்ரமந்த்ரம் சமுச்சார்ய லேபயேத் தேசிகோத்தம: || 6 ||
ப்ரம்ஹாணஞ்ச ஹரிஞ்சைவ ஹம்ஸ வாராஹரூபகான் |
நயநோந்மீலநம் ஹ்யேவம் காரயேத் சில்பவித்தம: || 7 ||
ஹேமாங்குலீய வஸ்த்ராத்யை: ஸம்பூஜ்ய உத்வாஸ்ய சில்பிநம் |
*ததக்ரே ஸ்தண்டிலம் க்ருத்வாபிம்பம் தஸ்யோபரி ந்யஸேத் || 8 ||*

பல் வகையாய் அணிசெய்த மண்டபத்தின் நடுவில் நெல்லினால் மேடை அமைக்க, அதன்மேல் லிங்கோத்பவரின் பிரதிமையை அமர்த்துக பிரதிமையின் வலப்புறம் அயனையும் இடப்புறம் அரியையும் அமர்த்துக, பொன்னாலான ஊசிகொண்டு இமைகளை வரைக, அதன்பின் வெண்விழி யையும் கருவிழியையும் வரைக, நேத்திர மந்திரத்தால் ஆசாரியன் தேனாலும் நெய்யாலும் கண்களில் பூசுக. அன்னம் மற்றும் ஏன உருவிலுள்ள அயன், அரி உருவங்களுக்கும் கண் திறப்பை சிற்ப வித்தகர்கள் செய்க. பொன் மோதிரம், வஸ்திரம் முதலியவைகளால் திருப்தி செய்வித்து சிற்பியை அனுப்பிவைக்க. மண்டபத்தின் முற்புறம் மேடை அமைத்து சிலைகளை அதன் மேல் வைக்க.

**(iii) நேத்ரதர்ப்பணம்:**

*அபித: கலசான் அஷ்டௌ சஸூத்ரான் சுத்தோத பூரிதான் |*

*ஸகூர்ச்சான் சாபிதாநாம்ஸ்ச ஸவஸ்த்ரான் இந்த்ராதிஷு ந்யஸேத் || 9*

இந்த்ராதீன் லோகபாலாம்ஸ்ச கலசேஷு யஜேத் ததா |

தர்ஜந்யநாமிகா மத்யாங்குலிபிஸ் ஸௌவர்ணகைர் நகை: || *10* ||

ஸூர்ய ஸோமாக்நி தேவத்யை: ப்ரோக்தம் நேத்ரத்ரயேஷு ச |

நேத்ரம் மத்வாஜ்ய ஸூக்தாப்யாம் மத்வாப்யாஜ்யாந்து தர்ப்பயேத் || 11 ||

மூலமூர்த்தி (லிங்கோத்பவர்) சிலையைச் சுற்றிலும், நூல்சுற்றியும், நீரால் நிரப்பியும், கூர்ச்சம், வஸ்திரங்கள் ஆகியவற்றால் அலங்கரிக்கப்பட்டவையுமான எட்டுக் கலசங்களை அமைக்க, அவற்றில் இந்திரன் முதலாக எட்டுத் திசையின் அதிபர்களையும் பூசிக்க. சுட்டுவிரல், நடுவிரல், அணிவிரல் ஆகியவற்றில் பொன்னினாலான நகங்களை அணிந்து அவைமூலம், சூர்ய, சந்திர, அக்நி நேத்திரங்களில் மது; ஆஞ்ய சூக்தங்களால் தேனையும் நெய்யையும் விட்டுப் பூசுக. *(ஒரு திரையால் சிலைகளை மறைக்க.)*

**)iv) நேத்ர தர்சநம்; திருமஞ்சநம்: முதலியன:**

மதுநாச க்ருதேநைவ பாத்ரே ப்ரஸ்த ப்ரபூரிதே |

தத்ஸூத்ராப்யாம் க்ரமேணைவ தர்சயேத்து விசக்ஷண; || 12

கௌர் தேநு பாவ்ய மந்த்ரேண ஸவத்ஸாம்காம் ப்ரதர்சயேத் |

தான்யராசிம் அகோரேண ப்ரம்ஹ சூக்தேந பூசுரான் || 13

ப்ரம்ஹணஸ்ச ஹரேரேவம் காரயேத்து விசக்ஷண; |

ப்ரச்சந்ந படம் ஆவர்ஜ்ய ஜநஸங்கான் ப்ரதர்சயேத் || 14

ஸ்நாபயேத் பஞ்சகவ்யைஸ்ச அஷ்டம்ருத் சலிலை; ஹ்ருதா |

ஸ்நாபிதை: கலசாதிஸ்து ப்ரதிமாம் ஸ்தாபயேத் தத :|| 15

அஷ்டம்ருத் ஸலிவைர் விஷ்ணும் ப்ரம்ஹாணும் அபிஷேநயேத் |
கந்த புஷ்பாதிபிர் பிம்பாந் ஈசாநேநது பூஜயேத் || 16

ஆசார்யம் பூஜயேத் தத்ரவஸ்த்ர ஹேமாங்குலீயகை: |
வஸ்த்ரை: ஆபரணை: மால்யை: பிம்பான் ஸம்பூஜயேத்தத: || 17

தேன், நெய் இவற்றில் ஒவ்வொரு படிகொண்ட பாத்திரங்களை மதுசூத்ரம், ஆஜ்யசூக்தம் ஆகியவற்றைக்கூறி தேவனுக்குக் காண்பிக்க. கௌர்தேநு பாவ்ய மந்த்ரங்களால் கன்றோடு கூடிய பசுவைக் காணச் செய்க. அகோரத்தால் தானியக் குவியலைக் காண்பிக்க. ப்ரம்மஸூக்தத்தை உச்சரித்து அந்தணரைக் காண்பிக்க, அயன், மால் சிலைகளுக்கும் இவ்வாறே செய்க. மூடிய திரையை விலக்குக. பிரதிமைகளை அனைத்து மக்களும் காணச்செய்க.

(அதன்பின்) பஞ்சகவ்யம்; உழவுமண்; மற்றும் குளிர் நீரால் லிங்கோத்பவர் மற்றும் அயன் மால் சிலைகளையும் சுத்திசெய்க. கலச நீரால் ஆட்டுக. சந்தனம் புஷ்பம் ஆகியவற்றாலும் வஸ்திரங்களாலும் மாலைகளாலும் சிலைகளை அலங்கரிக்க. ஈசானத்தால் பூசிக்க. ஆசாரியனையும் பொன்மோதிரம் வஸ்த்ரம் ஆகியவற்றால் பூசித்து திருப்தி செய்க.

### 3 (v) கிராம பிரதட்சிணம் :

ரங்கேவா சிபிகாயாம் வா ரதேவாऽரோபயேத் தத: |
சர்வாலங்கார சம்யுக்தம் ஸர்வாதோத்ய சமாயுதம் || 18
க்ராம ப்ரதட்சிணம் க்ருத்வா ப்ரவிச்யாத ஜலாசயம் |

மஞ்சம், சிவிகை அல்லது தேரில் சிலையை ஏற்றுக பல்வகையாக அலங்கரிக்க. பல்வகை வாத்தியங்கள் முழக்கத்துடன் நீர்நிலைக் கரையை அடைக்க.

### (vi) ஜலசயனம் : *[நீர்ப்படை]*

தீரேது ஸ்கண்டிலம் க்ருத்வா சாலிபிர் விமலைர்புத: || 19
தஸ்யோர்த்வேது ந்யஸேத் பிம்பான் கந்தாதிபிர் யஜேத்ஹ்ருதா |
நவாநாஹத வஸ்த்ரேணவேஷ்டயேத்து ப்ருதக் ப்ருதக் || 20
கண்டதக்நே ஜலே மத்யே ப்ரபாம் க்ருத்வாது சுந்தரம் |
சதுர் காத்ர ஸமாயுக்தம் விதாந த்வஜ சம்யுக்தம் || 21
தர்ப்ப மாலா ஸமாயுக்தம் தந்மத்யே பவகோபரி |
சாயயேத் ப்ரதிமாஞ்சைவ ப்ராக் சிரஸ்சோர்த் வவக்த்ரகம் || 22
உபயோ; பார்ச்வயோ: விஷ்ணும் ப்ரஹ்மாணம் ச யஜேத்புத: |
அபித: கலசாந் அஷ்டௌ சூத்ராதிபிஸ் ஸமந்விதான் || 23
இந்த்ராதிஷு ச விந்யஸ்ய லோகபாலாந் யஜேத்ஹ்ருதா |
ஏகராத்திரம் த்விராத்ரம் வாத்ரிராத்ரம்வாஜலோஷிதம் || 24

நீர்க்கரையில் புதிய ஆய்ந்த நெற்களால் மேடை செய்க. அதன் மேல் பிரதிமைகளை வைக்க இருதய மந்திரத்தால் சந்தனம் முதலிய வற்றால் அலங்கரிக்க. தனித்தனியே புதுத் துணிகளால் அலங்கரித்துச் சுற்றுக. கழுத்தளவின் ஆழமுள்ள நீரில் மேடை அமைக்க. அதைச் சுற்றிலும் கால்களை நாட்டி மேல்விரிப்பு, கொடிகளால் அலங்கரிக்க, தருப்பை மாலைகளால் அலங்கரிக்க. அதன்மேல் பலகையை இடுக பிரதிமையை கிழக்கே சிரமும் மேல்நோக்கிய முகமாக படுக்கவைக்க இருபுறங்களிலும் அயன், திருமால் சிலைகளை வைக்க. சுற்றிலும் நூல் சுற்றி அலங்கரித்த எட்டுக் கலசங்களை அமைக்க. இந்திரன் முதலான எண்திசைக் காவலர்களை அவற்றில் நிறுவிப் பூசிக்க. மூன்று; அல்லது இரண்டு; அன்றி ஓரிரவேனும் நீர்ப்படை நடத்தப்படவேண்டும்.

## (vii) மண்டப நிர்மாணம் :

ஆலயஸ்ய அக்ரகேவாபி தட்சிணே சோத்தராபிவா ।
த்வாதசம் தசஹஸ்தம் நவஹஸ்தமதாபிவா ॥ 25

கலாஸ்தம்பைர் யுகாச்ரந்து காரயேத் மண்டபம் புத: ।
தத்ரி பாகைக பாகேந தந்மத்யே வேதிகாம் குரு ॥ 26

கலாத்வய சமுத்சேதா தர்ப்பணோதர சந்நிபா ।
மாநுஷேதுபதே சைவ குண்டாநி பரித: குரு ॥ 27

யுகாச்ரஞ்ச இந்து கண்டஞ்ச பூதாச்ரஞ்ச குணாச்ரகம் ।
இந்த்ராதிஷு மஹாசாசு கோணேஷ்வேவ குசாசயம் ॥ 28

ஈசாந சக்ரயோர் மத்யே ப்ரதாநம் வர்துளம் குரு ।
தஸ்ய பஸ்சிம பாகேது விஷ்ணோஸ்து பரிகல்பயேத் ॥ 29

ப்ரம்ஹண: பூர்வபாகேது ஸ்நாச்வப்ரம் ப்ரகல்பயேத் ।
பஸ்சாத் சில்பிநம் உத்வாஸ்ய கோமயேந அநுலோபயேத் ॥ 30

ஆலயத்தின் எதிரிலோ, வலப்புறத்திலோ, இடப்புறத்திலோ மண்டபம் அமைக்க. பன்னிரண்டு, அல்லது பத்து, அல்லது ஒன்பது முழப்பக்கம் உள்ள நாற்சதுர மண்டபம் அமைக்க. பதினாறு கால்களுடையதாக மண்டபம் வைக்க. அதன் நடுவில் மண்டப அளவில் மூன்றிலொருபாக அகல நீளமும்; இருமுழ உயரமும் கொண்டு மேற்புறமும் அடிப்புறமும் அகன்றும், இடைப்பகுதி சுருங்கியும் உள்ள வேதிகை (மேடை) அமைக்க, அதனைச்சுற்றிலும்; நாற்சதுரம்: பிறை; ஐங்கோணம்; முக்கோணம், வட்டம்; அறுகோணம்; பத்மம்; எண்கோணம்; யோனி எனும் வடிவுகள் கொண்ட குண்டங்களை அமைக்க. ஈசானம்; கிழக்கு இவற்றின் இடையில் பிரதான குண்டம் அமைக்க. அதன் இருபுறமும் அயன், மால் ஆகியோர்க்கு இடம் அமைக்க. அயனின் கீழ்ப்புறம் ஸ்நானமண்டபம் அமைக்க. பின் சில்பியை விடையளித்தனுப்புக. மண்டபத்தை கோமயத்தால் மெழுகுக.

3. (viii). மண்டப அலங்காரம் : பிம்பசுத்தி :

மண்டபம் பூஷயேத் பஸ்சாத் யுகத்வாரஸ்ய தோரணம் ।
விதாநத்வஜ சம்யுக்தம் காத்ரவேஷ்ட நஸம்யுதம் ।। 31
முக்தா தாமைஸ்ச விவிதை: தர்ப்பமாலா சமாவ்ருதம் ।
மங்கலாங்குர ஸம்யுக்தம் அஷ்டமங்கல சம்யுதம் ।। 32
ப்ராம்ஹணான் போஜயித்வாது உச்சிஷ்டோத்வாஸநம் குரு ।
கோமயாலேபநம் குர்யர்த் ப்ரோட்சயேத் புருஷேணது । 33
ஸமரீய பதேதீமான் வாஸ்து ஹோமம் தத : குரு ।
பர்யக்நிகரணம் குர்யாத் மண்டபந்தேந வந்ஹிநா ।। 34
த்வாரபூஜாதிகம் சர்வம்ஸ்தாபந க்ரமவத்புத : ।
ஸ்தண்டிலம் காரயேத் வேத்யாம் அஷ்டத்ரோணைஸ்ச சாலிபி : 35
ததர்த்தை : ஸ்தண்டிவோபேதம் ததர்த்தைஸ்துதிவைரபி ।
தர்ப்பை : புஷ்பை : பரிஸ்தீர்ய ஸ்தண்டிலம் பூஜயேத் ஹ்ருதா ।। 36
ஸர்வாதேத்ய ஸமாயுக்தம் ஸர்வாலங்கார ஸம்யுகதம் ।
ஞுலாத் உத்தீர்ய பிம்பாம்ஸ்ச ஸ்நாநஸ்வப்ரோபரி ந்யஸேத் ।। 37
பரித : கலசஸ்தாம்ஸ்ச லோகபாலான் விஸர்ஜயேத் ।
வஸ்த்ராதிநி விஸ்ருஜியாத பூர்வவத் சுத்திம் ஆசரேத் ।। 38
கந்த புஷ்பாதிபிர்பிம்பாண் ஈசாநேநது பூஜயேத் ।
கௌதுகம் பந்தயேத்தீமான் பிம்பான் ப்ராகுக்த மார்க்கத : ।। 39
சயநம் கல்பயேத் பஞ்சசர்ம ஜாத்யைம் அநுக்ரமாத் ।
ஸ்நாநவேத்யாம் ஸமுத்திருத்ய விந்யஸேத் சயநோபரி ।। 40
கந்தபுஷ்பாதிபிர் பிம்பம் பூஜயேத் ஹ்ருதயேநது ।
சயநே சாயயேத் பிம்பம். ... ... ... ... ... ...

மண்டபத்தின் நான்கு வாயில்களையும் தோரணங்கள் மேற்கட்டு கனத்ததுணிமாலைகள் ( தொம்பைகள் ) ஆகியவற்றுல் அலங்கரிக்க, முத்துமணிமாலைகள்; தருப்பமாலைகள்; மங்கல முளைகள்; அஷ்டமங்கலப் பொருள்கள் ஆகியவற்றுலும் அலங்கரிக்க, அந்தணர்கட்கு அமுதளித்த பின் மீண்டும் கோமயத்தால் மெழுகிப் புனிதம் செய்க, தத்புருஷமந்திரத்தால் புனிதநீரைத் தெளிக்க. அறிவிற்சிறந்த ஆசான் மண்டபத்தில் வாஸ்து ஹோமம் செய்து வாஸ்து பூஜையும் சாந்தியும் செய்க. வாஸ்து சாந்தியின்பின் வாஸ்து அக்நி மூலம் மண்டபத்தை சுத்தி செய்க. த்வார பூஜை முதல் அனைத்துப் பூசனையும் முறையாய்ச் செய்க.

வேதிகையின் மேல் எட்டு மரக்கால் நெல்லைப் பரப்புக. அதிற் பாதியளவு அரிசியை அதன் மேல் பரப்புக. அதில் பாதியளவு எள்ளை அதின் மீது பரப்புக. தருப்பை; புஷ்பம் ஆகியவற்றுல்

பரப்பிஇருதயத்தால் பூசிக்க. பல்வகை இசைக்கருவிகள் முழங்க, பல்வகை அலங்காரங்கள் கொண்ட சிலைகளை நீர்நிலையிலிருந்து எழுப்புக. திருமஞ்சன மேடையில் அமர்த்துக. நீர் மேடையைச் சுற்றியுள்ள எட்டுகும்பங்களிலிருந்து திசைக்காவலர்களை பூசித்து விடையளிக்க. ஆடைகளை நீக்கி சிலைகளைச் சுத்தி செய்க. ஈசானத்தால் சந்தனம்; மலர் ஆகியவற்றால் பூசிக்க. காப்பு நாண் கட்டுக, வேதிகை மேல் அமைத்த பஞ்ச சயனத்தில் திருமஞ்சனமேடையிலிருந்து எடுத்து அமர்த்துக. இருதயத்தால் மலர்களாலும் சந்தனத்தாலும் பூசிக்க, அதன்பின் பள்ளியில் சிலையைப் படுக்கையில் அமர்த்துக ...

3. (ix) பிம்பபூஜை :

... ... ... ப்ராக் சிரஸ்சோர்த் வவக்த்ரகம் || 41
ப்ரஹ்மாணம் தக்ஷிணேசைவ விஷ்ணும் வாமேநசாயயேத் |
வஸ்த்ரேண வேஷ்டயேத் பிம்பான் கந்தாதிபிர் யஜேத் ஹ்ருதா || 42
ப்ரதாந கும்பான் தேஷாஞ்ச சிரோபாகேஷு விந்யஸேத் !
வர்த்த நீம் விந்யஸேத் தீமான் சிவகும்பஸ்ய சோத்தரே || 43
ஸஸூத்ரான் உதகோபேதான் ஸகூர்ச்சான் ஸாபிதாநகான் |
ஸவஸ்த்ரான் ந்ருத்த ஸம்யுக்தான் கும்பான் சம்ப்ரோக்ஷ்ய வர்மணு|| 44
தத்தன் மூர்த்யாக்ருதிம் த்யாத்வா தத்தத் பீஜம் கடேஷுச |
விந்யஸேத்து க்ரமேணைவ ஈசாநநேது பூஜயேத் || 45
பஞ்ச வக்த்ரீஞ்ச பத்மாக்யாம் சாந்தமுத்ராஞ்ச நிஷ்டுராம் |
தர்சயேத் து க்ரமாத் குர்யாத் திக்பந்தஞ்சாஸ்த்ர மந்த்ரத: || 46

... கிழக்கில் சிரமும் மேல்நோக்கிய முகமுமாக அமைக்க. அயனை வலத்தும், மாலை இடப் புறத்தும் வைக்க. பிம்பங்களை ஆடைகள், அணிவித்து, சந்தனம், மலர்கள் ஆகியவற்றாலும் இருதய மந்திரத்தால் பூசிக்க. அவ்வம் மூர்த்திகளின் சிரத்தருகில் அவரவர்க்குரிய பிரதான கலசங்களை வைக்க. சிவகும்பத்தின் அருகில் அன்னை (வர்த்தநி) யின் கலசத்தினை வைக்க. கலசங்களை நூல் சுற்றி நீர் நிரப்பி; கூர்ச்சம்; ஆடைகள்; மந்த்ர ந்யாஸம்; தளிர்கள் ஆகிய வற்றால் அலங்கரிக்க. சக்தியால் புனிதநீர் தெளிக்க. அவ்வம் மூர்த்திகளை தியானித்து அவரவர்க்குரிய பீஜ மந்திரங்களை அவ்வக் கலசத்தில் ஆவாஹநம் செய்க. ஈசாந மந்திரத்தால் பூசிக்க, ஐம்முக; பதும; சாந்த முத்திரைகள் காட்டி. திஷ்டுர முத்திரையாங் சாந்நித்யத்தை நிலைப்பிக்க. அஸ்திரமந்திரத்தால் திக்பந்தனம் செய்க.

3. (x) கலசபூஜை :

அபிதஸ்து கடான் அஷ்டௌஸஸூத்ரான் வஸ்த்ரயுக்மகான் |
இந்த்ரா சாதிஷு ஸம்ஸ்தாப்ய வித்யேசாநாம் ஸ்வபீஜகை: 47
ந்யஸ்த்வாஸம் பூஜயேத் கந்த புஷ்பாத்யை: ஹ்ருதயேநது |
நைவேத்யம் தாபயித்வாது தாம் பூலம் தாபயேத் ப்ருதக் || 48



படம் - 29

தஞ்சை மாவட்டம் - திருநனிப்பள்ளி (புஞ்சை) - ஸ்ரீ நல்துணை ஈஸ்வரம் கோயில் மகர தோரணத்துடன் கூடிய இலிங்கோத்பவர்.



படம் - 30

தஞ்சை - கரந்தட்டாங்குடி ஸ்ரீ விசிஷ்டேஸ்வரர் கோயிலில் விளங்கும் இலிங்கோத்பவர்.

சிவகும்பதைச் சுற்றிலும் கிழக்கு முதலாக அட்டவித்தியேசர்களை எட்டு கும்பங்களைத் தாபித்துப் பூசிக்க. இருதயமந்திரத்தால் சந்தநம்; மலர் ஆகியவற்றால் பூசிக்க. நிவேதநம் அளிக்க. தனித்தனி தாம்பூலம் அளிக்க.

3: (*Xi*) ஹோம பூஜை :

ப்ராக் உக்தலக்ஷணோபேத : ஸர்வாபரணபூஷித : |
நவவஸ்த்ர தரோஷ்ணீஷ : ஸோத்தரீய : ஸ்ரமாலக : || 49
தேசிகோமூர்த்திபை : ஸார்த்தம் ஹோமகர்ம ஸமாரபேத் |
அக்ன்யாதாநாதிகம் ஸர்வம் அக்நிகார் யோக்தமாசரேத் || 50
ஸமிதாஜ்ய சருன் லாஜம் யவஞ்ச திலஸர்ஷபம் |
ஹோமத்ரவ்யாணி ஸப்தைதே ஜுஹுயாத்து க்ரமேண து || 51
பலாசௌதும் பராச்வத்த ப்லக்ஷா : பூர்வாதி திக்ஷுச |
சம்யக் பில்வஞ்ச மாதுரகம் விதிக்ஷு பரிகல்பயேத் || 52
ஈசானேந ஸமித் ஹுத்வா ஆஜ்யம் மூலேநஹோமயேத் |
ப்ரதாநஸ்ய பலாசந்து ஸர்வேஷாம் இத்மம் உச்யதே || 53
சிரஸாது சரும் ஹுத்வா லாஜம் வாமேந ஹோமயேத் |
யவஞ்ச நேத்ரேண ஹுத்வாது திலம் அஸ்த்ரேண ஹோமயேத் || 54
ஸர்ஷபம் கவசே நைவ த்ரவ்யாந் தேவ்யாஹ்ருதிம் ஹுநேத் |
ப்ரத்யேகம் சதம் அர்த்தம் வா ததர்த்தம் வாபி ஹோமயேத் || 55
த்ரயம்பகே நைவ மந்த்ரேண ஹுத்வாஜ்யேநைவ ஷோடச |
வதநம் ஹிருத்ப்ரதேசந்து நாபிஞ்சைவ க்ரமேணது || 56
ப்ரத்வேகந்து ததாக்ருத்வா ஹுத்வாந்தேது விசேஷத : |
ப்ரம்மஜஜ்ஞான மந்த்ரேண ஹுத்வா ஜ்யேநைவ பூர்வவத் || 57
ப்ரும்மாணந்து ஸ்ப்ருசேத் பஸ்சாத் இதம்விஷ்ண் வேதிமந்த்ரத : |
ஆஜ்யேந பூர்வவத் ஹுத்வா ஸ்ப்ருசேத் விஷ்ணும் க்ரமேணது || 58
அதப்ரும்ஹ ஷடங்கை : ச மூலமந்த்ரை : தசாட்சரை : |
பீஜமுக்யை : க்ருதேநைவ ப்ரத்யேகத்து சதம் ஹுநேத் || 59

முற்கூறியவாறு நற்கூறுகள் கொண்ட ஆசார்யன் புத்தாடைகள், தலைப்பாகை; மேலாடைகொண்டு; பல்வகை அணிகள் அணிந்து; மாலைகள் பூண்டு; தன் உதவியாளர்களுடன் ஓம காரியத்தை ஆரம்பிக்க.

அக்நியை உண்டாக்குதல் முதலாக அனைத்துக் காரியங்களையும் முறையாகச் செய்க. சமித்து; நெய்; சரு ( ஹவிஸ் ); நெற்பொரி; கோதுமை; எள்; தேன்; வெண்கடுகு ஆகியவை ஹோம திரவியங்களாகும். இவற்றைக் கொண்டு முறையாக ஹோமம் செய்க.

( பலாசு, முருக்கு ) ஆல்: அரசு; கொன்றை; வன்னி; வில்வம்; கரும்புத்துண்டுகள் ஆகியவை சமித்துக்களாம். இவற்றை எட்டுத் திக்குகளிலுமுள்ள குண்டங்களில் முறையே பயன் படுத்துக.

ஈசானமந்திரத்தால் சமித்தும்; மூலமந்திரத்தால் நெய்யும்; ஹோமம் செய்க. [ பிரதானகுண்டத்தில் பலாசமும் பிற குண்டங்களில் மற்ற சமித்துக்களும் பயனுகும். இல்லாவிடில் பலாசத்தையே பயன் படுத்துக. ] சிரோமந்திரத்தால் சருவும்; வாமமந்திரத்தால் பொரியும்; நேத்திரமந்திரத்தால் கோதுமையும்; அஸ்திரத்தால் எள்ளும்; கவசத்தால் தேன், வெண்கடுகும் ஓமிக்க. முடிவில் வ்யாஹ்ருதி மந்திரங் களால் ஓமஞ்செய்க.

அக்நியின் முகம்; இதயம்; நாபி ஆகிய இடங்களில் ''த்ரியம்பக''; மந்திரத்தால் பதினறுமுறை ஓமம் தனித்தனி செய்க. முடிவில் நெய்யினுல் ப்ரும்மக்ஞான மந்திரத்தால் ஓமம்செய்க. ப்ரம்ம பிரதிமையைத் தொட்டு நியாஸம் செய்க. ''இதம் விஷ்ணு :'' என்ற மந்திரத்தால் ஓமம் செய்து விஷ்ணுபிரதிமையில் நியாஸம் செய்க. பிரம்ம ஷடங்க மந்திரங்களாலும்; மூலமந்திரங்களாலும்; தசாட்சரி யாலும்; முக்கிய பீஜமந்திரங்களாலும் நெய்யினுல் தனித்தனியே நூறு ஆகுதி செய்க. பூரணுகுதி செய்க.

(i) காலேக்கடன்கள் :

4. குடமுழுக்கு :

ந்ருத்தகேயை ; சவி விதை : ராத்ரிசேஷம் வ்யபோஹ்ய ச ।
தேசிகோ மூர்த்திபை : ஸார்த்தம் ஸ்நாநத்ரயம் ஆசரேத் ॥ 60
அங்கந்யாச கரந்யாஸம் ப்ராகுத்தவிதிஞ குரு ।
பூர்வோக்த விதிமார்க்கேண தேசிகாதின் ப்ரபூஜயேத் ॥ 61

இரவின் பிற்பகுதியில் ஆடல், பாடல் முதலியவற்றை நடத்துவிக்க. ஆசாரியன் உதவியாளர்களுடன் காலேயில் மூன்று ஸ்நாநங்களேயும் செய்க. முன்சொல்லிய விதிப்படி அங்கநியாசம் ; கரநியாசம் முதலியன செய்க. குரவர்களேப் பூசிக்க.

(ii) பிம்பபூசை முதலியன:

உத்த்ருத்ய சயநாத் பிம்பான் வஸ்த்ராதிநி விவர்ஜயேத் ।
கந்தபுஷ்பாதிபி ; ஸைவ ஈசானேநது பூஜயேத் ॥ 62
கும்பான் குண்டாநி ஸம்பூஜ்ய கந்த புஷ்பாதிபி : ஸஹ ।
ஜயாதி பிரப்யா தாநஞ்ச ராஷ்ட்ர பிருத் சக்ரமாதுனேத் ॥ 63
பூர்ணுஹுதிஞ்ச ''சிரஸா யதஸ்ய'' இதிச ஹோமயேத் ।
உத்த்ருத்ய சயநாத் பிம்பம் ஸ்நாநச்வப்ரேது விந்யஸேத் ॥ 64
க்ருதம் சிரோர்ப்பணம் குர்யாத் பிராகுக்த விதிநாஸஹ ।
அஷ்டத்ரிம் சத் கலாந்யாஸம் மகுடாதி க்ரமாத் ந்யஸேத் ॥ 65

ப்ரம்ஹாணம் ச ஹரிம் சைவ அட்சரந்யாஸ மாசரேத் ।
அங்கேஷ் வங்காநி விந்யஸ்ய ஈசாநே நைவ பூஜயேத் ।। 66

சயநத்திலிருந்து பிரதிமைகளை எழுப்புக. ஆடைகளை மாற்றுக. சந்தனம்; மலர்களால் ஈசானத்தால் பூசிக்க. அவ்வாறே சந்தனம், மலர்களால் கும்பங்களையும்; குண்டங்களையும் பூசிக்க. வெற்றி முதலிய அமையவும்; அரசுக்கு நன்மை வரவும் ஹோம பூசை செய்க. ''சிரஸாதஸ்ய'' என்ற மந்திரத்தால் பூரணாஹுதி செய்க. சிலைகளை திருமஞ்சன மேடையில் அமர்த்துக

சிலைகளின் சிரஸில் நெய்யினால் பூசுக. முன் சொல்லிய விதிப்படி அஷ்டத்ரிம்சத் கலாந்யாஸம் செய்க. மகுடம் முதலாக நியாஸம் செய்க. அட்சர நியாஸம் செய்க, அயன்; திருமால் முதலியோர்க்கும் அட்சர நியாஸம் செய்க. அங்கங்களில் அங்கநியாஸம் செய்க. ஈசானத்தால் பூசிக்க.

**(iii) கோயில் பிரதட்சிணம் :**

ஸர்வா தோத்ய ஸமாயுக்தம் ஸர்வாலங்கார ஸம்யுதம் ।
கும்பா நுத்த்ருத்ய சிரஸா பாஹ்ய தாமப்ரதட்சிணம்।। 67

க்ருத்வா பிம்பாக்ரகே சைவ ஸ்தண்டிலோபரி விந்யஸேத் ।
முகூர்த்தே ஸமநுப்ராப்தே ஸ்தாபநந்து ஸமாரபேத் ।। 68
யதோத் க்ருஷ்டக்ரமம் க்ஞாத்வா ததாஸம் ஸ்தாபநம் குரு ।

அனைத்து இசைக் கருவிகளும் கூடி முழங்கிட்; நன்கு அலங்கரித்த கும்பங்களை சிரஸில் தாங்கி கோயிலை வலம் வருக. [அவ்வாறே சிலைகளையும் நிறுவுமிடத்துக்குக் கொண்டு சென்று நிறுவுக.] எதிருள்ள மேடைமீது கும்பங்களை வைக்க. உரியவேளையில் நிறுவுகையைத் தொடங்கி சிறந்த வகையில் சிலைகளை நிறுவுக.

**4 (iv) குடமுழுக்கு :**

கும்பாத் பீஜம் சமாதாய த்யாத்வா பிம்ப ஹ்ருதிந்யஸேத் ।। 69

தத்கும்பஸ்த ஜலேநைவ தேவேசம் அபிஷேசயேத் ।
வர்தந்யாம் பீஜமாதாய அதோபாகேது விந்யஸேத் ।। 70

வர்தனீஸ்தோதகைஸ்ஸ்நா யதத்ர ஸம்பூஜயேத் ஹ்ருதா ।
வித்யேச்வரகடைர்தேவம் ஸ்நாப்யேசாநேந பூஜயேத் ।। 71

விஷ்ணுபீஜம் ஸமாதாய ப்ரதிமாஹ்ருதி விந்யஸேத் ।
கந்த புஷ்பாதிபிஸ்சைவ ஈசாநேநது பூஜயேத் ।। 72

ப்ரஹம்பீஜம் ஸமாதாய ந்யஸேத் தத்தத் ப்ரசேதேசகே ।
கந்த புஷ்பாதிபிஸ்சைவ பூஜயேத் ஹ்ருதயேநது ।। 73

ப்ரத்யேகம் ஸ்நபநம் க்ருத்வா அர்ச்நோக்தம் ஸமாசரேத் ।
ஆலயந்து நயேத் பஸ்சாத் பிம்பாந் ஸம்ஸ்தாபயேத் புத; ॥ 74
ப்ரஹ்மாணம் தக்ஷிணே பாகே விஷ்ணு வாமேது விந்யஸேத் ।
கந்தபுஷ்பாதிபி: பூஜ்ய ப்ரபூத ஹவிஷந்ததேத் ॥ 75

நன்கு தியானித்து, பீஜத்தினை (மூலமந்திரத்தை) கும்பத்தினின்றெழுப்பி லிங்கோத்பவரின் இதயத்தில் நிறுவுக. அந்த கும்ப ஜலத்தினால் இறைவரை அபிஷேகம் செய்க. வர்த்தநி கும்பத்திலிருந்து மந்திரத்தை எழுப்பி இறைவர் திருவடிப் பகுதியில் நிறுவுக வர்த்தநி கும்பஜலத்தால் முழுக்காட்டுக. இருதயமந்திரத்தால் பூசிக்க. அட்ட் வித்யேச கும்ப நீராலும் இறைவர்க்கு முழுக்காட்டுக. வித்தியேச மந்திரங்களால் பூசிக்க

விஷ்ணு கும்பத்திலிருந்து விஷ்ணு மூலமந்திரத்தைத் திருமால் பிரதிமையின் இதயப் பகுதியில் தாபிக்க, முழுக்காட்டுக. ஈசான மந்திரத்தால் பூசிக்க.

பிரம்மாவின் சிலையில் இருதயத்தில் ப்ரம்ம கும்பத்திலிருந்து மூல மந்திரத்தை எழுப்பி நிறுவுக. மற்ற மந்திரங்களையும் அவ்வவ்விடங்களில் நிறுவுக.

இருதய மந்திரத்தால் சந்தனம் மற்றும் நறுமலர்கள் கொண்டு அருச்சிக்க. தனித்தனியே நிறுவிய கும்பங்களால் நீராட்டி அருச்சனை முதலியவற்றைச் செய்க.

பிரதிமைகளை உரிய இடத்தில் உரியவாறு நிறுவுக. அயனை வலப்புறத்தும் அரியை இடப்புறத்தும் நிறுவுக. சந்தனத்தாலும் மலர்களாலும் பூசிக்க. சிறப்பாக அமைக்கப்பட்ட திருஅமுதுகளைச் சமர்ப்பிக்க.

### 4 (v) விழா எடுத்தல் :

உத்ஸவம் காரயேத் பஸ்சாத் ஏகாஹம் த்ரியஹந்துவா ।

இதன்பின்னர் மூன்று நாட்கள் அல்லது ஒருநாளேனும் விழா எடுக்க.

### 5. பயன் தெளிவு :

ஏவம் ய:குருதே மர்த்யம் ஸபுண்யாம் கதிம் ஆப்நுயாத் ॥ 76

இவ்வாறு செய்பவர்கள் உயர் புண்ணியப் பேற்றினை அடைவார்கள்.

# காரணாகமம் - உத்தரபாகம்
# இலிங்கோத்பவர் பிரதிஷ்டாவிதி
## ( 69-வது படலம் )

1. தோற்றுவாய் :

அதவக்ஷ்யே விசேஷேண லிங்கோத்பவ மஹேச்வரம் ।

இனி லிங்கோத்பவப் பெருந்தேவரின் சிறப்பு அமைவு சொல்வோம்.

2. உருவ அளவு: (i) பாணம் (அ) இலிங்கம்

*சிவலிங்காக்ரு தஞ்சைவ சதுர்மாநம் ப்ரகீர்த்திதம் ॥ 1*
*மத்யே த்விபாகம் ஸங்க்ருஹ்ய அர்த்தசந்த்ராக் ருதிம் கரேத் ।*

லிங்கபாணம் நான்கு மாநம் (பகுதிகளாக) கொள்க. நடு இருபகுதிகளை அர்த்த சந்திரவடிவமாகச் செய்க.

(ii) மூர்த்தி :

*சதுர்ப் புஜம் த்ரிநேத்ரம் ச லலாடாந்தம் ப்ரத்ருச்ய தே ॥ 2*
*ஜங்காந்தம் மத்யமே ரூபே டங்கம் கிருஷ்ணம்ருகம் ததா ।*
*அபயம் வரதோபேதம் டங்கம் து குண்டலம் ததா ॥ 3*
*ஹார கேயூர சம்யுக்தம் மணிமாலா விபூஷிதம் ॥*
*ஊர்த்வே ஹம்ஸாக்ருதிம் ஸவ்யே அத : கோலாக்ருதிம் சரேத் ॥ 4*
*பாஹ்யே த்விபார்ச்வயோஸ்சைவ ப்ரம்ஹவிஷ்ணூக்ருதாஞ்ஜலௌ*
*ஏவம் ப்ரகல்ப்ய விதிவத் ப்ரதிஷ்டாம் காரயேத் புத : ॥ 5*

*( அங்நடுப்பகுதியில் )* நாற்பெருந்தோளர்; முக்கண்ணர்; மழு; மான்; அபயம்; வரதம் கொண்டவர்; குழைக்காதர்; இரத்தின மாலைகள்; தோள் வளைகள்; உருத்திராக்க மணிமாலைகள்; அணிந்தவராக சிவபிரானை நெற்றி முதல் தொடைவரை காணப்படுபவராய் அமைக்க. மேற்பகுதியில் அன்னப்பறவையும்; அடிப்பகுதியில் வராக உருவமும் பொறிக்க. பெருமானின் வலப் புறம் அயனையும்; இடப்புறம் அரியையும் உருவாக்குக. இவ்வுருவங்களை விதிப்படி உருவாக்கி பிரதிட்டைக்குரிய செயல்களைத் தொடங்குக.

3. பிரதிட்டைவிதி :

*(i)* யாகசாலை முதலியன அமைத்தல் :

*ஷோடச ஸ்தம்ப சம்யுக்தம் யாகசாலாம் ப்ரகல் பயேத் ।*
*மத்யேவேதிம் ப்ரகல்ப்யாத தர்ப்பணோதர சந்நிபம் ॥ 6*

தான்யராசிம் ப்ரகல்ப்யாத அஷ்ட த்ரோணைஸ்ச சாலிபி : ।
மத்யே பத்மஞ்ச சம்லிக்ய தசகும்பம் ந்யஸேத் தத : ॥ 7
சப்தவிம் சத் கடாந் ந்யஸ்ய சர்வோபகரணைரபி ।
நவகுண்டம் ப்ரகல்ப் யாத பஞ்ச குண்டமதாபிவா ॥ 8
மேகலாத்ரய ஸம்யுக்தம் ஸதாஹபரி சேஷ்டிதம் ।
அண்டஜம் முண்டஜம் சைவ ரோமஜம் தாருஜந்து தா ॥ 9
யோ நிஜம் தாந்ய ஸஹிதம் சயநாரோபணந்ததா ।
ஸ்வர்ணேந ரஜதே நைவ ரட்சாபந்தநம் உத்தமம் ॥ *10*

பதினாறு தூண்களுடன் கூடிய யாகசாலையை அமைக்க. அதன் மத்தியில் நான்கு தேய்ந்த மெழுகுப்பான வேதிகையை அமைக்க. எட்டு மரக்கால் அளவுள்ள நெல்லினால் பரப்பி மேடை அமைக்க. மத்தியில் தாமரையை எழுதுக அதன்மேல் பத்து நூல்சுற்றி அலங்கரித்த, நீர் பூரித்த தம்பங்களை வைக்க. யாகசாலையைச் சுற்றிலும் இருபத்தேழு கலசங்களை அமைக்க. ஒன்பது அல்லது ஐந்து யாககுண்டங்களை மூன்று மேகலைகளுடன் அமைக்க. வஸ்திரங்களைச் சுற்றி பலவகை அலங்காரங்களால் அலங்கரிக்க. பலவேறு வகை வித்துக்கள் கொண்ட படுக்கையை அமைத்து அதன் மீது பிரதிமையைக் கிடத்துக. தங்கம் அல்லது வெள்ளியினால் செய்த கங்கணத்தை அணிவிக்க.

**3. ii ஜலசயனம் :**

ஷோடச ஸ்தம்ப சம்யுக்தம் சிலைர்வா ஸ்தாணுபிஸ்ச வா ।
த்ருணேநோ பரிசாபூர்ய ஜலமத்யேப் ரகல்ப யேத் ॥ *11*
தந்மத்யே சைவ பர்யங்கம் தஸ்யோபரி ந்யஸேத் தத : ।
ப்ராக் சிரஸ் சோர்த்வ வக்த்ரந்து ஜலமத்யே விநிக்ஷிபேத் । *12*
தசகும்பாந் ந்யஸேச் சைவ தந்மத்யே தேவமர்ச்சயேத் ।
இந்த்ராதி லோகபாலாம்ஸ்ச அர்ச்சயேத்து விசேஷத : ॥ 13
த்ரிதினம் த்விதினம் வாஏபி திநமேகந்துயா மகம் ।
யாமார்த்தம் வா ஹரேச் சைவ வேதகோஷை : ஸமந்விதம் ॥ 14
உத்தாப்ய ரதமாரோப்ய விஸ்ருஜேத் கும்பமாசரேத் ।
க்ராமப்ரதட்சிணம் க்ருத்வா மண்டபத்வாரமாவிசேத் ॥ 20

பதினாறு கால்களையுடைய மண்டபத்தினை கழிகளாலும் புற்களாலும் தடுக்குகளாலும் இலைகளாலும் நன்குமூடுக. அதன் நடுவில் நீரினைத்தேக்குக. அதன் நடுவில் மஞ்சம் அமைத்திடுக. கிழக்கில் சிரமும் மேல் நோக்கிய முகமுமாய் நீரில் மூழ்கியவாறு பிரதிமையை அமர்த்துக. பத்துக் கும்பங்களைச் சூழ அமைத்து விதிப்படி இறைவரைப் பூசிக்க. இந்திரன் முதலிய உலகின் தலைவர்களை விதிப்படி சிறப்பாகப் பூசிக்க. மூன்று நாட்கள் ; இரு நாட்கள் : ஒருநாள் ; ஒரு யாமம் அரையாமம் (ஒரு முகூர்த்தம்) என்ற அளவுகளில் வேதபாராயணத்துடன் பூசிக்க, பின்னர் பிரதிமையை எடுப்பித்து கும்பத்தில் பூசித்த மந்திரங்களை பிரதிமையில் ந்யஸிக்க. பிரதிமையை கிராமப்பிரதட்சிணம் செய்விக்க. பிரதிட்டைக்குரிய யாகமண்டபத்தின் வாயிலை அடைந்து உள்செல்க.

3 (iii) தான்யபரயநம் :

*தான்யராசிம் அலங்க்ருத்ய த்ரிகும்பம் விந்யஸேத் தத: ।*
*சூர்ய ஸோமாக்நிம் ஆவாஹ்ய பூஜயேத்யோக மார்க்கத: ।। 16*

*உத்தராபிமுகோ பூத்வா அக்நி கார்யம் ஸமாசரேத் ।*
*ரவிம் ஸோமஞ்ச சிகிநம் ப்ரத்யேகம் தசசங்க்யயா ।। 17*

*தத்தந்மூலேந ஹுத்வாது அக்நிமுத்தாப்ய யோஜயேத் ।*
*யத்வாச ஜபஸங்க்யாம்ஸ்ச அஷ்டாவிம்சதி ஸங்க்யயா ।। 18*

*தத்தந் மந்த்ரம் ஜபேத் சைவ அக்நிகார்யம் விநா குரு: ।* 18½

வேதிகையின் மேலுள்ள தானிய மஞ்சத்தை அலங்கரித்து மூன்று கும்பங்களை வைக்க, அவற்றில் சூரியன்; சந்திரன்; அக்நி ஆகியோரை யோகத்தால் பூசிக்க, வடக்கு, நோக்கி அமர்ந்து அக்நிகார்யம் செய்க. சூரியன், சோமன், அக்நி ஆகியோரின் மூலமந்திரங்களால் பத்துப் பத்தாகுதி செய்க. அக்நியிலிருந்து மூலமந்திரங்களை எழுப்பி கும்பங்களில் சேர்க்க. மேலும் இருபத்தெட்டு முறை மூலமந்திரங்கள் மூன்றையும் செபிக்க.

3 (iv) நேத்ரோந்மிலநா் (கண் திறத்தல்):

*ஆசார்யஸ் ஸவ்யதிக்பாகே வாமே ஸ்தபதிரேவ ச ।। 19*
*ஆசார்யோ மந்த்ரமுச்சார்ய தத்தந்மந்த்ர ஸமந்வித: ।*
*பூர்ணசந்த்ர நிபாகாராம் டங்கேந நேத்ர மத்யமே ।। 20*

*குலிரம் மந்த சந்தாட்ய ஸ்தபதி: க்ரம யோகத: ।*
*ஸ்தாபகோ மந்த்ரயோக்யஸ்ச ஸ்வர்ணபத்ர ஸமந்விதம் ।। 21*

*தந்மத்யே மது நிக்ஷிப்ய ஸ்வர்ண தூர்வாம் க்ருஹேத் தத: ।*
*ஆசார்யோ மதுசங்க்ருஹ்ய தூர்வயா நேத்ர மத்யமே ।। 22*

*உதீச்யமிதி மந்த்ரேண லேபயேத் சாதகோத்தம: ।*
*ஆஜ்யேந லேபநம் க்ருத்வா சஸ்த்ரதோஷ நிவாரணம் ।। 23*

பிரதிமையின் வலப்புறம் ஆசார்யனும் இடப்புறம் சிற்பியுமாய் அமர்க. ஆசார்யன் மூலமந்திரத்தை செபிக்க. மந்திர சொரூபமாக பாவிக்க. மந்திர சொரூப மாக்கப்பட்ட உளியினுல் கண் விழியின் நடுப்பகுதியில் நிதானமாகவும், மிருதுவாகவும் வட்டமாக பொளிக. அதன் பின் பொன்னுலான அறுகினைக் கொண்டும் பொன் இலை கொண்டும் தேனைக் கண்ணின்மேல் வைக்க. ஆசார்யன் பொன்னறுகினல் "உதீச்யம்" என்னும் மந்திரத்தால் தேனைப் பூசுக. அதன்பின் உளிபட்ட குறை நீங்க நெய்யினுல் பூசுக.

3(v) பிரதிமா தர்சநம் :

*ப்ரச்சந்ந படமாநீய படமாக்ருஷ்ய புத்திமான் ।*
*குஞ்சிகா தர்சநம் பூர்வம் விப்புரயுக்மேந தர்சநம் ।। 24*

*கோதர்சநம் தத: க்ருத்வா சந்யாஸீ தர்சநம் தத: ।*
*ராஜதர்சநமாலோக்ய ஜநெஸ்ஸந்தர்சநம் தத: ।।25*

பிரதிமையை மெல்லிய துணியால் மூடுக. பின் முகத்தைத் திறந்து இருபிராமணர்களால் தான்ய ராசியைக் காண்பிக்க. பின்னர் கோதர்சநமும், சந்நியாஸி தர்சநமும் ராஜதர்சநமும் பின் பொதுமக்கள் தரிசநமும் செய்விக்க.

3. (vi) சயனாரோபணம் :

*பிம்பசுத்திம் தத : க்ருத்வா சயநாரோபணந் ததா।*
*வேதிகா மத்யமே பூஜ்ய பூர்வவச்சார்ச் சயேத்தத : ॥ 26*

பிம்பசுத்திசெய்து பிரதிமையை எழுப்புக. வேதிகை நடுவில் அமர்த்துக. முன்சொன்ன முறைகளால் பூசிக்க. ( பிரதிமையை உரியஇடத்தில் அமர்த்துக.)

4. பிரதிமா ஸ்தாபநம் :

*பிரணவம் பூர்வமுச்சார்ய ககாரஞ்ச த்விதியகம்।*
*ஸ்தம்பருத்ராய இத்யேதே நமோந்தஞ்சார்ச்ச யேத்தத :। 27*
*ஆவாஹ்ய மூலமந்த்ரேண அஞ்சலித்ரயம் ஆசரேத்।*
*பஞ்சாவரண மார்க்கேண பூஜயித்வா விசேஷத :॥ 28*
*அக்நிகார்யம் ஸமாராத்ய பூர்வோக்த விதிநாஹுநேத்।*
*ஜயாதிரப் யாபிதாநஞ்ச ராஷ்ட்ர ப்ருத்ச ஹுநேத் புந :॥ 29*
*அக்நிமுத்தாப்ய உத்வாஸ்ய உத்தாப்ய கடேஸம் யோஜயேத் தத:। 29½*

(பின் கண்ட) மூலமந்திரத்தால் நன்கு பூசிக்க. முதலில் பிரணவம், (ஓம்); பின் ககாரத்தையும் (வம) அதன்பின் "ஸ்தம்ப ருத்ராய" எனும் வாசகமும் இறுதியாய் "நம:" என்னும் முடிவையும் உச்சரித்து மந்திரோத்தாரணம் செய்க.

*[ "ஓம் கம் ஸ்தம்ப ருத்ராய நம :"*
**"ओम् खं स्तंभरुद्राय नमः' ]**

மூலமந்திரத்தால் ஆவாஹநம் செய்து மூன்று முறை புஷ்பாஞ்சலி செய்க. ஐந்து ஆவரணங்களிலும் அவ்வவ்வாரண தேவர்களைப் பூசிக்க. மூலமூர்த்திக்கும் ஆவரண தேவர்கட்கும் உரிய மந்திரங்களால் முறையே ஓமம் செய்க. அரசன் முதலானோர் நன்மையின் பொருட்டு பூசையும் ஓமமும் செய்க. பூரணாஹுதி செய்து மூர்த்தியையும் மந்திரங்களையும் கும்பத்தில் சேர்க்க.

5. குடமுழுக்கு :

*ஸுமுகூர்த்தே ஸுலக்நேச அபிஷிச்ய ஹவிர் ததேத்॥ 30*
*ஸ்நபநம் காரயேத் பஸ்சாத் ஆசார்யம் பூஜயேத் தத :।*
*ப்ராம்ஹணாந் போஜயேத் தத்ர தேவஸாந்நித்ய காரணம் ॥ 31*

குறித்த நாளின் நல்லோரையில் (குட)நீரால் முழுக்காட்டுக. அதன்பின் திருமஞ்சனமும் (பூசையும்) செய்விக்க. இறைவர் எழுந்தருளக் காரணமான ஆசாரியனை உரியமுறையில் பூசிக்க. அந்தணர்க்கு அமுது செய்விக்க.

6. பலச்ருதி : (பயன் தெரிவிப்பு)

*ஏவம் ய ; குருதே மர்த்ய ; ஸ புண்யாம் கதிம் அவாப் நுயாத்। 31½*

இவ்வாறு யாரொருவர் செய்விக்கின்றனரோ அவர் புண்ணியப் பேற்றினை அடைவர்.



படம் - 31

முற்காலச் சோழர் கலைப்பாணி

காமரசவல்லி - ஸ்ரீ காமகோடீஸ்வர ஆலயம்.



படம் - 32

கீழூர் - வீரட்டானேஸ்வரர் திருக்கோயில் - முற்காலச் சோழர் காலம்

# அஜிதாகமத்தில் - இலிங்கோத்பவர் உருவமைதி

## [ *கிரியாபாதம் - படலம் 36 - மூலம் - விளக்கம்* ]

𑌲𑌿𑌂𑌗𑍋𑌦𑍍𑌭𑌵 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 ॥

𑌲𑌿𑌂𑌗𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌦𑍇𑌵𑌂 𑌤𑍍𑌰𑌿𑌨𑍇𑌤𑍍𑌰𑌂𑌚 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑌮𑍍 ।
𑌰𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌂 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌭𑌰𑌣 𑌭𑍂𑌷𑌿𑌤𑌮𑍍 ॥
𑌜𑌟𑌾𑌮𑌕𑍁𑌟 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍋𑌤𑍍𑌤𑌰𑌯𑍋𑌃 𑌕𑍍𑌰𑌮𑌾𑌤𑍍 ।
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰 𑌗𑌙𑍍𑌗𑌾 𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑍍𑌯𑌾𑌲 𑌧𑌤𑍍𑌤𑍂𑌰 𑌸𑌂𑌯𑍁𑌤𑌮𑍍 ॥
𑌵𑌾𑌮 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌯𑍋𑌃 𑌚𑌾𑌪𑌿 𑌲𑌿𑌂𑌗𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌯𑍇𑌤𑍍 ।
𑌅𑌧𑍋𑌨𑌪𑌾𑌦𑌯𑍋𑌃 𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌮𑍌𑌲𑍇𑌰𑌨𑍍𑌤𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥

𑌤𑌤𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌂𑌶𑌂 𑌨𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌅𑌗𑍍𑌰𑍇 𑌮𑍂𑌲𑍇 𑌚 𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌹𑌂𑌸 𑌰𑍂𑌪𑌂 𑌤𑍁 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌪𑍋𑌤𑍍𑌰𑌿𑌮𑍁𑌖𑌂 𑌤𑌥𑌾 ॥

*லிங்கமத்யே ஸ்திதம் தேவம் த்ரிநேத்ரம்ச சதுர்(ப்) புஜம் |*
*ரக்த வர்ணம் ப்ரஸந்நாஸ்யம் ஸர்வாபரண பூஷிதம் ||*
*ஜடாமகுட சம்யுக்தம் தக்ஷிணோத்தரயோ : க்ரமாத் ||*
*சந்த்ர கங்கா சமாயுக்தம் வ்யால துத்தூர சம்யுதம்*
*வாம தட்சிணயோ : சாபி லிங்கமத்யே ப்ரகல்பயேத் |*
*அதோ ந பாத்யதா த்ருஸ்யம் மௌலே ரூர்த்(த்) வம்ததைவ ச ||*
*தத் த்ரியம் சம் நத்ருச்யம் ஸ்யாத் அக்ரே மூலே ச காரயேத் |*
*ப்ரஹ்மாணம் ஹம்ஸரூபம்து விஷ்ணும் சேபாத்ரீமுகம்ததா ||*

"இலிங்கத்தின் மையத்தில் முக்கண்ணராயும்; நாற்பெருந் தோளராயும், செந்நிறத்தராயும், மலர்ந்த முக முடையராயும், பல்வகை அணிகள் பூண்ட வராயும், சடைமுடியராயும் இறைவரை வடிக்க. சடையின் வலப்புறம் பிறை மதியும்; இடப்புறம் கங்கையும்; பாம்பும், ஊமத்தை மலரும் வடிக்கப்படுக. கீழ்ப்புறத்தே திருவடிகளும் மேற்புறம் சடையின் நுனியும் காணப்படா வகையால் அமைக்க. லிங்க உச்சியின் வலப்புறம் அன்னப் பறவை உருக் கொண்ட அயனையும், இடப்புற அடிப்பகுதியில் வராக முகம்கொண்ட திருமாலையும் முக்கால் பகுதி காணப்படுமளவில் அமைக்க".

# சுப்ரபேதாகமத்தில்
# இலிங்கோத்பவர் திருமேனி

**சுப்ரபேதாகமம் - I : 34 : 111 – 113**

... ... ... ... 𑌲𑌿𑌂𑌗𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌿𑌮𑌤𑌃 𑌪𑌰𑌮𑍍 ।
𑌲𑌿𑌂𑌗𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌹𑌂𑌸𑌰𑍂𑌪𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 ।
𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂𑌵𑌰𑌾𑌹𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌤𑍁 𑌲𑌿𑌂𑌗𑌸𑍍𑌯𑌾𑌧𑌃 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌯𑍇𑌤𑍍 ।
𑌹𑍃𑌦𑌯𑍇𑌽𑌂𑌜𑌲𑌿 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌵𑌿𑌷𑍍𑌣𑍂 𑌚 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌯𑍋𑌃 ।
𑌲𑌿𑌂𑌗𑌮𑌧𑍍𑌯𑍇 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍇𑌖𑌰𑌮𑍍 ।
𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑍌 𑌤𑌸𑍍𑌯 𑌪𑌾𑌦𑌾𑌬𑍍𑌜𑍌 𑌤𑌥𑍈𑌵 𑌮𑌕𑍁𑌟𑌂 𑌯𑌥𑌾 ॥

... ... ... ... ... ... ... லிங்கோத் பத்திம் அத : பரம் |
லிங்கம் க்ருத்வோர்த்வதோ ப்ரம்ஹா ஹம்ஸரூபஸ் ததைவ ச ||
விஷ்ணும் வராஹவக்த்ரம் து லிங்கஸ்யாத : ப்ரகல்பயேத் |
ஹ்ருதயேடஞ்சலி சம்யுக் தௌ ப்ரம்ஹாவிஷ்ணூ ச பார்ச்வயோ : ||
லிங்கமத்யே து கர்த்தவ்யம் பூர்வவத் சந்த்ரசேகரம் |
அத்ருச்யௌ தஸ்ய பாதாப்ஜௌ த தைவ மகுடம்யதா ||

" இதன்மேல் லிங்கோற்பத்தியைக் கூறப்படுகிறது. இலிங்கத்தைச் செய்து அதன் மேற்பகுதியில் அன்னப்பறவை உருக்கொண்ட அயனையும்; இலிங்கத்தின் அடிப்பகுதியில் வராக முகம் கொண்ட அரியையும் வடிக்க. இருபுறமும் மார்பிற் கூப்பிய கையினராய் அயனை வலப்புறத்தும் அரியை இடப்புறத்தும் சுய உருவில் அமைக்க. இவர்கட் கிடையில் சந்திரசேகர மூர்த்தியை சடை முடியின் நுனியும்; திருவடிகளும் காணா நிலையில் அமைக்க. "

# பிரதிமாலட்சணத்தில் இலிங்கோத்பவர்

* लिङ्गोद्भवमूर्तिः । ( இலிங்கோத்பவமூர்த்தி )

अथ वक्ष्ये विशेषेण लिङ्गोद्भवविधिं श्रृणु ।
लिङ्गाकारस्य मध्ये तु चन्द्रशेखरमूर्तिवत् ॥

नळकात्तलपर्यन्तं लिङ्गे शूलसमवन्वितम् ।
ब्रह्मापि हंसरूपेण ऊर्ध्वे वै वामपार्श्वके ॥

विष्णुर्वराहरूपेण दक्षिणेंऽशे त्वधोगतः ।
विष्णुर्दक्षिणपार्श्वे तु वामपार्श्वे पितामहः ॥

हृदयेऽञ्जलिसंयुक्तौ स्थितौ लिङ्गं समीक्ष्य च ।
रक्तश्या महिरण्याभा ईशविष्णुपितामहाः ॥

एवं लिङ्गोद्भवं ख्यातं वृक्षसङ्ग्रहणं ततः ।

(अंशुमद्भेदागमे षट्सप्ततितमपटले ॥)

( அம்சுமத்பேதாகமம் - 78வது படலம் )

पूर्ववत्कारयेत्सम्यक् चन्द्रशेखरमूर्तिनम् ।
लिङ्गाधः शर्वजान्वन्तभागं नेन्द्रियगोचरम् ॥

लिङ्गोर्ध्वाधःप्रदेशे तु हंसंसूकरमाचरेत् ।
बिम्बस्याननमानेन कारयेद्धंसमादरात् ॥
बिम्बद्विमुखमानेन भूकृष्टास्यं तु सूकरम् ।
ब्रह्मविष्णू द्विपार्श्वस्थौ नतौ तस्यानुकूलकौ ॥
तिर्यग्गतसुपादौ तौ सर्वावयवसुन्दरौ ।
लिङ्गोद्भवस्त्विति ख्यातो ब्रह्माविष्ण्वभिनन्दितः ॥
ब्रह्मविष्णु विहीनो वा हंससूकरसंयुतः ।

(उत्तरकामिकागमे पञ्चाशत्तमपटले)

( உத்தரகாமிகாகமம் - 50வது படலம் )

---

* இப்பகுதியினைத் தொடர்ந்து ஷி மூல பாடத்தின் சுலோகமும் விளக்கமும் தமிழிலேயே கொடுக்கப்பட்டுள்ளதைக் காணலாம்

लिङ्गं कृत्वोर्ध्वतो ब्रह्मा हंसरूपं तथैव च।
विष्णुं वराहवक्त्रं तु लिङ्गस्याधः प्रकल्पयेत्॥

हृदयेऽञ्जलिसंयुक्तौ ब्रह्मविष्णू च पार्श्वयोः।
लिङ्गमध्ये तु कर्तव्यं पूर्ववच्चन्द्रशेखरम्॥

अदृश्या तस्य पादाब्जौ तथैव मकुटं यथा।

(सुप्रभेदागमे चतुस्त्रिंशत्तमपटले॥)

(சுப்ரபேதாகமம் - 34வது படலம்)

अथ लिङ्गोद्भवं वक्ष्ये लिङ्गाकारस्य मध्यतः।
नलकात् पादस्य तलं लिङ्गं शूलसमायुतम्॥
चन्द्रशेखरवत्सर्वं कारयेत्सुन्दराकृतिम्।
ब्रह्मा तु हंसरूपेण ऊर्ध्वगो वामपार्श्वतः॥
विष्णुर्वराहरूपेण दक्षिणांशे त्वधोहतः।
हृदयेऽञ्जलिसंयुक्तौ रक्तश्यामनिभौ परम्॥
वीक्षमाणौ परं लिङ्गमिदं लिङ्गोद्भवं स्मृतम्।

(शिल्परत्ने द्वाविंशपटले॥)

(சில்பரத்தினம்)

आयामं यत्तु लिङ्गस्य भूतांशं विभजेत्ततः।
ऊर्ध्वे व्योमां शकं त्यक्त्वा मूले चैव तथा भवेत्॥

तन्मध्ये कारयेद्धीमांश्चद्रशेखरमूर्तिताम्।
अजविष्णू द्विपार्श्वे द्वौ नमस्कृत्वानुकूलकौ।

धर्मांशं विभजेल्लिङ्गं शरांशमुदयान्तयोः।
लिङ्गोर्ध्वे कारयेद्धंसमधस्तात्सूकराननम्॥

विष्णुं सङ्कल्पयेदुर्वीमाननेनैव कर्षितम्।
बिम्बस्य द्विमुखेनैव हंसरूपं तु कारयेत्॥

ऋज्वागतिस्थितिं वामाद्वरदाभयहस्तम्।
कृष्णापरशुसंयुक्तं कारयेदिन्दुशेकरम्॥

अधोभागे तु भागेन जान्वन्तं तु न दृश्यकम्।
एवं लिंगोद्भवं कुर्याच्चन्द्रशेकरमुच्यते ॥

(कारणागमे एकादशपटले ॥)

( காரணாகமம் - 11வது படலம் )

लिङ्गाकारस्य मध्ये तु चद्रशेखरवत्स्थितम्।
नलकाधस्स्थितं पादं लिंगोद्भवसमन्वितम् ॥
विरिञ्चिर्हंसरूपेण चोर्ध्वगो वामपार्श्वके।
दक्षे वराहरूपस्य रूपेणाधोगतो हरिः ॥

प्रतिमालक्षणानि।

वामदक्षिणपार्श्वस्थौ कृताञ्जलिसमन्वितौ।
स्वरूपेण द्विपादस्थावजविष्णू विभोः मरे ॥
एवं लिङ्गावतारं तु सर्वशान्तिकरं सदा।

तुङ्गाङ्गविस्तृतिनतांसकलम्बमानैस्संपन्नचिह्नभुजभूषणवर्णभेदैः
शोभान्वितं शुभकरं सकलप्रजानामैश्वर्य सङ्घपरिवृद्धिकरं विदध्यात् ॥

(श्रीतत्वनिधौ॥)

( ஸ்ரீ தத்வநிதி )

(चन्द्रशेखरमूर्तिः॥)

( பாணத்தில் சந்திரசேகரமூர்த்தி ரூபம் )

इन्दुमौलिप्रतिष्ठां तु वक्ष्ये लक्षणपूर्विकाम्।
आपाद्य च शिलादीनि तैः कुर्य्यात्प्रतिमां गुरुः ॥
चतुर्भुजस्त्रिनेत्रश्च समपात्स्थानके स्थितः।
वराभयमायुक्तपूर्वस्थाकरपल्लवः ॥
वरदं वामहस्ते स्यादभयं दक्षिणे करे।
वरदं यदि तं कुर्य्यादथान्यस्सिंहकर्णिक ॥
उरुस्पृष्टकरो वापि कटको वा विधीयते।
मृगटङ्ककरावन्यौ दोस्सीमान्तं व्यवस्थितौ ॥
मृगटङ्कौ तु कर्णान्तौ कर्त्तरीसंव्यवस्थितौ।
पराङ्मुखो वा मृगष्टङ्कः पराङ्मुखः ॥

रत्नपत्रिकया वापि शङ्खपत्रिकयापि वा।
पद्मपत्रिकया वापि शोभितं वामकर्णकम्॥

प्रतिमालक्षणानि।

सव्यं मकरसिंहाख्यपत्रकुण्डलकैर्युतम्।
पृष्ठतः कर्णपर्यन्तं केशवर्तिविलम्बनम्॥
पार्श्वयोर्बाहुमूलात्तु जटाग्राणां विलम्बनम्।
हारयुग्ग्रीवसंयुक्तं तथा कर्णिकयान्वितम्॥
वक्षस्स्थलं प्रकर्तव्यं भुजाः केयूरसंयुताः।
सुपत्रवलयोपेतास्सर्वरत्नोपशोभिताः॥
मुक्तादामविलम्बाश्च तदग्रं मणिभूषणम्।
कराग्रं कटकोपेतमङ्गुल्यो मुद्रिकान्विताः॥
छन्नवीरोत्तरीयोपवीतैस्सोदरबन्धनः।
समस्तरत्नपाशाख्यकल्लिमाननदामभिः॥
संयुक्तकटिसूत्रोऽन्तः पादजालकसंयुतः।
चन्द्रशेखर एवं स्याद्देव्या च सहितो न वा॥
सापीठाभिन्नपीठा वा देवेनालिंगिताथवा।
तयालिंगितदेहो वा अन्योन्यालिंगितस्तु वा॥
आलिङ्गनयुतो वा स्यान्निरालिंगोऽथवा मतः।

(उत्तरकामिकागमे अष्टाचत्वारिंशत्तमपटले॥)

(உத்தரகாமிகாகமம் - 48வது படலம்)

ऋज्वागतं तु तं देवं मृगं परशुधारिणम्।
कृत्यम्बरधरं देवं कर्तव्यं चन्द्रशेखरम्॥

(सुप्रभेदागमे चतुस्त्रिंशत्तमपटले)

(சுப்ரபேதாகமம் - 34வது படலம்)

---

# சிறந்த நூற்குறிப்புகள்

சிவபெருமானின் 64 மூர்த்தங்களில் சிறப்பாக எண்ணப்படுவது இலிங்கோத்பவ மூர்த்தியாகும். இலிங்கோத்பவ மூர்த்தியின் திருமேனியினை பெரும்பாலான சிவாலயங்களில் உள்ள கருப்பக்கிருக மேற்கு கோஷ்ட மாடத்தில் காணலாம்.

இத்திருமேனி சிவராத்திரியின் நடுஇரவில் தோன்றினதாக புராணம் கூறுகிறது. இதனால் சிவராத்திரியின் இரண்டாம் காலம் இலிங்கோத்பவ மூர்த்தி காலம் என்பர். இம் மூர்த்தியின் வடிவங்கள் பற்றியும் சிறப்பு பற்றியும் பலநூல்களில் அறிவீர்கள்.

குறிப்பாக இப்பகுதியில் வேதம். சம்ஹிதை, உபநிஷத், சிவாகமம், மற்றும் சிற்பநூல்களில் காணும் மிகச் சிறந்த ரூபக் குறிப்புகள் விளக்கத்துடன் இப்பகுதி அமைகின்றது.

o **இருக்குவேதம் :**

( அயனும், திருமாலும் சிவ சோதியைத் தேடிய உண்மை, இங்கு அயன் ( பிரமன் ) அன்னமாகத்தேடியது. )

> '' ப்ரஹ்மாவை ஹம்சோத்பூத்வா சிரோன்
> வேஷ்டவ்யா சகஸ்ரம்ஸமா ஆசன் ப்ரஹ்மா,
> அஹம் சிரேசாநே. த்வமேவ மாதாஸி,
> த்வமேவ பிதாஸி. த்வமேவ ப்ராதாஸி,
> த்வமேவ த்ருஷ்டாஸி கரோத்ராஸி,
> கர்த்தாஸி காரயதாஸி ஜயேஷ்டோஸி
> யயேவம் வேதா சிவசாயுஜ்ய மாப்நோதி ''

அ — **பொருள் :**

| | | |
|---|---|---|
| ப்ரஹ்மாவை ஹம் சோ பூத்வா | — | பிரமன் அன்னப் பறவை வடிவு கொண்டு |
| சிரோன் வேஷ்டவ்யா | — | சிவபிரானுடைய திருவடியைத் தேடுங்கால் |
| சகஸ்ரம் ஸமா | — | ஆயிரம் ஆண்டுகள் ஆயின |
| ஆசன் பிரஹ்மா | — | அப்போது பிரமன் |
| அஹம் சிரோசாநே | — | நான் தேவரீருடைய சிரசை அறிந்திலேன் |

---

o பல்லாண்டுகட்கு முன்பிருந்தே, திருவண்ணாமலைத் திருக்கோயில் - அருணாசலப் புராணப் பதிப்புகளில் காணப் பெற்றுவரும் காணப்பெறும் வேதம் மற்றும் உபநிடதங்களின் மொழிபெயர்ப்பு.

| | | |
|---|---|---|
| த்வமேவ மாதாஸி | — | தாயும் நீரே |
| த்வமேவ பிதாஸி | — | தந்தையும் நீரே |
| த்வமேவ ப்ராதாஸி | — | உடன் பிறந்தாரும் நீரே |
| த்வமேவ த்ருஷ்டாஸி | — | காண்கின்றவரும் நீரே |
| சுரோத்ராசி | — | கேட்கின்ற வரும் நீரே |
| கர்த்தாஸி | — | தலைவரும் நீரே |
| காரய தாஸி | — | செயல்களைச் செய்விக்கின்ற வரும் நீரே |
| ஜ்யேஷ்டோஸி | — | முத்தவரும் நீரே |
| யயேவம் வேதா சிவசாயுஜ்ய மாப்நோதி | — | இப்படி எவன் அறிகின்றானோ அவன் சிவ சாயுச்சியத்தை அடைகின்றான். |
| சிவசாயுஜ்ய மாப்நோதி | — | சிவசாயுச்சியத்தை அடைகின்றான். |

**இருக்கு வேதம் :**

( திருமால் பன்றியாகத் தேடியது )

**'' விஷ்ணூர்வை வராஹம் ரூபமாஸ்தாய.**
**பூமின் விதாரயன் கைஸ்ரம் ஸமா ஆசன்,**
**பாதான் வேஷ்ண பரோபூத்வா,**
**த்வமேவ மாதாஸி, த்வமேவ பிதாஸி**
**த்வமேவ ப்ராதாஸி, த்வமேவ ஜ்யேஷ்டோஸி**
**த்வமேவ ஸ்ரேஷ்டோஸி ய யேவம்,**
**மஹிமாநம் வேதா த்ரஷ்டா பவதி,**
**விக்ஞாதா பவதி, கர்த்தா பவதி,**
**காரயதா பவதி, யயேவம் வேதா**
**சிவசாயுஜ்ய மாப்நோதி சிவசாயுஜ்யமாப்நோதி ''**

**அ — பொருள் :**

| | | |
|---|---|---|
| விஷ்ணூர்வை வராஹம் ரூபமாஸ் தாய | — | திருமால் பன்றியுருக் கொண்டு |
| பூமிம் விதாரயன் | — | பூமியைப் பிளந்து செல்கையில் |
| ஸகஸ்ரம் ஸமா ஆசன் | — | ஆயிரம் ஆண்டாயின |
| பாதான் வேஷ்ண ப்ரோ பூத்வா | — | சிவபெருமானுடைய திருவடி களைத் தேடுவதில் விருப்ப முடைய திருமாலானவர் |
| த்வமேவ மாதாஸி | — | தாயும் நீரே |
| த்வமேவ பிதாஸி | — | தந்தையும் நீரே |
| த்வமேவ ப்ராதாஸி | — | உடன் பிறந்தவரும் நீரே |



படம் - 33

முற்காலச் சோழர் கலைப்பாணி புள்ளமங்கை ஸ்ரீ பிரமபுரீஸ்வரர் திருக்கோயில்.



படம் - 34

திருநெல்வேலி மாவட்டம்

திருவாலீஸ்வரம் - திருவாலீஸ்வரர் கோயில் ஸ்ரீ விமானத்தின் மேற்குப் பக்கமாய் (முதல் அடுக்கில்) விளங்கும் இலிங்கோத்பவர் சிற்பம்.

| | | |
|---|---|---|
| த்வமேவ ஜ்யேஷ்டோஸி | — | மூத்தவரும் நீரே |
| த்வமேவ ஸ்ரேஷ்டோஸி | — | உயர்ந்தவரும் நீரே என்று தோத்திரம் செய்தார் |
| ய யேவம் மஹிமாநம் வேதாத்ருஷ்டாபவதி | — | இப்பெருமையை எவன் அறிஞனோ அவனே காண்பவன் ஆகின்றான் |
| விக்ஞாதா பவதி | — | அவனே அறிபவன் ஆகின்றான் |
| கர்த்தாபவதி | — | அவனே தலைவன் ஆகின்றான் |
| காரயதாபவதி | — | அவனே செயல்களை நடத்துபவன் |
| ய யேவம் வேதா சிவ சாயுஜ்ய மாப்நோதி | — | இப்படி எவன் அறிகிறானோ அவன் சிவ சாயுஜ்ய மடைகின்றான். |
| சிவ சாயுஜ்ய மாப்நோதி | — | சிவசாயுஜ்ய மடைகின்றான். |

**பாஸ்கர சம்ஹிதை :**

*"பிரஹ்மா விஷ்ணு ரஜஸா பத்தவைரௌ*
*மத்யே தயோ த்ருஸ்யதி ஜாத வேதா :*
*ஸ்தாணு ருத்ரஸ் திஷ்டத் நபுஸ்ய கோப்தா*
*தனுஷ்ட் வாஸ்தாணு மு முபரம்ய*
*யுத்தம் ப்ரதஸ்த, தூர்தூ ரமஸௌ தித்ருக்ஷ :*
*வராகோ விஷ்ணூர் நிமமஜ்ஜ,*
*பூமௌ ப்ரஹிமோத் பாத, பூமோ*
*திவமா சுக்ருத்ர"*

**விளக்கம் :**

அயனும் மாலும் இராசத குணமேம்பாட்டால் யுத்தம் செய்த போது, இருவர்க்குமிடையில் உருத்திரக் கடவுள் உலகங்களைக் காக்குமாறு நெருப்புத் தூணாகத் தோன்றினர். அதனைப் பார்த்த அளவில் தங்கள் யுத்தத்தை நிறுத்தி தூரத்தே விலகிச் சென்றனர். பின்னர் திருமால் பன்றியாகிப் பூமியை ஊடுருவிச் சென்றனர். பிரமதேவன் அன்னப்பறவையாகி மேலே தேடிச்சென்றான்.

**சரப உபநிடதம் :**

*"யத்பாதம் போ ருசுத்வம்*
*த்வம் ருக்யதே விஷ்ணுநாசஹ*
*ஸ்துத் வாஸ் தும்யம் மகேசாந*
*மவாங் மனஸ கோசரம்*
*பத தார ம்ருத்நோ விஷ்ணோ*
*பிரசாத மகரோத் விபு"*

**விளக்கம்:**

வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத ஒருவருடைய திருவடித் தாமரைகள் திருமாலால் தேடப்பட்டுக் காணப்பெருமல், அத்திருவடித் தாமரைகளை வணங்கித் துதித்தபின் அவருக்கு ஈஸ்வரன் (சிவபெருமான்) காணப்பெற்ருர்.

**உத்தரகாமிகாகமம் :** ( படலம் – 50 )

பூர்வவத் காரயேத் ஸம்யக் சந்த்ரசேகரமூர்த்திநம் ।
லிங்காத : சர்வஜாந்வந்த பாகம் நேந்த்ரியகோசரம் ॥
லிங்கோர்த்வாத : ப்ரதேசேது ஹம்ஸஸூகரமாசரேத் ।
பிம்பஸ்யாநந மாநேந காரயேத் ஹம்ஸமாதராத் ॥
பிம்பத்விமுக மாநேந பூக்ருஷ்டாஸ்யம் து சூகரம் ।
ப்ரம்ஹவிஷ்ணு த்விபார்ச் வஸ்தௌ நதௌதஸ்யானு கூலகௌ ।
திர்யக் கத சுபாதௌ தௌ ஸர்வாயவசுந்தரௌ ।
லிங்கோத் பஸ்த்விதி க்யாதோ ப்ரஹ்ம விஷ்ணவபி நந்தித : ।
ப்ரம்ஹ விஷ்ணு விஹீநோவாஹம்ஸ சூகர ஸம்யுத : ।

இலிங்கத்தில் (பாணத்தின் குடைவுப்பகுதியில்) சந்திரசேகர மூர்த்தியை அமைக்க. முழங்காலளவின் கீழ் கண்ணுக்குத் தெரியா நிலையில் அமர்த்துக. இலிங்கத்தின் மேல் கீழ்ப்பகுதிகளில் அன்னமும், வராகமும் அமைக்க. பிம்பத்தின் மேனேக்கிய முகத்துடன் அன்னத்தையும், பிம்பத்தில் கீழ்நோக்கிய நிலையில் வராகத்தையும் அமைக்க. பிம்பத்தின் இருபுறங்களிலும் கை கூப்பி பக்தியுடன் வணங்கும் திருமாலையும், அயனையும் அமைக்க. மாலும் அயனும் வணங்கும் இலிங்கோத்பவர் இவ்வாறு சொல்லப்பட்டது.

மாலும், அயனும் இல்லாமல் அன்னமும், வராகமும் கொண்ட நிலையிலும் செய்யலாம்.

**காரணாகமம் :** ( படலம் – 11 )

ஆயாமம் யத்து லிங்கஸ்ய பூதாம்சம் விபஜேத் தத : ।
ஊர்த்வே வ்யோமாம்சகம்த்யக்த் வா மூலேசைவ ததாபவேத் ॥
தந்மத்யே காரயேத் தீமாந் சந்த்ரசேகரமூர்த்திநம் ।
அஜ விஷ்ணு த்விபார்ச்வே த்வௌ நமஸ்க்ருத்வாநு கூலகௌ ॥
தர்மாம்சம் விபஜேத் லிங்கம் சராம்சம் உதயாந்தயோ ; ।
லிங்கோர்த்வே காரயேத் ஹம்ஸம் அதஸ்தாத் சூகராநநம் ॥
விஷ்ணும் சங்கல்பயேத் உர்வீம் ஆநநேநைவ கர்ஷிதம் ।
பிம்பஸ்ய த்விமுகே நைவ ஹம்ஸரூபந்து காரயேத் ॥
ருஜ் வாகதி ஸ்திதிம் வாமாத் வரதாபய ஹஸ்தகம் ।
க்ருஷ்ணா பரசு சம்யுக்தம் காரயேத் இந்துசேகரம் ॥

*அதோபாகே து பாகேந ஜாந்வந்தம் து நத்ருச்யகம் |*
*ஏவம் லிங்கோத் பவம் குர்யாத் ... ... ...*

இலிங்கத்தின் உச்சியில் ஆகாயப் பகுதியையும் அடிமாலே பூமிப் பகுதியையும் விடுக. அடிமுடி தெரியா நிலையில் சந்திர சேகரரை அமைக்க. இருபுறங்களிலும் மனமடங்கி அஞ்சலி செய்வாராய் அயனையும் அரியையும் அமைக்க. மேல் கீழாக லிங்கத்தை ஐந்து பகுதியாயும், வலமிடமாக நாற்பகுதியாயும் பிரித்து, மேற்பகுதியில் அன்னத்தையும் கீழப்பகுதியில் வராகத்தையும் அமைக்க. மையப்பகுதியில் வலக்கரங்களில் மானையும் அபயத்தினையும், இடக்கரங்களில் பரசு, வரதம் இவற்றையும் கொண்டு ஈசரைச் செய்க. முடியின் நுனியும், முழந்தாளின் கீழ்ப்பகுதியும் கண் காணு நிலையில் அமைத்து இலிங்கோத்பவரைச் செய்க.

**அம்சுமத்பேதாகமம் - ( படலம் – 78 )**

*அத வக்ஷ்யே விசேஷேண லிங்கோத்பவ விதிம் ச்ருணு !*
*லிங்காகாரஸ்ய மத்யேது சந்த்ரசேகர மூர்த்திவத் ||*
*நலகாத்தலபர்யந்தம் லிங்கே சூல சமன்விதம் ‘*
*ப்ரம்ஹாபிஹம்ஸ ரூபேண ஊர்த்வேவை வாமபார்ச்வகே ||*
*விஷ்ணுர் வராஹரூபேண தக்ஷிணே(அ)ம்சே த்வதோகத : |*
*விஷ்ணுர் தக்ஷிணபார்ச்வேது வாமபார்ச்வே பிதாமஹ :*
*ஹ்ருதயே ( அ ) ஞ்ஜலி சம்யுக்தௌ ஸ்திதௌ லிங்கம் சமீக்ஷ்யச |*
*ரக்தச்யாம ஹிரண்யாபா ஈசவிஷ்ணு பிதாமஹா : ||*
*ஏவம் லிங்கோத்பவம் க்யாதம். ... — ... ... ... |*

இலிங்கோத்பவர் ( எனும்மூர்த்தத்தைச் சிறப்பாக ) அமைக்கும் விதியைக் கேட்க. இலிங்க உருவின் மத்தியில் சந்திர சேகரர் போல் அமைக்க. சூலக்குறிதாங்கியதாக அடிமுதல் முடிவரை தாங்கியதாக லிங்க உருவினில் அமைக்க. இலிங்கத்தின் உச்சியில் இடப்பகுதியில் அன்னஉருவாய்மேனோக்கிய நிலையில் பிரம்மாவைக் காட்டுக. கீழ்ப்பகுதியில் வலப்புறம் கீழ்நோக்கிய வராக உருவாய் திருமாலைக் காட்டுக. நடுப்பகுதியின் வலப்புறம் மார்பில் கை கூப்பிய நிலையில் திருமாலையும், இடப்புறம் அதே நிலையில் பிரமனையும் அமைக்க. இருவரும் தமது இடையிலுள்ள இலிங்கப் பகுதியை நோக்குவதாய் அமைக்க. சிவன். செந்நிறம் கொண்டவராயும் திருமால் பசும் கருமையும், அயன் பொன்னிறமும் கொண்டவர்களாக அமைக்க. இவ்வாறு இலிங்கோத்பவர் சொல்லப்பட்டது.

**சுப்ரபேதாகமம் : ( படலம் – 34 )**

*லிங்கம் க்ருத்வா ஊத்வதோ ப்ரஹ்மா ஹம்ஸரூபம் ததைவச |*
*விஷ்ணும் வராஹ வக்த்ரம்து லிங்கஸ்யாத ; ப்ரகல்பயேத் ||*

ஹ்ருதயே அஞ்சலிசம்யுக்தௌ ப்ரம்ஹ விஷ்ணூ ச பார்ச்வயோ :।
லிங்கமத்யே து கர்த்தவ்யம் பூர்வவத் சந்த்ர சேகரம் ॥
அத்ருச்யா தஸ்ய பாதாப்ஜௌ ததைவ மகுடம் யதா ॥

இலிங்க மேற்பகுதியில் அன்ன உருவில் பிரமனை அமைக்க. இலிங்கத்தின் அடிப்பகுதியில் வராகமுகம் கீழ்நோக்க திருமாலை அமைக்க. மார்பிற் கூப்பியகையொடு இருபுறங்களிலும் அரியையும் அயனையும் அமைக்க இலிங்கநடுவில் சந்திரசேகரமூர்த்தியை முழங்கால் இலிங்கத்துள் மறைந்த நிலையில் ( முழந்தாளின் கீழ் உள்ள பகுதி கண்ணுக்குப் புலப்படா நிலையில் ) அழகுடைமூர்த்தியாகவும், திருமுடியும் கண்ணுக்குப் புலப்படா நிலையிலும் அமைக்க.

**அஜிதாகமம் :** ( படலம் 36 )

லிங்கமத்யஸ்திதம் தேவம் த்ரிநேத்ரம் து சதுர்ப்புஜம் ।
ரக்த வர்ணம் ப்ரஸந்நாஸ்யம் ஸர்வாபரணபூஷிதம் ॥
ஜடாமகுடஸம்யுக்தம் தட்சிணோத்தரயோ : க்ரமாத் ।
சந்த்ரகங்கா ஸமாயுக்தம் வ்யாலதுத்தூரஸம்யுதம் ॥
வாமதட்சிணயோச் சாபிலிங்கமத்யே ப்ரகல்பயேத் ।
அதோ நபாத்யதாத்ருச்யம் மௌலேரூர்த்வம் ததைவச ॥
தத்த்ரிம்சம் சத்ருச்யம் ஸ்யாத் அக்ரே மூலேச காரயேத் ।
ப்ரம்ஹாணம் ஹம்ஸரூபந்து விஷ்ணும் போத்ரிமுகம்ததா ॥

இலிங்கத்தின் நடுப்பகுதியில் பெருமானைக் கீழ்க்கண்ட உருவமைதியுடன் அமைக்க.

முக்கண்ணர்; நாற்றோளர்; செவ்வண்ணத்தர்; குறுநகைமுகத்தர்; பல்வகை அணிகள் பூண்டவர். சடைமுடியில் வலப்புறம் சந்திரனும் இடப்புறம் கங்கையும் விளங்கப் பூண்டவர். இடப்புறச் சடையில் நாகமும் வலப்புறம் ஊமத்தம்பூவும் கொண்டவர்; முடியின்மேல் வானும் அடியில் பூமியும் காணப்படவேண்டும், மேலே ப்ரம்மா அன்ன வடிவாயும் கீழே திருமால் வராகமாயும் அமைக்கப்படவேண்டும்.

---



படம் - 13

உத்தம தசதாளத்தில் - இலிங்கோத்பவர் சிற்பங்களின் மத்தியில் விளங்கும் [ சந்திரசேகரர் ரூபம் ] திருவுருவம், பாணத்தின் மத்தியில் இத்திருவுருவத்தின் திருமுடியும் திருவடியும் மறைக்கப் பட்டிருக்கும்.

## உத்தரகாமிகாகமத்தில்

## ( படலம் - 48 ) - இலிங்கத்தின் நடுவில் விளங்கும் சிவனுரின் உரு :

* ( சந்திரசேகரரின் திருவுரு போன்று )

இந்து மௌலி ப்ரதிஷ்டாந்து வக்ஷ்யே லட்சண பூர்விகாம் |
ஆபாத்யச சிலாதீனி தை : குர்யாத் ப்ரதிமாம் குரு : ||
சதுர்புஜஸ் த்ரிநேத்ரச சமபாத் ஸ்தானகேஸ்தித : |
வராபய ஸமாயுக்த பூர்வஸ்த கரபல்லவ : ||
வரதம் வாமஹஸ்தே ஸ்யாத் அபயம் தட்சிணேகரே |
வரதம் யதிதம் குர்யாத் அதஅந்ய : ஸிம்ஹகர்ணிக : ||
ஊரூஸ்ப்ருஷ்டகரோ வாபி கடகோ வாவிதீயதே |
ம்ருகடங்க கரௌ அன்யௌ தோஸ்ஸீமாந்தம் வ்யவஸ்திதௌ ||
ம்ருகடங்கௌது கர்ணாந்தௌ கர்த்தரீ ஸம்வ்யவஸ்திதௌ |
பராங் முகோ(அ) பிமுகோ வா ம்ருகடங்க : பராங்முக : ||
ரத்நபத்ரி கயாவாபி சங்க பத்ரிகயாபிவா |
பத்மபத்ரிகயாவாபி சோபிதம் வாமகர்ணகம் ||
ஸவ்யம் மகரஸிம்ஹாக்யபத்ர குண்டல கைர்யுதம் |
ப்ருஷ்டத : கர்ணபர்யந்தம் கேசவர்த்தி விலம்பநம் ||
பார்ச்வயோர் பாஹுமூலாத்து ஜடாக்ராணும் விலம்பனம் |
ஹாரயுக் க்ரிவஸம்யுக்தம் ததா கர்ணிகயாந்விதம் ||
வட்சஸ்தலம் ப்ரகர்த்தவ்யம் புஜா : கேயூர ஸம்யுதா :|
ஸுபுத்ரவலயோ பேதாஸ் ஸர்வரத்நோப சோபிதா : |
முக்ததாமா விலம்பர்ச ததக்ரம் மணிபூஷணம் |
கராக்ரம் கட கோபேதம் அங்குல்யோ முத்ரிகாந்விதா : ||
சந்நவீரோத்தரீயோ பவீதஸ்ஸோதரபந்தந : |
ஸமஸ்த ரத்நபாசாட்ய க்ருத்ரிமாந நதாமபி : ||
ஸம்யுக்த கடிசூத்ரோ s ந்த : பாதஜாலகஸம்யுத : |
சந்த்ரசேகர ஏவம் ஸ்யாத் தேவ்யா ச ஸஹிதோ நவா ||
ஸாபீ இஹ அபிந்ந பீடாவா தேவேந ஆலிங்கிதா(அ) தவா |
தயாஆலிங்கித தேவோ வா அந்யோந்யா லிங்கிதஸ்து வா |
ஆலிங்கந யுதோ வா ஸ்யாத் நிராலிங்கோsதவா மத : ||

இலிங்கோத்பவ மூர்த்தியினை அமைக்கும் போது பாணத்தின் மத்தியில் விளங்கும் திருமேனியானது சந்திரசேகரரின் உருவையும் பிரதிட்டையும் இப் படலத்தில் சொல்லப் படுகிறது. குரு சிலை முதலியவற்றல் இவ்வுருவினைச் செய்க.

நாற்கரத்தார், முக்கண்ணர், சமநிலைப் பாதங்களில் நின்ற கோலத்தர். முன் நீண்ட இரு செந்தளிர்க்கரங்களில் வரம் அபயம் எனும் நிலை கொண்டவர். இடக்கரத்தில் வரதமும், வலக்கரத்தில் அபயமும் கொண்டவர், வரதமாக அமைப்பின் சிம்மகர்ணமாக அமைக்க. ஊருஸ்பிஷ்டம் ( தொடைமீதமர்த்தல் ) ஆயின் கடகமாகவும், மற்ற இரு கரங்களில் மான், மழு கொண்டவர். மானும் மழுவும் ( பின் இரு கரங்களில் ) காதுகளை ஒட்டியும் கர்த்தரி முத்திரையுடைய விரல்களால் தாங்கியவையாக அமையும். மானை திருமுகத்தை எதிர்முகமாகவோ அமைக்க. எதிர்முகமாகவே மழு அமையும் இடச் செவியில் ரத்தினம் பதித்த சுருளிலைத்தோடு, சங்குருவக்குழை, தாமரை போன்றதோடு இவற்றிலொன்றை அமைத்து அழகு செய்க. வலச் செவியில் மகரக் குழை அல்லது சிம்மக்குழை பொருத்துக. காதுவரை சுருள் குழல்கள் பின்புறம் தொங்குமாறமைக்க. இருபுறங்களிலும் தோளில் சடைநுனிகள் படும் வகையில் அமைக்க. மதாணிப்பதக்கம் கொண்ட ஆரங்கள் அலங்கரிக்கும் கழுத்தினை அமைக்க. தோள்கள் கேயூரம் கொண்டதாக உருவாக்குக.

நல் வேலைப்பாடுகள் கொண்ட வளையங்களும் (காப்புகள்), முத்துத் தொங்கல்களும் அழகூட்டச் செய்க. விரல்கள் மோதிரங்கள் கொண்டனவாயமைக்க. முன்கையில் கடகங்களை அமைத்திடுக. சன்ன வீரம் கொண்டும், முப்புரி நூல் கொண்டும் திருமார்பினை அலங்கரிக்க. பலவகை இரத்தினங்கள் செறிந்த உதர பந்தனமும் இரத்தினங்கள் கோத்த கயிறுகள் கூடிய சூத்திரமும், அமைக்க. பாதங்களில் பாதசரங்கள் அமைக்க.

**சுப்ரபேதாகமம் :** ( 34 வது படலம் )

**ருக் வாக்சுதம் துதம் தேவம் ம்ருகம் பரசுதாரணம் ।**
**க்ருத்யம் பர தரம்தேவம் கர்த்தவ்யம் சந்திரசேகரம் ॥**

வேதங்களின் உட்பொருளாம் ஐயனை மான் மழு தரித்தவராகவும் யானைத் தோலணிந்தவராகவும் சந்திரனைச் சடையிலணிந்தவராகவும் அமைத்தல் வேண்டும்.

---

o சந்திரசேகரமூர்த்தியின் தொடர்பாக கேவலமூர்த்தி, பாசுபத மூர்த்தி, ரௌத்ரபாசுபதமூர்த்தி, பாசுபதாஸ்திர மூர்த்தி ஆகிய மூர்த்தி பேதங்கள் '' பிரதிமாலட்சணனி '' ( Ref : Hindu Iconography ) யில் காணலாம்.

# இலிங்கோத்பவர் திருமேனியில் ஆபரணங்களும் முத்திரைகளும்

ஐந்து தொழில்களுக்கும் முதன்மையானவனும், பஞ்சபூதங்களின் வடிவினனாக விளங்குபவனும், சோதி வடிவாக ஆகாயத்திற்கும் பூமிக்கும் காட்சியளித்து அருள்பவனும், ''நினைத்தாலே முக்தி'' கிடைக்கும் தலமாக விளங்கும் திருவண்ணாமலையில் ''இலிங்கோத்பவர்'' திருமேனி தோன்றிய தனைச் சிறப்பிக்கும் முகத்தான் பெரும்பாலான சிவாலயங்களின் கருப்பக்கிருக மேற்கு கோஷ்ட மாடத்தில் விளங்குவதனைக் காணலாம். சிவமூர்த்தங்கள் இருப்பத்தைந்தினுள் சதாசிவரின் சத்யோஜாத முகத்திலிருந்து இலிங்கோத்பவர் திருவுருவம் தோன்றியது என்பர்.

இலிங்கோத்பவர் திருமேனியில், பாணத்தின் நடுவில் சந்திரசேகரர் திருமேனி போன்று அமைத்தல் வேண்டும். மேலும் திருமுடியும் திருவடியும் மறைக்கப்பட்டிருத்தல் வேண்டும். என்று சிற்ப நூல்கள் கூறுகின்றன. இதில் பிரமனும் திருமாலும் இருமருங்கிலும் சேவித்திருப்பார்கள்.

நின்று அருளும் சிவபெருமானின் திருமேனியில், இருகரங்கள் அல்லது நான்கு கரங்கள், அல்லது எட்டு கரங்கள் என்று சிவனாரின் ஆற்றலை மிகைப்படுத்திக் காட்ட சிற்பிகள் தந்த இலிங்கோத்பவர் திருமேனிகள் ஏராளமாகும்.

அவ்வகையில் திருமுடி முதல் திருவடிவரை விளங்குகின்ற அணிகலங்கள் மற்றும் முத்திரைகளின் விளக்கங்களை அரிய இப்பகுதி துணை செய்கின்றது.

**ஜடாமகுடம் :**

தெய்வத் திருமேனிகள் எடுப்பாக விளங்கும் பொருட்டு சிரசில் மேல் நோக்கிக் கூர்மையாகக் காணப்படும் அணியே கிரீடம் ஆகும். கிரீடங்களில் பல வகையுண்டு. முடிகளையே (ஜடைகள்) கிரீடமாக அமைத்துச் செய்வது சிவபெருமானுக்கும் உமையாம்பிகைக்கும் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது.

பிம்பங்களின் தகுதியினை ஊன்றிக் கவனித்து அறிந்து இதனை அமைத்தல் வேண்டும். சடைகள் ஒவ்வொன்றின் சுற்றளவும் சுண்டு விரலின் சுற்றளவேயாதல் வேண்டும். சடை முடியின் உயரம் இருபத்து நான்கு அங்குலம், இருபத்தோரங்குலம், பதினெட்டங்குலம், பதினேழுங்குலம் பதினாறங்குலம் இவற்றில் ஏதேனுமொரு வகையில் அதன் உயரம் அமைக்கப்படலாம். கேசாந்தத்திலிருந்து மகுடாந்தம் வரை நெற்றியில் பட்டம் அமைக்கப்பட வேண்டும்.

முகாந்தத்தின் அகலம் எவ்வளவோ அவ்வளவே மகுடத்தின் அகலமாம். முகத்தின் உயரத்தில் பாதியளவு அல்லது முக்கால் பங்கு

மகுடத்தின் அடிப்புறத்தின் அகலம் அமைத்தல் வேண்டும். மேற்கூறிய விதங்களில் எது தகுதியானதோ அதை ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

### பூரிமங்கள் :

மகுடத்தின், அடிப்புறத்தின் அகலத்தில் 7, 8 அல்லது ஒன்பதில் ஒரு பங்கினதாக அதன் நுனியின் அகலம் இருக்கவேண்டும். அதில் நான்கு பூரிமங்கள் இருக்கவேண்டும். பூரிமங்களின் உயரம் பன்னிரண்டங்குலம் ஆகும்.

### கேசபந்தம் (கிரீடத்தின் வேறுவகை) :

உச்சந்தலையிலிருந்து ஒரு முக அளவு அல்லது இரண்டு முகஅளவு உயரங்கொண்டதாகவும் செங்குத்தாகவும் தூக்கி முடிக்கப்பட்ட கோலத்திற்கு கேசபந்தம் என்று பெயர். இதன் அடிப்பகுதியில் அதாவது நெற்றிக்கு மேல் மணிவடங்களை பட்டமாக அமைத்து முகத்திற்கு மேலும் எழிலூட்டுவதாக அமைப்பதும் உண்டு.

### ஜடா மகுடத்தில் கங்கையும் - சந்திரனும் :

ஜடாமகுடத்தின் இடப்பக்கம் மேற்குப் பகுதியில் பிறைச்சந்திரனையும் வலப்பக்கத்தில் கங்கையும் அமைத்தல் வேண்டும். கங்கை நீர் கொட்டுவது போன்றோ, அல்லது ஸ்திரி ரூபமாக அஞ்சலிஹஸ்தமாக கங்கையைக் காட்டலாம் பிறைச்சந்திரனை ஜடையில் கட்டியதுபோன்ற அமைப்பினதாகவும் சிற்பத்தில் காட்டப்பட்டுள்ளது.

### பத்ரகுண்டலம் :

பனை, தென்னை முதலியவற்றின் ஓலைகளையே சுற்றிக் காதணியாக அணிவதுண்டு, அவை "பத்ரகுண்டலம்" எனப்படும். அவற்றின் அகலம் மூன்று, நான்கு அல்லது ஐந்து அங்குலம் இருத்தல் வேண்டும், இவற்றின் சுருள்களின் கனம் ஒருயவம் அளவினதாக இருக்கவேண்டும். வெண்ணிற மாகவோ அல்லது செந்நிறமாகவோ அமைக்கலாம்.

### மகரகுண்டலம் :

மகரம் என்பது ஒரு வகை மீன் அல்லது முதலையாகும். காதில் அணியப்பெறும் அணிகளில் மகரமாகவே, சிங்கம் போன்றதாகவோ, யானைபோன்றதாகவோ சிற்பிகள் அமைப்பர். இவற்றின் அகலமும் உயரமும் அதனதன் வடிவத்திற்கேற்றவாறு இரண்டு, நான்கு அல்லது ஐந்து அங்குலம் உள்ளதாக அமைக்கப்படவேண்டும்.

### உபக்ரீவம் :

உள்கழுத்தில் அணியும் ஆபரணம் உபக்ரீவம் எனப்படும். மேலும் கழுத்தில் பலவகையான அணிகளை அணிவிக்க வேண்டும். ருத்திராட்சம், இரத்தினமாலை, கண்டாபரணம், பொன்மணிமாலை, பல சித்திர வேலைப்பாடுகளுடன் விளங்கும் அட்டிகை முதலானவைகளைத் தக்கவாறு அணிவிக்கவேண்டும்.

**கடகம் - வளையம் :**

முன்கையில் "**கடகம், வளையம்**" இவற்றை அணிவிக்கவேண்டும். ( முன்கையிலணியும் வளைகளின் இருவகைகள் கடகம் - வளையம் எனப் படுகின்றன ). இந்த வளையம் துடிமன்கையின் சிறு விரலின் சுற்றளவுக்குச் சமமாம். இவ்வளையானது உருளையாகவோ அல்லது தட்டையாகவோ இருக்கலாம்.

**மோதிரங்கள் :**

நடுவிரல் தவிர மற்ற விரல்கள் யாவற்றிலும் மோதிரம் அணிவிக்க வேண்டும். மோதிரங்கள் யாவும் விரல்களின் அடிக்கணுவிலேயே அணிவிக்கப் பட வேண்டும். வட்ட வடிவமாகவும், ஒரு யவம் கனமுள்ளதாகவும் மோதிரங்கள் அமைக்கப்பட வேண்டும். மோதிரங்களில் பல வகையான இரத்தினங்களைப் பொருத்தியிருப்பது போன்ற விசித்திரமான வேலைப்பாடு களோடு பிம்பங்களுக்குத் தக்கவாறு அமைத்தல் வேண்டும்.

**அபயஹஸ்தம் :** *(காக்கும் கரம்)*

அபயஹஸ்தம் அமைக்கும் பொழுது கையின் நடுவிரலின் நுனி மேல் நோக்கியவாறாக ஸ்தன சூசுகத்தின் மேற்புறத்திற்குச் சமமாக இருக்க வேண்டும். ஆள் காட்டி விரல் முதல் சுண்டு விரல் வரை உள்ள விரல்கள் யாவும் அடிப்புறம் சமமாகவே இருக்குமாறும் சிறிது வளைந்த வாறாகவும் அமைக்கப்பட வேண்டும். பெருவிரல் சிறிது வளைந்தும், வெளிப் புறத்தை நோக்கியவாறாகவும், நுனி மேல் முகமாக உள்ளதாகவும் இருக்க வேண்டும். இவ்வாறாக அமைக்கப்படும் ஹஸ்தமே அபய ஹஸ்தம் எனப்படும்.

**வரத ஹஸ்தம் :** *(கொடுக்கும் கரம்)*

வரதஹஸ்தத்தில் விரல்களின் நுனி கீழ் நோக்கியவாறாக அமைக்க வேண்டும். மணிக்கட்டு, கடிப்பிரதேசத்திற்குச் சரியாக வர வேண்டும். நடுவிரலின் நுனி, மேட்ரத்தின் நுனியளவில் முன் புறம் பார்த்தவாறாகத் தொங்க விடப்பட வேண்டும். இவ்வாறாக அமைக்கப்படும் ஹஸ்தமே வரத ஹஸ்தமாகும்.

**கர்த்தரீஹஸ்தம் :**

சுட்டு விரலும் நடுவிரலும் நிமிர்ந்து நிற்க பெரு விரலும் அணி விரலும் முன்பக்கம் சிறிது வளைந்திருக்க சிறுவிரல் சற்றே முன்புறம் வளைய அமைந்திருப்பது கர்த்தரீ ஹஸ்தமாகும். இது தோற்றத்தில் கத்திரிக்கோல் போல அமைந்திருத்தலின் இப்பெயர் பெற்றது. நீண்ட அமைப்பில் உள்ள ஆயுதங்களைப் பற்றிப் பிடித்து எறிவதற்கு இத்தகைய ஹஸ்த அமைப்புகள் வடிவமைக்கப் படுகின்றன.

**கடிஹஸ்தம் :**

இடுப்பில் பெருவிரல் தனியாகவும், மற்ற விரல்கள் நான்கும் சற்று வளைந்த நிலையில் நன்கு பதியுமாறு அழுந்தக் கையூன்றி சுட்டு விரல், சிறு விரல் இரண்டும் சற்று மேலெழுந்த நிலையில் அமைந்து விளங்கும் அழகுத் தோற்றத்திற்குக் கடி கரம் என்று பெயர். இது இடக்கரமாக அமையும்.

**ஊரு ஹஸ்தம் :**

கை மணிக்கட்டு இடுப்புக்குங் கீழே நன்கு வளைந்து தொங்குமாறு தொடைமீது பொருந்த வைத்து அமைக்கும் கரம் ஊருஹஸ்தம் எனவழங்கப்படும் இதில் சுட்டுவிரலும் சிறுவிரலும் தொடையைவிட்டு சற்றே விலகி மென்மையாக வளைந்தும், நடுவிரலும் அணிவிரலும் தொடைமீது பதிந்தும் அமைதல் வேண்டும்.

இதுவும் இடக்கரமாக அமையும். மேற்கூறிய இருமுத்திரைகளையும் நின்ற கோலத் திருமேனிகளில் காணலாம்.

**அஞ்சலி ஹஸ்தம் :**

அபயஹஸ்தத் தோற்றத்தோடு அமைந்த வலக்கரம் இடக்கரம் இரண்டையும் நெஞ்சுக்கு நேராகச் சேர்த்து அமைத்த தோற்றத்தை அஞ்சலி ஹஸ்தம் எனப்படும். திருமாலும் பிரமனும் தொழுத நிலையாகும். மற்றும் அடியார்களின் படிமங்களில் அஞ்சலி ஹஸ்தங்களைக் காணலாம்.

**யக்ஞோபவீதம் :** (பூணூல்)

எல்லாப் பிம்பங்களுக்கும் யக்ஞோபவீதம் (பூணூல்) அமைக்க வேண்டும். ஒரு யவத்தில் எட்டிலொரு பாகம் அதன் கனம் இருக்க வேண்டும். இது முப்புரிநூல் என்றும் கூறுவர். ''உரஸ்சூத்திரம்'' என வழங்கப்படும் மார்பைச் சுற்றிலுமுள்ள நூலோடு யக்ஞோபவீதம் இணைந்திருக்கும். அந்த சூத்திரமும் பூணூலைப் போலவே ஒரு யவத்தின் எட்டிலொரு பங்கு கனமுள்ள தாயிருக்கும். ஆனால் மூன்று நூலாக இல்லாமல் ஒரே நூலாக அமைக்கப்படும். இடத்தோளின் மேலிருந்து பூணூல் தொங்கியவாறுகவிருக்கும், கொப்பூழின் வலப்புறம் கீழே இரண்டங்குலம் வரை அது தொங்கும். உபவீதத்தின் நீளமும் இதுவேயாதும். பின்புறத்திலும் தொடர்ந்து காணப்படும். யக்ஞோபவீதம் உடம்பின் பின்னால் விளங்கும் முதுகெலும்பை ஒட்டியவாறுக அமைத்தல் வேண்டும்.

* **உதரபந்தம், கடிசூத்திரம், க்ருத்ரிமாஸ்யம், ஜாலகம்** – முதலான அணிகலன்களும் சிவனாரின் திருமேனியில் விளங்கும்.

---

* *ஆதீன வெளியீடு எண் :- 407 - ல் காண்க. ஆசிரியர். S. நாராயணசுவாமி. பக்கம் 157 - 158.*

ஆடைகள் :

விக்ரகங்களுக்கு – ஆடையாகப் பட்டாடைகள், பஞ்சுத்துணிகள், மரஉரிகள், தோலாடைகள் (புலித்தோல்) ஆகியன அணிவிக்கப்படுகின்றன. இதனை ஓவியத்தில் அழகாகக் காண்பிக்கலாம்.

° மானும் மழுவும் :

சிவபெருமானின் மேற்கரங்களில் திகழும் ஆயுதங்களில் முக்கிய மானவை மானும் ( உயிரினம் ) மழுவும் ஆகும். பின் வலக்கரத்தில் மழுவும் பின் இடக் கரத்தில் மானும் திகழும் சில தலங்களில் இவைகள் மாறியும் அல்லது இல்லாதும் காணப்படும். மானின் முகம் வெளிப்புறத்தை நோக்கிய வாறுக அமைக்க வேண்டும், சிறு கோடாரி போன்றதாகக் காணப்படும் ஆயுதமே மழு ( டங்கம் ) எனப்படுவது.

பரசு :

மழு இல்லாத போது பரசு ஆயுதம் சிவனின் கரத்தில் திகழும் இக்கருவி சற்றேறக் குறைய மழுபோன்ற கருவிதான். ஆனாலும் மழுவின் வாய் சதுரமாக இருக்கும்.

இதன் வாய் சற்று வளைந்து விசாலமாகவும் கூரியதாகவும் இருக்கும். இது முழுவதும் உலோகத்தினால் காணலாம். சிலர் தொழிற்கு ஏற்றார் போன்று இதனை மரக்காம்பில் செறிகி வைத்துக் கொண்டு பயன் படுத்துவர்.

சூலம் ;

இது மூன்று நுனிகளை உடையது சிவபெருமானுக்குச் சிறப்பாக உரியது; சுரை வரையிலும் எஃகு இரும்பால் செய்யப் பெற்றது. நீளமான மரக்கம்பில் செறுகப்பட்டிருக்கும். ( சிற்பம் எந்தப் பொருளினால் ஆக்கப் பெற்றிருக்கின்றதோ அதே பொருளினால் ஆயுதங்கள் அமைந்து விளங்கும்.

அட்சமாலை :

உருத்திராட்சமாலை இது தனித்தனியே ஒரு மாலையாகத் திருவுருவங் களில் தொங்குவதும் உண்டு மிகப் பழமையான திருவுருவங்களில் இது ஓராயுதம் போல் இருக்கும். பிரமனின் கரத்தில் கூட இது விளங்கும்.

கபாலம் :

சிறு சட்டி போன்று ( மடக்கு போல ) உள்ளங்கையில் காணப் படுவதாகும்,

---

° சிவபெருமானுக்கு *( மகா சதாசிவர் )* எண்ணில்லா தலைகளும் *எண்ணில்லா கரங்களும் அக்கரங்களில் பல ஆயுதங்கள் உண்டு என்பர்.*

**சங்கு :**

இது விஷ்ணுவுக்குரிய ஆயுதம் இது வெற்றியை அறிவிக்கும் கருவி. பகைவர்கள் இதன் ஒலி கேட்டதுமே ஒடுங்கி அடங்கச் செய்யும் அச்சக் கருவியுமாம். இதில் பல வடிவங்கள் உள்ளன. இதனைப் பாஞ்சசன்யம் என்பர்.

**சக்கரம் :**

இதுவும் திருமாலுக்குரிய சிறப்பான கருவி துர்க்கையினது கரங் களில் சங்கு சக்கரம் திகழும். இதில் இரு வகையுண்டு ஒன்று தேருருளை போன்றது. மற்றது வளையம் போன்றது. இதனை அழகுப் பொருளாகவும் போர்க்கருவியாகவும் கொள்வர். இதில் சாதாரண நிலை மற்றும் பிரயோக நிலையும் உண்டு.

**சுவடி : ( வேதச்சுவடி )**

ஆதி காலத்தில் ஓலைகளிலும், பட்டைகளிலும், துணிகளிலும், பாறைகளிலும் எழுதி வந்தனர். இதில் பனையினது ஓலை எழுதுவதற்கு ஏற்றதாகவும், கொண்டு செல்வதற்கு சுலபமாகவும் இருந்தது. இதனையே வேதச்சுவடிகளாக பிரமன் முதலான தெய்வப் படிமங்களில் திகழச் செய்தனர்.

**ஸ்ருக் :**

வேள்வியின் ( யாகம் ) போது பயன்படும் கரண்டிபோன்று விளங்குவது. இதனைக் கருங்காலி மரத்தால் செய்தல் வேண்டும். காம்பு நீண்டும் வேல் போன்ற அமைப்பில் குழிப்பகுதியும், நுனி சிறுத்தும் உள்ளது. திருக்கோயில்களில் நிகழும் யாகாதி காரியங்களில் நெய்முதலான பொருட்களை இதன்மூலம் எடுத்து அக்னியில் சேர்ப்பர். இது பிரமனின் கரத்தில் திகழ்வது.

**ஸ்ருவம் :**

இதுவும் யாகம் செய்யும் போது பயன்படுவது ஸ்ருக் தொடர்ந்தாற் போன்று பயன் படுவது போல இல்லாமல் நீண்ட இடைவெளி விட்டே இதனைப் பயன்படுத்துவர். இதனைப் புரசு அல்லது நல்லத்தி மரத்தினுல் செய்தல் வேண்டும் ஸ்ருக்கைவிடப் பெரியது. அதிகமாக நெய்யை யவைத்துக் கொண்டு பூர்ணாகுதி செய்யும் போது ஸ்ருக்குடன் இணைந்து செயல்படும். ஸ்ருவத்தின் முனையில் ரிஷபம், சிம்மம், அன்னம் இவைகளின் தலைகளும், இவைகளின் வாய்ப்பகுதியில் உள்ள சிறுதுவாரத்தின் வழியாக நெய்வருவதற்கு ஏற்றாற் போன்று அமைந்திருக்கும். இதனையும் பிரமன் தனது கரத்தில் தாங்கிநிற்பார்.

**பத்மம் : ( தாமரை )**

சிரசில் சகஸ்ரதளமெனும் ஆயிரம் இதழ் தாமரை உள்ளது என்பர் யோகிகள். உத்தமமான பூக்களில் சிறந்தது. இது இறைத்திருமேனிகளுக்கு ஆசனமாகவும், கரத்திலும் விளங்கும். இதில் செந்தாமரை, வெண்தாமரை இரு வகைகள் உண்டு. பிரமனும், திருமாலும் தத்தமது கரங்களில் கொண்டு திகழ்வர்.

**பத்மபீடம் :**

இறைவனின் திருவடிகள் எப்போதும் பத்மபீடத்தில் விளங்கும் என்பர், இருப்பினும் அனலிலிருந்து வெளிப்பட்ட இலிங்கோத்பவர திருமேனியில் திருமுடியும் திருவடிகளும் மறைந்தே காணப்படும். இருப்பினும் உற்சவமூர்த்தியாக விளங்கும். போது பத்மபீடம் விளங்கும். அல்லது பத்ம பீடத்தோடு பத்ரபீடமும் இணைந்திருக்கும்.

**பத்மபீட அளவுமுறை :**

தாமரை மலர் போல் அமைக்கப்படும் பீடம் பத்மபீடம் ஆகும். இவ்வாறு பீடவடிவமாக அமைக்கபடும் பத்மம் ஒருதானம் உயரமிருக்க வேண்டும் (தானம் என்பது சிற்பசாஸ்திரத்தின் சங்கேதச் சொல் ஆகும்) விரிந்த கையின் மணிக்கட்டிலிருந்து நடுவிரலின் நுனிவரை ஒரு தாளம் என்பர். அந்தந்த விக்ரங்களின் முகத்தினளவு (மோவாய் கட்டையிலிருந்து கேசாந்தம் வரை ஒரு தாளமென்பர்.)

பன்னிரெண்டு அங்குலம் ஒரு தாளமென்பர். மானுங்குலம், மாத்ராங்குலம், தேஹலப்தாங்குலம் இவற்றில் எதையாவது வைத்துக் கொண்டு பன்னிரண்டு அங்குலம் கணக்கெடுத்து அதை ஒரு தாளமாகக் கொள்ளலாம். இவற்றுள் எந்த அளவு எந்த இடத்திற்குத் தகுமோ அதை அவ்விடத்திற்குத் தாளம் என்னும் அளவுச் சொல்லால் குறிப்பிடப்படுகிறது.

இவ்வாறுக ஒரு தாளம் உயரமுள்ள பத்மபீடத்தின் விஸ்தாரம் (அகலம்) இரண்டு தாளத்தின் அளவு இருக்க வேண்டும். அதன் உயரத்தை ஆறு பாகமாக்க வேண்டும். அதில் ஒரு பாகம் (கீழிருந்து மேல் மூன்றுவது பாகம்) பட்டம் அமைக்க வேண்டும். பட்டத்தின் கீழ் இரண்டு பாகங்களில் எட்டு இதழ்களுள்ள கீழ் முகமான தாமரை மலர் அமைக்க வேண்டும். மேலுள்ள மற்ற மூன்று பாகங்களில் அதே போல் எட்டு இதழ்களுள்ள தாமரை மலர் மேல் நோக்கியவாறு அமைக்க வேண்டும். இரண்டு தாமரை மலர்களின் முனைகளுக்கும், நடுவில அவைகளின் அடிப்புறம் சேருமிடத்திற்கும் அகலத்தில் வித்தியாசம் இருக்க வேண்டும்.

நடுப்பாகம் கால்பங்கு அகலத்தில் குறைந்திருக்கும். அதாவது இந்த பத்ம பீடத்தின் மேல்புறம் அல்லது அடிப்புறத்தின் அகலத்தை நாலு பங்காக்கி அதில் ஒரு பாகம் குறைந்து குவிந்து வருமாறு பத்ம பீடத்தின் மத்யபாகம் அமைய வேண்டும். (மேலேயும் கீழேயும்) இதில் பீடத்தின் உயரம் தாமரைமலரினளவேயாகும். இந்த பத்ம பீடத்தை விக்ரகத்தின் பல நிலைகளுக்கு ஏற்றவாறு அமைக்க வேண்டும். அமர்ந்திருக்கும் விக்கிரகத்துக்கு அதற்கேற்ற விஸ்தார முள்ளதாகவும், கிடந்த மற்றும் நின்ற விக்கிரகங்களுக்கு ஏற்றவாறு விஸ்தார முள்ளதாகவும், வட்ட வடிவாகவோ, நீண்ட வட்டமாகவோ பத்ம பீடத்தை அமைத்தல் வேண்டும். இலிங்கோத்பவர் இருமருங்கிலும் திருமாலும், பிரமனும் பத்மபீடத்தில் நின்று தொழும் நிலையில் விளங்குவார்கள்.

# சிற்ப நூல்களில் இலிங்கோத்பவர்

இலிங்கோத்பவ மூர்த்தத்தில் நின்ற நிலையில் (பாணத்தின் நடுமையத்தில் முட்டையின் வடிவமாக உள்ள குடைவுப் பகுதியில்) விளங்கும் சிவனாரின் லட்சணம் பற்றி, சிற்பநூல்கள் கூறும்போது சந்திரசேகர லட்சணத்தை அப்படியே கொள்ளவேண்டும் என்கின்றன. அவ்வகையில் விண்ணிற்கும் மண்ணிற்கும் பேரொளிப் பிழம்பாக விளங்கிய சிவனின் திருமேனி அமைப்பின் விளக்கம் இங்கு கூறப்படுகிறது.

இலிங்கோத்பவ மூர்த்தியின் நடுவில் விளங்கும் சிவனாரின் திருமுடியும் திருவடியும் சிறிது மறைத்தாற்போன்று எல்லா லிங்கோத்ப சிற்பங்களிலும் காட்டப்பட்டுள்ளன. ஆனால் தஞ்சைப் பிரகதீஸ்வர் ஆலயத்தில் சிவனாரின் முழுத் திருமேனியும் காட்டப்பட்டு கிழக்கு நோக்கிய மாடத்தில் திருமால் மண்டியிட்டு வணங்குவதாகத் தோற்றமளிக்கிறது.

**ஸ்ரீசாரஸ்வதீய சித்திரகர்ம சாஸ்திரம் :**

இந்நூலின் பதினைந்தாவது அத்தியாயத்தில் " **சந்திரசேகர லட்சணம்** " கூறப்படுகிறது. இதனையே 17-வது அத்தியாயத்தில் கூறப்படுகின்ற இலிங்கோத்பவ லட்சணம் பற்றி கூறுகையில் சந்திரசேகர லட்சணத்தை அப்படியே அமைக்கவேண்டும் என்கிறது.

x இம்மூர்த்தியின் லம்பமானம் உபமானம் இவைகளால் ஸ்தானகத்தின் லட்சணம் கூறப்படுகிறது. சிற்பக்கலையைக் கற்றறிந்த மேதாவிகள் பிரலம்பப் பலகையின் அளவைக் கூறியுள்ளார்கள். அப்பலகையின் நீளமானது, பரஹஸ்தங்களின் வெளிப்பக்கம் வரையிலுள்ள விஸ்தாரத்திற்குச் சமமாக இருக்க வேண்டும். அதன் அகலமானது 18 அங்குலமாகும். அதன் கனம் 2 அல்லது 3 அங்குலமாகும். இந்த அகலமும் நீளமும் சூத்திரத்தைத் தொங்கவிடுவதற்கு வேண்டிய இடத்தின் அளவையே குறிப்பதாகும்.

**பிரலம்பப் பலகை :**

பலகையானது மானசூத்திரத்திற்கு வெளியில் 1 - 2 அல்லது 3 அங்குலம் அதிகமாக ஒதுக்கப்பட்டிருக்க வேண்டும். அந்தப் பலகையானது, நேராகவும் தெளிவில்லாமலும் எண்ணெய் நைப்புள்ளதாகவும் நன்கு இழைக்கப்பட்டு சமதலமாகவும் இருக்கவேண்டும். இவ்விதமாகப் பலகையைக் கல்பித்துக்கொண்டு அதில் மானசூத்திரங்களைத் தொங்கவிடவேண்டும்.

---

x தனித்து விளங்கும் சந்திரசேகரர் திருமேனியில் முன்னும் பின்னும் சிற்பத்தின் லட்சணம் முழுமையாக வெளிப்படும். இலிங்கோத்பவமூர்த்தத்தில் புடைப்புச்சிற்பமாகவே (சிவன்) முன் அழகுடன் வடிவமைக்கப்படுகிறது.

**சூத்திரஸ்தான அளவுகள் :**

o முன்பக்கத்தில் முகமத்தியம் – கர்ணபாலியை ஒட்டிய இடம் - பாலி கஷம் இவைகளின் நடுவு – விலாப்பக்கம் கை இவைகளின் நடுவு, இந்த இடங்களில் சூத்திரங்களைத் தொங்கவிடவேண்டும்.

பிருஷ்ட்சூத்திரத்திற்கு முன்பக்கத்தில் 7 அங்குலம் ஒதுக்கி குறுக்கே ஒரு சூத்திரமேற்றவேண்டும். (குறுக்கே ஒரு கோடு வரையவேண்டும்) அக்கோட்டில் கர்ணபர்யந்த சூத்திரத்தையும் பார்ச்சுவ - பரியந்த ( மத்திய சூத்திரத்தையும் ) தொங்கவிடவேண்டும். கர்ணபர்யந்த சூத்திரதித்லிருந்து பார்சுவ மத்திய சூத்திரம் வரையில் நான்கரை அங்குலமாகும்

சிரசின் வெளிப்பக்கத்தில் பார்சுவ மத்திய சூத்திரத்திற்கு உள்பக்கத்தில் தொங்கும் சூத்திரத்திற்கு கர்ணவிருத (கர்ணவர்த) சூத்திரம் (காதின் துவாரத்தை ஒட்டிய சூத்திரம்) என்று பெயர். இந்த சூத்திரத்திலிருந்து கழுத்துவரையிலுள்ள அளவு (ஒதுக்கம்) மூன்றே முக்கால் அங்குலமாகும்.

கக்ஷமத்திய சூத்திரத்திற்கு வெளியில் உள்கை வெளிக்கை இரண்டுக்கும் நடுவில் உள்கையின வெளிப் பக்கத்தில் மற்றொரு சூத்திரம் ஏற்றவேண்டும். இவ்விரண்டு சூத்திரங்களின் ஒதுக்கம் (மத்தியமானம்) இட்டு அங்குலமாகும்.

இந்த சூத்திரமானது உள்கை வெளிக்கை இரண்டுக்கும் நடுவிலிருப்பதால் இதற்கு கராப்பியந்தா (கைகளின் நடுவிலுள்ள) சூத்திரம் என்று பெயர். இந்த சூத்திரத்திற்கு வெளிப்பக்கத்தில் இருபக்கங்களிலும் எல்லையாகக் கூறப்பட்ட சூத்திரஸ்தானமாகையால், இதுவரையில் தான் மத்திய சூத்திரங்களின் ஸ்தானங்கள் கூறப்பட்டிருக்கின்றன. z தீர்க்கமான சிற்ப வல்லுநர்கள் இவ்விதமாக பரகர சூத்திரத்தைப்பற்றிக் கூறியிருக்கிறார்கள்.

முன்பக்கத்தின் நடுவினுள்ள சூத்திரத்திற்கு யோகசூத்திரம் என்று பெயர். இந்த சூத்திரத்தின் உள்பக்கத்தில் 1 அங்குலம் விட்டு மூக்கு நுனியை ஒட்டி ஓர் சூத்திரம் ஏற்றவேண்டும். இதற்கு புடாந்த (மூக்கு நுனியை அடுத்துள்ள) சூத்திரம் என்று பெயர்.

சூத்திரமானது ஒரு யவை அகல முள்ளதாக இருக்கவேண்டும். அதன் நுனியில் குண்டலம் தொங்கவேண்டும். (அந்தக் கயிற்றின் நுனியில் பம்பரம் போன்ற வட்டமான குண்டலமென்னும் கருவியைக் கட்டித் தொங்கவிட வேண்டும்) கயிற்றின் அடிப்பாகத்தை (அதற்காகப் பலகையில் செய்யப்பட்டி

---

o *சிவனின் திருமேனியினை அமைக்கும்போது சிற்பி சந்திரசேகர லட்சணத்தை மனத்திற்கொண்டு பாணத்தின் நடுவில் அமையப்பெறும் சிவனுரை யுக்தியாகவும் மானத்திற்கு ஏற்றவாறு அமைக்கவேண்டும்,*

x *சைவ சுதைச்சிற்பம். செப்பு விக்ரகம், மரம்: தந்தம், ஓவியம் முதலானவற்றிற்குரிய செய்திகளாகும்.*

ருக்கும் துவாரத்தினுள் செலுத்தி மேலபக்கத்தில் கயிற்றை எடுத்து) அந்தக் கயிற்றினடிப்பக்கத்தில் (அது கீழே நழுவிவிழாமலிருக்குமபடியாக) முடிச்சுப் போடவேண்டும்.

உலோகத்தினுல் செய்யப்பட்ட குண்டலமானது சிறந்ததாகும். உலோக குண்டலர் கிடைக்காவிட்டால் நல்ல களிமண்ணுல் செய்யப்பட்ட குண்டலத்தை உபயோகிக்க வேண்டும். புடபாஹிய சூத்திரம் - கர்ணுப்பியந்தர சூத்திரம் - கர்ணபாஹிய சூத்திரம். கழுத்தளவு தொங்கும் சூத்திரங்களாகும். மற்ற சூத்திரங்கள் யாவும் பிடத்தளவு தொங்கும் சூத்திரங்களாகும். அல்லது கால் வரையில் தொங்குகின்றவைகளாகும்.

பூர்வ மத்தியசூத்திரம் 1, புடாக்கிர சூத்திரம் 2, உள்கை வெளிக்கைகளின் மத்திம சூத்திரம் 2. விலாப்பக்கம் கைகளின் மத்திய சூத்திரம் 2. முக கர்ணமத்திய சூத்திரம் 2. காதுக்கு வெளியில் சூத்திரம் 2. ஆக பதினொரு சூத்திரங்கள் கூறப்பட்டுள்ளன.

பிருஷ்ட மத்திய சூத்திரமானது, சிரோமத்தியம் - கண்டமத்தியம் - புஜ மத்தியம் - வம்ச தண்ட மத்தியம் - பிருஷ்ட மத்தியம் - ஊருமத்தியம் - ஜங்கா மத்தியம் - பாத மத்தியம் இந்த இடங்களில் தொடங்குவதாகும். மத்திய சூத்திரமானது, மௌளிமத்தியம் - லலாட மத்தியம் - நாசாக்கிற மத்தியம் - கண்ட மத்தியம் - ஹிருதய மத்யம் - நாபி மத்தியம் - மேட்ர மத்தியம் - பாத மத்தியம் முதலான இடங்களில் தொங்குவதாகும்.

மௌளிமத்தியம் பூர்வசூத்திரம் இவைகளின் மத்திய அளவு (வெலத்தி) 12 அல்லது 13 அங்குலமாகும். மௌளிமத்தியத்திலிருந்து, பிருஷ்ட சூத்திரம் 6 அங்குலமாகும். தலையின் பின்பக்கத்திலிருந்து, பிருஷ்ட சூத்திரம் 2 அங்குலமாகும். பின்பக்கம் தலையின் கோடி பிருஷ்டசூத்திரம், (பின்பக்கம் தலையின் கோடி பிருஷ்ட சூத்திரம் இவைகளின் நடுவில் வெலத்தி 2 அங்குலமாகும் என்பது பொருள்)

புரஸ்சூத்திரத்திலிருந்து, நடு நெற்றியின் ஒதுக்கம், 2. அங்குலமாகும். நடுக்கழுத்தின் ஒதுக்கம் 6 அங்குலமாகும், நடுவயிற்றின் ஒதுக்கம் 1. அங்குலமாகும், நடுமார்பின் ஒதுக்கம், 6. யவையாகும்.

மத்திய சூத்திரத்திலிருந்து, நாபிமத்தியம் 1½ அங்குலமாகும். யோநி மூலம் 2(3) அங்குலமாகும். ஊருமத்யம் 2. அங்குலமாகும். ஊருமூலம் 1 அங்குலமாகும். ஜாநு மத்தியம் ( முழங்கால் ) 6 அங்குலமாகும். ஜங்காமத்தியம் ( நடுகண்டைக்கால் ) 8 அங்குலமாகும். களகை ( கணுக்காலுக்கு மேலே சிறுவணையான இடம் ) 8½ அங்குலமாகும்.

நாஸாக்கிர சூத்திரமானது நாஸாக்கிரத்தையும் நடுவயிற்றையும் ( தொப்புளையும் ) தொட்டுக் கொண்டிருக்க வேண்டும்.



படம் - 35

தஞ்சாவூர் - ஸ்ரீ பிரகதீஸ்வரர் ஆலயம் மேற்கு கோஷ்ட மாடத்தில் உள்ள இலிங்கோத்பவர் சிற்பம், முதலாம் இராஜராஜ சோழன் கற்றளி.



படம் - 36

தஞ்சைப் பிரகதீஸ்வரர் ஆலயம் கிழக்கு நோக்கிய கோஷ்ட மாடத்தில் இலிங்கபுராணதேவர்

... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ...

( இவ்விடம் சுலோகம் விடுபட்டுள்ளது )

**கண்டபார்சுவ சூத்திரம் :**

தலையின் பக்கம் ( காதினடியை ஒட்டி ) கன்னத்தின் பக்கம், ஸ்கந்த ஸந்தி, ( கழுத்தும் தோளும் கூடுமிடம். ) முலைக்காம்பின் நுனி, அடிவயிற்றின் பக்கம், நடுதொடை, முழங்கால், கண்டைக்கால் இவைகளின் மத்தியம், கணுக்கால் முண்டு, இவ்விடங்களில் சூத்திரம் விழவேண்டும். இதற்த கண்டபார்சுவ சூத்திரம் என்றுபெயர்.

**கர்ணபாஹிய சூத்திரம் :**

கர்ணுவர்தம் ( காதின் வளைவை ஒட்டிய இடம் ) நடுத்தோள், பாதத்தின் நடுவு, இவைகளில் சூத்திரம் விழுவதாம். இதற்கு கர்ணபாஹிய ( காதுக்கு வெளிப்பக்கம் ) சூத்திரம் என்று பெயர்.

**பாகூ பார்சுவ மத்திய சூத்திரம் :**

கமுக்கட்டுநடு – விலாப்பக்கம் – கை இவைகளின் மத்திய பாகம், காலின் வெளிப்பக்கம் இவைகளில் சூத்திரம் விழவேண்டும். இதற்த, பாஹூ பார்சுவ மத்திய சூத்திரம் என்று பெயர்.

**இடுப்பின் கீழே உள்ள அங்க அளவு :**

மத்திய சூத்திரத்திலிருந்து அடித்தொடை வரையில் ஒதுக்கம் 1 அங்குலமாகும். நடுத்தொடை வரையில் ஒதுக்கம் 2½ அங்குலமாகும். நடுமுட்டுக்கால் வரையில் ஒதுக்கம் 6 அங்குலமாகும். நடுக் கண்டைக் காலின் ஒதுக்கம் 8 அங்குலமாகும். நளகாந்தத்தின் ( நளகை – கணுக்கால் முழிக்கு மேலே சிறுத்திருக்குமிடம் ) ஒதுக்கம் 8½ அங்குலமாகும். கணுக்கால் முழியின் ஒதுக்கம் 5 அங்குலமாகும். குதிகாலின் ஒதுக்கம் 4 அங்குல மாகும். குதிகால் பின் பக்கத்தின் ஒதுக்கம் 6 அங்குலமாகும். பெருவிரல் வரையில் ஒதுக்கம் 8 அங்குலமாகும், மறுபக்கம் குதிகாலின் ஒதுக்கம் 9 அங்குலமாகும்.

**ஆடை :**

ஆடையானது, கீழே கணுக்கால் வரை தொங்க வேண்டும். அந்த ஆடையானது தொப்புளுக்குக் கீழே 5 அங்குல அளவுக்த ( துடைவரையில் இடுப்பைச் ) சுற்றிலும் அணியப் பட்டிருக்க வேண்டும்.

**பிருஷ்டமத்திய சூத்திரத்திற்கும் அங்கங்களுக்கும் இடையேயுள்ள அளவு :**

பின்பக்கத்தில் மத்திய சூத்திரமானது, பின் தலையை ஒட்டி இருப்பதாம். பின் தலையின் நீளம் 4½ அங்குலமாகும். பின் பக்கத்திலுள்ள மத்திய சூத்திரத்திலிருந்து பிடரியின் ஒதுக்கம் ( பிடரிவரையிலுள்ள மத்திய அளவு ) 5½ அங்குலமாகும் நடு மார்பு வரையில் ஒதுக்கம் 6½ அங்குல மாகும். நடு வயிறு வரையில் ஒதுக்கம் 4½ அங்குலமாக இருப்பது சிறப் பாகும். நடுத் தொப்புள் வரையில் ஒதுக்கம் 5½ அங்குலமாகும். இடுப்பு வரையில் ஒதுக்கம் 6½ அங்குலம் விதிக்கப்பட்டுள்ளது. பிருஷ்டம் வரையில் ஒதுக்கம் 1½ அங்குலமாகும். ஊருமத்தியின் ( தொடை வரையில் ) ஒதுக்கம் 4 அங்குலமாகும். முழங்கால் வரையில் ஒதுக்கம் 4½ அங்குலமாம். நடுக் கண்டைக்கால் வரையில் ஒதுக்கம் 6 அங்குலமாகும். கணுக்கை வரையில் ஒதுக்கம் 2 அங்குலமாகும். குதிகால் வரையில் ஒதுக்கம் 4 அங்குலமாகும். இவ்விதமாகப் பிருஷ்ட மத்திய சூத்திரத்திற்கும் அங்கங்களுக்கும் இடையே யுள்ள அளவுகள் கூறப்பட்டிருக்கின்றன. பார்சுவ சூத்திரத்தின் அளவு முன்பு கூறப்பட்டிருக்கிற படியே அமைக்கவும்.

பின்பக்கம் பார்சுவ சூத்திரத்திலிருந்து கை வரையில் மத்தியின் அளவு 4 அங்குலமாகும். முன் பக்கத்தில் புற பார்சுவ சூத்திரத்திற்கும் கைக்கும் மத்தியின் அளவு 8 அங்குலமாகும் ( எனவே கையின் கனம் 6 அங்குலம் என்பது கருத்து )

**கரங்கள் :**

வலக்கை அபயஹஸ்தமாகவும், இடக்கை வரத ஹஸ்தமாகவும் அல்லது வலக்கை வரத ஹஸ்தமாகவும் இடக்கை கடக ஹஸ்தமாகவும், அல்லது வலக் கை அபய ஹஸ்தமாகவும் இடக்கை கடக ஹஸ்தமாகவோ அல்லது கடிஹஸ்த மாகவோ அல்லது ஊரு ஹஸ்தமாகவோ அமைத்தலும் உண்டு.

வரத ஹஸ்தத்தின் பின்பக்கமானது தொப்புளுக்குச் சமமாக இருக்க வேண்டும். அது கடகஹஸ்தமாக இருந்தால் அதன் பின்பக்கமானது அடிவயிற் றளவுக்கு இருக்கவேண்டும். கைத்தலத்தில், விரல் வரையில் கரதலமத்தியம் என்றும், விரல்களுக்கு கரதலாக்கிரம் என்றும்பெயர். அபய ஹஸ்தத்தின் தலாக்கிராக்கிரமானது ( விரல் நுனியாது ) முலைக்காம்புக்குச் சமமாக இருக்க வேண்டும்.

மத்திய சூத்திரத்திலிருந்து நடு முட்டுக்கை வரையில் ( ஒதுக்கம் ) 16, 17. அல்லது 18 அங்குலமாகும். அல்லது அடிவயிற்றின் விலாப் பக்கத்திலிருந்து முட்டுக்கை வரையில் ( ஒதுக்கம் ) 5½ அல்லது 6 அங்குலமாகும். விலாப்பக்கத் திலிருந்து பாஹுமத்தியம் ( மேல்கையின் மத்தியபாகம் ) வரையில் ( ஒதுக்கம் ) 6 அங்குலமாகும்.

... ... ... ... ... .... ...

... .... ... ... ... .... ...

மத்திய சூத்திரத்திலிருந்து ( அபயஹஸ்தத்தின் ) உள்ளங்கை நடுவானது 15, 16, அல்லது 17 அங்குலம் ஒதுக்கமுடையதாகும். மத்திய சூத்திரத்திலிருந்து, வரத ஹஸ்தம் உள்ளங்கை வரையில் ஒதுக்கம் 15, 16, 17 அங்குலமாகும். பரஹஸ்தத்திலுள்ள கர்த்தரி முத்திரையின் நுனியானது, ஹிக்கா சூத்திரத்திற்குச் சமமாக இருக்க வேண்டும்.

கர்த்தரியின் நுனியானது ஸ்கந்த ஸந்திக்குச் ( கழுத்தும் தோளும் சேருமிடதிற்குச் ) சமமாகவாவது அல்லது அதற்கு ½ அங்குலம் குறைவாகவாவது இருக்கலாம். கர்த்தரி ஹஸ்தத்தின் அணிவிரல் ( உள்கையின் ) புஜம் இவைகளின் மத்திய அளவு ( ஒதுக்கம் ) 10 அங்குலமாகும். கர்த்தரி ஹஸ்தத்தின் மணிக்கட்டு புஜம் இவைகளின் மத்தியஅளவு ஒதுக்கம் 12 அங்குலமாகும். கர்த்தரி ஹஸ்தத்தின் அணிவிரலிலிருந்து நடுக்கழுத்து வரையில் (ஒதுக்கம்) 31 அங்குலமாகும். இவ்விதம் அளவுகள் இருந்தால் கர்த்தரி முத்திரையின் நுனியானது ( ஹிக்கைக்கும் ) சமமாக இருப்பதாகும். அல்லது கர்த்தரியின் நுனியானது ஹிக்கைக்குச் சமமாக இல்லாமல், ஸ்கந்த ஸந்திக்குச் சமமாக இருந்தால் அதன் மணிக்கட்டு, உள்கையின் புஜம், இவைகளின் மத்தியின் அளவானது (ஒதுக்கம்) 10, 11, 12, அல்லது 13 அங்குலமிருப்பதாகும்.

தொப்புளிலிருந்து தோள்களின் நுனி வரையில் குறுக்களவும் ( ஒதுக்கம் ) பரஹஸ்தங்களின் தலமத்தியத்தின் அக்கிரம் ( உள்ளங்கையில் விரலுக்குக் கீழ் வரையிலும் ) வரையிலும் ஒதுக்கமும், ஊர்த்துவகாயத்தின் அளவில் சரிபாதியளவாகும்.

**ஸ்தாநகம் :**

நிற்கும் வடிவமான மூர்த்தியானது, சமபாதமாகவும், சகல அங்கங்களும் நேராக உயர்ந்தும் இருப்பதாகும். வலது கையில் மழுவும், இடக்கையில் மானும் இருக்க வேண்டும். மானின் அளவு ( உயரம் ) 13½ அங்குலமாகும். மானுனது சுவாமியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

**மழு; மான், மகுடம், சந்திரன் :**

மழுவின் உயரமானது மானின் உயரமேயாகும். ஜடாமகுடமாவது கிரீடமகுடமாவது தரித்திருக்க வேண்டும். அதன் இடப்பக்கத்தில் இளம்பிறைச் சந்திரனும் வலப்பக்கத்தில் ஊமத்தம் பூவும் கிரீடத்தின் நடுவில் நாகபுஷபமும் (சர்ப்பவடிவமான புஷ்பம்) இருக்கவேண்டும். கிரீடத்தின் 4 பக்கங்களிலும் 4 பூரிமங்களாலலங்கரிக்கப்பட்டிருக்க வேண்டும். ( பூரிமம் - இலைவடிவமான அலங்காரம்) முகம் தெளிவாகவும் அழகாகவும் இருக்கவேண்டும். இப்பெருமான் தூய்மையான ஸ்படிகத்தின் நிறமுடையவராகவும், கைகளும் கால்களும் உடலுக்கு ஏற்றபடி பொருத்தமாகவும் அமைக்க வேண்டும்.

**வஸ்திரம் :**

புலித்தோலாடை அல்லது பிதாம்பரம் தரித்திருக்க வேண்டும். பிதாம்பர முடுத்தியிருந்தால் அது கணுக்காலுக்கு மேலே 6 அங்குல அளவு வரையிலிருக்க வேண்டும். தொப்புளுக்குக் கீழே 5 அங்குலம் வஸ்திரத்தின் எல்லையாகும். (தொப்புளுக்குக் கீழே 5 அங்குலத்தில் வஸ்திரம் உடுத்தியிருக்க வேண்டும் என்பது பொருள்.) சிவனுர் (சந்திரசேகரர்) புலித்தோல் ஆடையுடனிருந்தால் அந்த ஆடையானது நடுத்துடை வரையில் இருக்கவேண்டும்.

மேலும் **"கடிருத்திரபம்"** (அரைஞாண்) அணிந்து அதிலிருந்து துடைவரையில் குஞ்சங்கள் தொங்க விட்டு அலங்கரிக்கப்பட்டிருக்க வேண்டும்.

**"பூணூலும் நாகருத்திரமும்"** (சர்ப்ப வடிவமான கயிறு) அணிந்திருக்க வேண்டும்.

கழுத்தில் (முத்துமாலை நவரத்தினமாலை) **"ஹாரங்களும்" "உபகிரிவமும்"** (உள்கழுத்து அணி) அணிந்திருக்க வேண்டும்.

**காதணிகள் :**

இடக் காதில் **"கர்ணிகை"** அல்லது **"சங்கபத்திரம்"** அணிந்திருக்க வேண்டும். (கர்ணிகை - தாமரை மொக்கு போன்ற வடிவம், சங்கபத்திரம் - சங்குவளையம்). வலக்காதில் * மகரகுண்டலம் அல்லது **"சிம்ஹபத்திரம்"** அல்லது **"வியாளரூப குண்டலம்"** அணிந்திருக்க வேண்டும்.

**கரம், பாதம் :**

கையில் கடகத்திரயமும விரலில் மோதிரமும் அணிந்திருக்க வேண்டும். கைத்தலத்தில் சூலம், பத்மம், அங்குசம், போன்ற ரேகைகளிருக்கவேண்டும். பாதமானது பாதசரத்தாலும் கால்விரல்கள் மோதிரங்களாலும் அலங்கரிக்கப் பட்டிருக்க வேண்டும். முகமானது சிருங்கார ரசபாவத்தை வெளிப்படுத்துவதாக இருக்க வேண்டும்.

**அழகுத் திருமேனி :**

சந்திரசேகரமூர்த்தியின் அம்சமாக விளங்கும் இவரே இலிங்கோத்பவராக விளங்குகின்ருர். இப்பெருமானை அமைக்கும போது நேராக அமைந்த சமமான பாதங்களும், அழகுடன் கூடிய சிருங்காரரச பாவமும் விஸ்தாரமான கண்களுடன் கூடிய முகமும், ராஜலக்ஷ்வபாவமும் பவழம் போன்ற திருமேனியும் (4 கைகளுள் 2 கைகளில்) அபயவரதமும் (மற்ற 2 கைகளில்) தனக்குப் பிரிய மான மழுவும் மானும், முடியில் காணப்படும் சந்திரபிம்பமும், மிகவும் சுகுமாரமான அங்க அமைப்பும் உடையதாய் தேவதேவனுய் விளங்கும் மூர்த்தியாக விளங்குதல் வேண்டும்.

---

* மகரகுண்டலம் - மகரமத்ஸ்ய வடிவமான குண்டலம் வட்ட வடிவமான காதணி. "சிம்ஹபத்திரம்" - சிம்ஹவடிவத்தில் வட்ட வடிவமாக இருக்கும் காதணி. வியாளரூபம் - சர்ப்ப வடிவத்தில் வட்டமாக இருக்கும் காதணி.

## சாரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரத்தில்

x இலிங்கோத்பவ லக்ஷணம் : (மூல ஸ்லோகம்)

1. லிங்கோத்பவஸ்ய மூர்த்தஸ்ய லக்ஷணம் வக்ஷ்யதே அதுனா।
லிங்கஸ்ய ஹீனமாநஸ்ய சைகஹஸ்தம் ததைவ ச॥

2. தஸ்மாத் சித்ரயங்குலம் வாபி ஷடம் ஸாதிகமேவவா।
யாவத் பஞ்சகராந்தம் ஸ்யாதாயாமம் தாரமுச்யதே॥

3. உதயார்தம் து விஷ்கரம்பம் த்ரிபர்க்காம் ஸமேவவா।
சதுர்பாகை க பாகம் வா விஸ்தாரம் பூர்வவத்துவா॥

4: ஸிரோ வர்த்தன மாநம் ஹி பூர்வவத் விதினா பவேத்।
லிங்கஸ்ய யாவம்நாநம் ஹி பஞ்சாம் ஸம் தத் விபாஜயேத்॥

5. ஊர்த்வம் சைகாம்ஸகம் நீத்வா மூலே சைகாம் ஸகம் ந்யஸேத்।
தன் மத்யே த்ரயம் ஸகம் (ஸம்போ:) மூர்த்தீம் குர்யாத் யதாவிதி॥

6. அதவா ஷௌஸிகாம்ஸே து மத்யே பாதாம்ஸகம் ந்யஸேத்।
தஸ்ய மத்யே ப்ர (கர்த்தவ்யம்) ஸிவரூபஸ்ய வர்தகம்॥

7. குள காந்த ஸ்தலாம் க்ரேஸ்ச லிங்கே ப்ரபன்ன காஞ்சித:।
ப்ரம்மா விஷ்ணு த்வி: பார்ஸ்வே து வாம தக்ஷிண கௌஸ்திதௌ॥

8. நள காந்த மதாங்க்ரேஸ்ச லிங்கே ப்ரபன்னகம் பவேத்।
ப்ரம்ம விஷ்ணு பார்ஸ்வயோஸ்து வாமதக்ஷிணயோ: ஸ்திதௌ॥

9. ஹ்ருதயே அஞ்ஜலி மாத்ரஸ்தௌ நம்ஸ்க்ருத்வா த்வி பார்ஸ்வாகௌ
லிங்கஸ்யோதயம் பஞ்ச ஷட் க்ருத்வா சதுரம்சகௌ॥

10. த்ரிம்சம் மத்யமம் ப்ரோக்தம் கந்யஸம்து கலாத்வயம்।
லிங்கோச்சை பஞ்சதுர்யாம்ஸே ஸ்ரேஷ்டம் சதுரம்ஸகம்॥

11. த்ரயம்ஸம்து மத்யமம் பரோக்த மதமம் து கலாம்சகம்।
லிங்கஸ்யோர்த்வேது ஹம்சம் சாபிமுகம்து விதிர்யஸேத்॥

12: லிங்கஸ் யாதே முகம் ஸவ்யே விஷ்ணு தத்ஸூகராந்விதம்।
லிங்கஸ்யோர்த்வே விதம் ஹம்சம் வாமே சோர்த்வ முகம்ந்யஸேத்॥

13: லிங்கஸ்யதோமுகம் ஸ்வ்யே விஷ்ணும் ஸூகர ரூபிணம்।
தத்ஸூத்ர தஸ்த்வதோ பாகே பூமௌ ஸம்க (ர்ஷணம்) க்ருதம்
ந்யஸேத்।

14: லிங்கஸ்யோர்த்வே த்வி பார்ஸ்வேது சூரப்ருந்தை: ஸூரர்ஷிபி:।
முநீந்த்ரை: சூர்ய சந்த்ராத்யை: கந்தர்வைஸ்சாபி வந்திதம்॥

---

x ஸாரஸ்வதிய சித்ர கர்மசாஸ்திரம் - பக்கம் 226 - 229; த: ச. ம: வெளியீடு எண் 87;

15. தஸ்ய லிங்கஸ்ய மத்யேது தேவதேவேஸ்வர ஸ்திதி: |
லிம் (பிம்) ஸமாநோபமோநாப்யாம் புஜவர்ண ப்ரகாரகை: |
ஏவமந்யாநி மாநாநி சந்த்ரஸேகர வத் ஸுநி: (பவேத்) ||

16. ஸகலமகல மிஸ்ரம் தஸ்ய லிங்கஸ்ய மத்யே
ருஜுதரமத பாதம் ஸ்தாநகம் ராஜஸாகம் |
அபய வரத ஹஸ்தம் வேணுடங்கம் கராக்ரம் |
ஸஸிதர மகுடாக்ரே மிஸ்ர லிங்கோத்பவஸ்ய ||

இதி ஸாரஸ்வதியே சித்ரகர்ம ஸாஸ்த்ரே
லிங்கோத்பவ லக்ஷணம் நாம ஸப்ததஸோத்யாய: ஸமாப்த:

**சுலோகத்தின் விளக்கம் :**

இப்பொழுது இலிங்கோத்பவ மூர்த்தியின் லக்ஷணத்தைக் கூறுகிறேன். இலிங்கத்தின் குறைந்த அளவு 1 முழமாம். அதற்கு மேலே 5 முழம் வரையில் 2, 3, அல்லது 6 அங்குலம் விதம் உயரத்தைக் கூட்டிக் கொள்ளலாம் இனி அகலம் பின் வருமாறு.

இலிங்கத்தின் சுற்றளவானது ( அகலம் ) உயரத்தில் சரிபாதியளவு இருக்க வேண்டும். அது 3ல் 1 பங்காவது, 4ல் 1 பங்காவது அமையவும் இருக்கலாம். இலிங்கத்தின் அகலமானது, முன்பு கூறியுள்ள படியேயாம். இலிங்கத்தின் சிரோவர்த்தனமானது. முன்பு கூறியுள்ள விதியின் படியே இருக்க வேண்டும்,

இலிங்கமானத்தை ( உயரத்தை ) 5 பாகங்களாகச் செய்ய வேண்டும். அவைகளில் 1 பாகத்தை மேலேயும், 1 பாகத்தைக் கீழேயும் ஒதுக்கி விட்டு, நடுவிலுள்ள 3 பாகத்தில் சிவமூர்த்தியை விதிப்படி நிர்மானம் செய்ய வேண்டும்.

அல்லது இலிங்கத்தின் உயரத்தை 6 பாகங்களாகச் செய்து, அவைகளின் நடுவிலுள்ள 2 பாகங்களில் பரமசிவ சொரூபத்தை அமைக்க வேண்டும். காலின் கணுக்கை வரையில் இலிங்கத்தை மறைத்திருப்பதாகும். சுவாமிக்கு இரு பக்கங்களிலும் பிரம்மா, விஷ்ணு இருவரும் மார்பில் கை கூப்பி வணங்கி இருப்பார்கள்.

சிவலிங்கத்தின் உயரத்தை முறையே 6, 5, 4, கூறுகளாகச் செய்து, அக்கூறுகளின் நடுவில் 4, 3 அல்லது 2 பாகம் மூர்த்திமானமாகும். இவைகள் முறையே உத்தம மத்தியம அதமமானங்களாகும்.

சிவலிங்கத்தின் மேல் பாகத்தில், இடப் பக்கத்தில், மேல் நோக்குடன் கூடிய அன்ன வடிவங்கொண்ட பிரம்ம தேவனையும், லிங்கத்தின் கீழ்பாகத்தில் வலப் பக்கத்தில் கீழ் நோக்குடன் கூடிய சூகர வடிவத்துடன் கூடிய விஷ்ணுவையும் நிர்மாணம் செய்ய வேண்டும்.

இலிங்கத்தின் கீழ்ப்பாகத்தில் ஸ்ரீரகமூர்த்தி இருக்குமிடத்திற்குக் கீழே, அடித்தலத்தில் சங்கர்ஷணமூர்த்தியை அமைக்க வேண்டும். மேல் பாகத்தில் இருபக்கங்களிலும் தேவதைகள், தேவர்கள் ரிஷிகள், முனிவர்கள், சூரியன், சந்திரன் முதலியவர்களும் கந்தர்வர்களும் இலிங்கத்தைச் சூழ்ந்து கொண்டு வணங்கி நிற்க வேண்டும்.

இலிங்கத்தின் நடுவில் சிவனுரின் ரூபம் அமையப் பெற்றிருக்க வேண்டும், அந்த பிம்பத்தின் மானம், உபமானம், கைகள், நிறம் முதலியவைகள், மற்ற அளவுகள் யாவும் சந்திரசேகரருக்குக் கூறியிருப்பதைப் போலவே அமையவேண்டும்.

இலிங்கோத்பவ மூர்த்தியானது சகலநிஷ்கல மூர்த்தியாகும். அதன் நடுவிலுள்ள பரமேசுவரனின் வடிவமானது, நேராக நிமிர்ந்திருக்கும் கால்களுடன் நின்றவடிவமும் ராஜசகுணமும் உடையதாகும். 4 கைளில் 2 கைகள் அபயவரத ஹஸ்தமாகவும், மற்ற 2 கைகளில் வேணுவும் (புல்லாங்குழல் அல்லது மூங்கில் தடியும்) டங்கமும் (உளி) வைத்திருப்பதாகவும். சந்திர கலையுடன் கூடிய முகுடத்தை சிரசில் தரித்திருப்பதாகவும் அமைக்கவேண்டும்.

**ஸ்ரீதத்துவநிதி (முதற்பாகம்) நூலில்:**

**தியானம்:** (இலிங்கோத்பவர்)

*லிங்காகாரஸ்ய மத்யேது சந்திரசேகரவத் ஸ்திதம் ।*
*நாளகாதஸ்திதம் பாதம் லிங்கோத்பவ ஸமந்விதம் ॥ 1*
*விரிஞ்சிர் ஹம்ஸ ரூபேண சோர்த்துவகோ வாமபார்சுவகே ।*
*தக்ஷே வராஹ ரூபஸ்ய ரூபேணுத கதோ ஹரி: ॥ 2*
*வாக தக்ஷிண பார்சுவஸ்தௌ கிருதாஞ்சலி ஸமந்விதௌ ।*
*ஸ்வரூபேண த்விபாத (ர்ஸ்வ) ஸ்தாவஜ விஷ்ணு விபோப்பரே ॥ 3*
*ஏவம் லிங்காவதாரந்து ஸர்வ சாந்திகரம் ஸதா ।*
*துங்காங்க விஸ்துருதி ந தாம்ஸ ச கலம்ப மாலெநெ: (ந)*
*ஸம்பன்ன சின்ன புஜபூஷண பேதெ; ।*
*ஸோபான்விதம் சுபகரம் ஸகலப் பிரஜாநாம் ॥ 4*

(வக்ஷாந்தரே சுப்ரவர்ணேபி பிரஸித்த :)

இலிங்கோத்பவர்–சிவனரின் கரங்களில (சந்திரசேகரர் தியானத்தின்படி) வரதம் x அபயம் மான், மழு இவைகளைத் தரித்தும், சாந்தமான சிருங்கார ரஸபாவ முகம், மலர்ந்த கண்கள், சிரசில் சந்திரன், நேராக நிமிர்ந்த சரீரத்தோடுகூடிய ஸமபாதமாக நின்ற வடிவும், பவழ நிறமும் உடையவராவர். கீழே பத்மம் அமைத்தலும் ஒரு முறை.]

---

x அபயத்திற்கு பதிலாக ஊரு ஹஸ்தம் வைத்தலும் உண்டு,

இலிங்க வடிவத்தின் மத்தியில், சந்திரசேகர மூர்த்தியைப் போல நின்ற வடிவமானதும், இலிங்கநாளத்திற்குக் கீழேயுள்ள பாதத்தையுடையதுமான மூர்த்தியானது இலிங்கோத்பவ மூர்த்தியாகும்.

இந்த மூர்த்தியின் இடப்பக்கத்தில் மேலே அன்னப்பறவையின் வடிவத்துடன், மேல் நோக்கிச் சென்று கொண்டிருக்கின்ற பிரம்மா, வலப் பக்கத்தில் வராஹ ரூபத்துடன் (பன்றி) கீழே கீழ்நோக்கிச் சென்று கொண்டிருக்கின்ற விஷ்ணு இவர்களைக் கல்பிக்க வேண்டும்.

மேலும் இலிங்கோத்பவ மூர்த்தியின் இடப்பக்கத்தில் அஞ்சலி பந்தநம் (ஹஸ்தம்) செய்து கொண்டிருக்கிற பிரம்மா, வலப்பக்கத்தில் அஞ்சலி பந்தநம் (கூப்பியகரம்) செய்து கொண்டு நிற்கின்ற விஷ்ணு இவர்களையும் கல்பிக்க வேண்டும். இவ்விதமான இலிங்கோத்பவ மூர்த்தியானது எல்லாத்திங்குகளையும் விலக்குவதாகும்.

இம்மூர்த்தியை அமைக்கும் போது, உயரம், விஸ்தாரம், நதமாநம், லம்பமாநம், அடையாளம், கைகள், ஆபரணங்கள், நிறம் இவைகள் பாகுபாடுகளுடன் நிறைவுற்றிருக்கும்படி கல்பிக்க வேண்டும். இவ்விதம் அழகாகக் கல்பிக்கப்படும் மூர்த்தி யானது சகல ஜனங்களுக்கும் மங்களங் களையும் நிறைந்த செல்வத்தையுமளிப்பதாகும். பெருமானின் நிறம் வெளுப்பு என்று கூறப்பட்டுள்ளது.

**குறிப்பு :**

இலிங்கத்தின் குடைவுப்பகுதியின் விளிம்பில் தீச்சுடர்களை சுற்றிலும் அமைப்பதும், பாணத்தின் மேலும், கீழும் பூமாலையினை அணிவித்தபடியாகவும் அமைப்பது சிற்பிகளின் யுக்தியாகும். தீச்சுடர்களை ஒரு சில சிற்பங்களில் மட்டுமே காணலாம்.

**o காசியப சில்ப சாத்திரத்தில் இலிங்கோத்பவ மூர்த்தி : (சுலோகம்)**

" அத வக்ஷ்யே விஸேஷேண லிங்கோத்பவ விதிம் ஸ்ருணு |
லிங்கா காரஸ்ய மத்யே து சந்த்ரஸேகர மூர்த்தி வந் ||
நளகாத்து பதாந்தம் து லிங்கே கூடம் பவேதிஹ |
பிதாமஹோ ஹம்ஸரூபி ஊர்த்த்வாஸ்யோ வாம பார்ஸ்வகே ||
விஷ்ணு ; வராஹ ரூபேண தக்ஷிணம்ஸே து அதோமுக : |
விஷ்ணு : தக்ஷிண பார்ஸ்வேது வாம பார்ஸ்வே பிதாமஹ |
ஹ்ருதயாஞ்ஜலி ஸம்யுக்தௌ ஸ்திதௌ தௌ லிங்கமிஷ்யதே |
ரக்த ஸ்யாம ஹிரண்யாபா : ஈஸவிஷ்ணு பிதாமஹா : ||

o ஸ்ரீ காசியப சில்ப சாஸ்திரம் – பக்கம் 383 த. சு. மகால் வெளியீடு எண் 89.



படம் - 37.

நாகை மாவட்டம் - திருக்கடவூர்
ஸ்ரீ அமிர்தகடேஸ்வரர் ஆலயத்தின்
மேற்கு கோஷ்ட மாடத்தில் விளங்கும்
இலிங்கோத்பவ மூர்த்தி

( நன்றி : French Indology - Pondicherry )



படம் - 38.

இராமநாதபுரம் மாவட்டம் - திருப்பத்தூர் வட்டம்
குன்றக்குடி ஸ்ரீ மலைக்கொழுந்தீஸ்வரர்
குகைக்கோயில் - கிழக்கு
இலிங்கோத்பவர்

[ நன்றி : French Indology - Pondicherry ]

**சுலோகத்தின் பொருள் :**

இலிங்க உருவத்தின் நடுவில் சந்திரசேகர மூர்த்தியைப் போன்றே சிவ ருபத்துடன் கூடியது இலிங்கோத்பவ மூர்த்தியாகும். இந்த மூர்த்தியின் நளகையிலிருந்து பாததலம் வரையில் லிங்கத்தில் மறைந்திருப்பதாகும். பிரம்ம தேவர், அன்ன வாகன உருவம் கொண்டு மேனோக்குடன் ( லிங்கத்தின் மேல் பக்கத்தில் ) இடப் பக்கத்தில் கல்பிக்கப்பட வேண்டும்

விஷ்ணுவானவர், வராஹ ருபத்துடன் அதோமுகமாக ( லிங்கத்தின் அடிப் பக்கத்தில் ) வலப் பக்கத்தில் கல்பிக்கப்பட வேண்டும்.

பிரமன், விஷ்ணு இருவரும் மார்பில் கைகளைக் கூப்பி வைத்துக் கொண்டு, லிங்கத்தின் இருபக்கங்களிலுமிருக்க வேண்டும்.

பரமேஸ்வரன், விஷ்ணு இவர்களின் நிறமானது முறையே சிவப்பு, நீலம், மஞ்சள் ஆகியவையாகும்.

**பாணத்தின் குடைவுப் பகுதியில் சிவனாரின் திருமேனி அமைக்கும் முறை :**

இலிங்கோத்ப மூர்த்தியாக விளங்கும் பெருமானை அமைக்கும் போது சந்திரசேகரரின் லட்சணத்தை ( திருமேனி ) அப்படியே அமைத்தல் வேண்டும் என காசியப சில்ப சாத்திரம் கூறுகிறது. மேலும் சிவனாரின் திருமுடியும், திருவடிகளும் சிறிது மறைத்தாற் போன்று ( புராண நிகழ்ச்சியினை நினைவூட்டுவதற்காக ) சிற்பத்திலும் ஒவியத்திலும் காட்டவேண்டும். இது மரபுச் செயலாகும்,

இந்நூலின் அறுபத்தாறுவது படலத்தில் சந்திரசேகர மூர்த்தியின் திருவுருவ அமைப்பு பற்றி விளக்கமாக இருப்பதனை இங்குக் காணலாம்.

**பொதுச் செய்தி :**

சந்திரசேகர மூர்த்தியானது கேவல மூர்த்தி என்றும், கெளரி சகித மூர்த்தி என்றும், ஆலிங்கனமூர்த்தி என்றும் மூன்றுவகை உண்டு. கெளரி தேவி இல்லாமல் தனித்திருக்கும் மூர்த்திக்கு **கேவல மூர்த்தி** என்று பெயர். கெளரி தேவியுடனிருக்கும் மூர்த்திக்கும் **கெளரீ சகித மூர்த்தி** என்று பெயர். கெளரிதேவி பரமேசுவரன். இருவரும் ஒருவருக்கொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டிருக்கும் மூர்த்திக்கு **ஆலிங்கன மூர்த்தி** என்று பெயர். இந்த மூன்றுவித மான மூர்த்திகளின் லட்சணங்களை ஊஹித்து அறிந்து கொள்ள வேண்டும்.

கேவலமூர்த்தியானது, சமபாதமாக இருப்பதாகும். உமாசகிதமூர்த்தியானது ஸ்தாநகமாக இருப்பதாகும், ஆலிங்கிதமான சந்திர சேகரமூர்த்தியானது. சம்பங்கலக்ஷணம் அல்லது அதிபங்க லக்ஷணமுடையதாக இருக்க வேண்டும்,

கேவல மூர்த்தியானது, முக்தியைக் கொடுப்பதாகும். உமாசகித மூர்த்தியானது, அபயப்பிரதமாகும். அவைகளில் முதலில் கூறப்பட்ட கேவல மூர்த்தியானது சமபாதமாக இருப்பதாகும். உமாசகித மூர்த்தியானது ஸ்தானக மூர்த்தியாகும். பிம்பத்தின் மானம் உயரம் யாவும் ஆதீன வெளியீடான சோமாஸ்கந்தர் நூலில் காண்க.

**லம்பமானம் - உபமானம் :**

பிரலம்மப்பலகையின் உயரமானது 48 அங்குலமாகும். அதன் அகலமானது 18 அங்குலமாகும். அதன் கனமானது $2\frac{1}{2}$ அங்குலமாகும் அதற்கு 4 கால்கள் இருக்கவேண்டும். அதன் உயரமானது பிரதிமையின் உயரத்தைக் காட்டிலும் $\frac{1}{4}$ பங்கு அதிகமாக இருக்கவேண்டும். அதை 27 அங்குலம் அதிகமாக இருக்கும்படி செய்து சமபூமியில் தாபிக்க வேண்டும்.

அதன் பிறகு, பிரலம்ப பலகையின் மேலே சமசூத்திரத்தை நிச்சயிக்க வேண்டும். பிறகு முன்பக்கம், பின்பக்கம், வல இடப் பக்கங்கள், இந்த 4 இடங்களிலும் மான சூத்திரத்தைத் தொங்க விடவேண்டும். பிரலம்ப பலகத்தின் நடுவில் ( கீழே கூறப்பட்ட விடங்களில் ) துவாரத்தைக் கல்பிக்க வேண்டும். அந்தத் துவாரத்தில் சூத்திரத்தின் ஒரு தலைப்பைத் தொங்க விட வேண்டும். அந்த சூத்திரமானது பிம்பத்தைக் குணமாகச் செய்யும், ( அந்த லம்ப சூத்திரங்களைக் கொண்டு பிம்பத்தை குணவத்தாகக் கல்பித்துக் கொள்ள வேண்டும் என்பது பொருள் ).

**பஞ்ச சூத்திரம் :**

முன்பக்கம், பின்பக்கம், வலப்பக்கம், இடப்பக்கம், சரீரமத்தியம் ஆகிய 5 இடங்களிலும் 5 சூத்திரங்களைத் தொங்கவிட வேண்டும், இவ்வைந்து சூத்திரங்களுக்கும் பஞ்ச சூத்திரம் என்று பெயர்.

**பிருஷ்ட சூத்திரம் :** ( பரசூத்திரம் )

பின் பக்கத்தில் மகுடமத்தியம் நடுக்கழுத்து ( பிடரியின் மத்தியம் ) கழுத்தின் ( அடிக்குத்தின் ) மத்தியம், அதிலிருந்து முதுகின் மத்தியம், இரண்டு ஸ்பிக்பிண்டங்களின் ( பிருஷ்ட பாகங்களின் ) நடு, துடை, முழங்கால், கண்டைக் கால், குதிகால் இவைகளின் மத்தியம், இந்த இடங்களில் சூத்திரம் தொங்க வேண்டும். இந்தச் சூத்திரத்திற்குப் பிருஷ்ட சூத்திரம் என்றும் பர சூத்திரம் என்றும் பெயர்,

**பாகூ பார்சுவ மத்திய சூத்திரம் :**

இரு பக்கங்களிலும் காதுகளின் வெளிப்பக்கம், நடுக்கழுத்து ( இங்கு கழுத்து என்பதற்கு தோள்பட்டை என்று பொருள் ) ( அல்லது கழுத்தின் வெளிப்பக்கமாகிய தோள்பட்டையின் மத்தியம் ) பாகூ மத்தியம் ( கைகள் விலாப்பக்கங்கள் இவைகளின் மத்தியம் ) கால் மணிக்கட்டின் நடு ( வெளிப் பக்கம் ) இவைகளில் சூத்திரத்தைத் தொங்கவிட வேண்டும், இதற்குப் பாகூ

வந்தர சூத்திரம் என்றுவது, பாகூ பார்சுவ மத்திய சூத்திரம் என்றுவது பெயர் கொள்ள வேண்டும். கூறப்படும் o ஐந்து சூத்திரங்களையும் தேகத்தின் நடுவில் செல்லுகின்றவைகளாகவே கல்பித்துக் கொள்ள வேண்டும்.

காதின் உள்பக்கத்தில் தொங்கும் சூத்திரமானது மூலைக்காம்பின் நடு, x துடை, பாதம் இவைகளின் மத்தியம் இந்த இடங்களில் ( சரீரத்தின் நடுவில் ) தொங்கும் சூத்திரமாகும்.

பூர்வ சூத்திரத்திலிருந்து உச்சியின் நடுவானது 12 அங்குலமாகும், பூர்வ சூத்திரத்திலிருந்து தலையின் முன் பக்கம் மத்தியம் வரையில் ஒதுக்கம் 6 அங்குலமாகும். பூர்வ சூத்திரத்திலிருந்து நடு நெற்றி வரையில் ஒதுக்கம் 2 அங்குலமாகும். பிருஷ்ட சூத்திரத்திலிருந்து பின் மண்டை வரையில் ஒதுக்கம் 3½ அங்குலாகும்.

பூர்வ சூத்திரத்திலிருந்து ஹனுவந்தமானது. ( முகவாய்க்கட்டை வரையில் ஒதுக்கம் ) 2½ அங்குலமாகும். பின்பக்கம் கழுத்து நரம்பிலிருந்து ( பிடரியிலிந்து ) பிருஷ்ட சூத்திரத்தின் ஒதுக்கம் 17/8 அங்குலமாகும். பூர்வசூத்திலிருந்து கழுத்து வரையில் ஒதுக்கம் 6. அங்குலாகும் ( பின் பக்கத்தில் ) தோள்பட்டை நடுவிலிருந்து ( கழுத்தின் கீழ்க்குத்திலிருந்து ) பிருஷ்ட சூத்திரம் வரையில்.

ஒதுக்கம் 16 யவையாகும். மார்பிலிருந்து பூர்வசூத்திராந்தமான ஒதுக்கம் 2 அங்குலமாகும். கழுத்தின் கீழ்க்குத்திலிருந்து பிருஷ்ட சூத்திரம் வரையில் ஒதுக்கம் 8. அங்குலமாகும். பூர்வசூத்திரமானது உதர மத்தியத்தைத் தொட்டிருக்க வேண்டும். உதர மத்தியத்திற்குச் சமமான பின்பக்கத்தில் முதுகுத் தண்டிலிருந்து பிருஷ்ட சூத்திரத்தின் ஒதுக்கம் 8½ அங்குலமாகும். பூர்வ சூத்திரத்திலிருந்து நாபிமத்தியம் வரையில் ஒதுக்கம் 1½ அங்குலமாகும். பின்பக்கத்தில் நாபிக்குச் சமமான விடத்தில் 2½ அங்குலமாகும். பூர்வ சூத்திரத்திலிருந்து மேட்ரமூலம் வரையில் ஒதுக்கம் 3 அங்குலம் கூறப்பட்டிருக்கிறது பின்பக்கத்தில் அதற்குச் சமமான விடத்தில் பிருஷ்ட சூத்திரம் வரையில் ஒதுக்கம் 2 அங்குலமாகும்.

**மத்தியம் கணக்கிடல் :**

புரஸ்சூத்திரமானது, முன்பக்கத்தில் ஊருமத்தியம் ஜானுமத்தியம், ஜங்கா மத்தியம், நளகாமத்தியம், ஆகிய இடங்களில் செல்வதாகும். இந்த விடங்களில்

---

o மத்தியசூத்கிரம் 1. கர்ணபாஹ்ய சூத்திரம் காதின் வெளிப் பக்கத்திய சூத்திரம் 2. கர்ணப் பியந்தர சூத்திரம் காதின் உள்பக்கத்திய சூத்திரம் 2 ஆக 5 சூத்திரங்களும் சரீரமத்தியில் செல்லும் 5 சூத்திரங் களென்று கூறப்பட்டிருக்கின்றன.

xதஞ்சை சரஸ்வதிமகால் சுவடியில் - கக்ஷமத்திய பார்சுவம், கடிமத்திய பார்சுவம், பாதமத்தியம் இவைகளில் சரீரமத்தியில் தொங்க விட வேண்டும் என்று பொருள் கொண்டசுலோகம் உள்ளது.

குறுக்காக சூத்திரங்களைக் கல்பித்துக் கொண்டு, மத்தியத்தைக் கண்க்கிட வேண்டும். அந்தவிடங்களில் பின்பக்கத்திலும், குறுக்காகவும், சூத்திரங்களைக் கல்பித்துக் கொள்ள வேண்டும், ஊரு மத்தியாங்க சூத்திரமானது ( ஊருமத்தியில் குறுக்காக இருக்கும் சூத்திரம் ) பூர்வ சூத்திரத்திலிருந்து 2 அங்குலத்திலிருப்பதாகும்.

அதே இடத்தில் அபரசூத்திராந்தமானது ( அதே போல பின்பக்கத்தில் ஊருமத்தியத்திலுள்ள குறுக்கு சூத்திரத்திலிருந்து பரசூத்திரம் வரையில் ஒதுக்கம் ) 26. யவையாகும் ஜானுமத்தியத்திலுள்ள குறுக்கு சூத்திரமானது. பூர்வசூத்திரத்திலிருந்து 6. அங்குலமாகும். அதே இடத்தில் பின்பக்கம் o **நிர்யக் சூத்திரத்திலிருந்து,** பரசூத்திரமானது 4¾ அங்குலமாகும் ஜங்கா மத்தியமானது பூர்வ சூத்திரத்திலிருந்து 8 அங்குலமாகும். அதே இடத்தில் பரசூத்திராந்தமானது 26 யவையாகும் பூர்வசூத்திரத்திலிருந்து நளகாமத்தியமானது ( திர்யக்சூத்திரம் ) 8½ அங்குலமாகும்.

நளகையிலிருந்து ( நளகையின் திர்யக்க சூத்திரத்திலிருந்து ) பர சூத்திரமானது 4¾ அங்குலமாகும். பூர்வ சூத்திரத்திலிருந்து, பெருவிரல் நுனியானது விசேஷித்து 2½ அங்குலமாகும். அதே சூத்திரத்திலிருந்து குதிகால் வரையில் 14½ அங்குலமாகும். பூர்வ சூத்திரத்திலிருந்து, காய மத்திய சூத்திரமானது 9½ அங்குலமாகும்.

அந்த காயமத்திய சூத்திரத்திலிருந்து சிரசின் பின்பக்கமானது 4 அங்குலமாகும். அந்த காய மத்திய சூத்திரத்திலிருந்து ( பின்பக்கத்தில் ) கழுத்தானது ( கழுத்தின் கீழ்க்குத்து ) 5½ அங்குலமாகும். நடுமார்பிலிருந்து பின்பக்கமானது 6½ அங்குலமாகும். மத்திய சூத்திரத்திலிருந்து வயிற்றின் பின்பக்கமானது 4½ அங்குலமாகும். நாபி பிரதேசத்திலிருந்து பின்பக்கமானது 6½ அங்குலமாகும். இருப்பின் ஒதுக்கம் 6 அங்குலமாகும். ஸ்பிக்பிண்டத்தின் அக்ரபாகமானது 8½ அங்குலமாகும்.

துடையில் பின்பாகமானது 4 அங்குலமாகும். முழங்காலின் பின்பக்கமும் அதே போல 4 அங்குலமாகும். துடையின் நடுவிலிருந்து 3 அங்குலமாகும். நளகை 2 அங்குலமாகும். குல்பபிரதேசத்தில் ( கணுக்கால் சந்திகளின் முண்டுகளிலிருந்து ) பின்பக்கத்தின் கனபாகமானது 4 அங்குலமாகும்.

பார்சுவசூத்திரங்கள் இரண்டும் மத்திய சமசூத்திரத்திலிருப்பவைகளாகும். பார்சுவ சூத்திரத்திற்கு முன்பக்கத்தில் பாகுபர்யந்தமானது ( புஜாந்தமானது ) 4 அங்குலமாகும். அந்த சூத்திரத்திலிருந்து பாகுபர்யந்தமானது, பின்பக்கத்தில் 8 அங்குலமாகும். பூர்வகரம், பரகரம் இவைகள் ( சரீர ) மத்தியில் முழங்கை முண்டு வரையில சேர்ந்திருப்பவைகளாகும். அவ்விரு கைகளும் 4 அங்குலம் வெளிப்பக்கத்தில் விரிந்திருப்பவைகளாகும்.

---

o ஜங்காமத்திய சூத்திரம் என்று கொள்ளுதல் வேண்டும்.

கர்த்தரி முத்திரையுடன் கூடிய பரகஸ்தங்களின் நுனியானது, சிக்கா சூத்திரம் சமமாக இருக்கவேண்டும். அந்த ஹஸ்தங்களின் நடுவிரலானது கழுத்துமட்டமாக இருக்கவேண்டும்.

வலக்கை அபயமாகவும், இடக்கை வரதமாகவும் இருக்க வேண்டும். பூர்வசூத்திரத்திலிருந்து அபயகரத்தின் மத்தியமானது 15 அங்குலமாகும்.

வரதகரமான இடக்கையானது, அதோமுகமாகக் கல்பிக்கவேண்டும். கைத்தலத்தின் அடிப்பக்கமானது, இடுப்பு மட்டமாக இருக்க வேண்டும். கராக்ரமானது ( நுனிக்கையானது ) மேட்ராக்கிர சமமாக இருக்க வேண்டும். அந்தக்கையின் நடுவிரலில் நுனியிலிருந்து துடைவரையில் ஒதுக்கம் 4 அங்குல மாகும். வரதகர தலத்தின் ( இடது உள்ளங்கை ) மேல் பாதியின் பின் பக்கமானது, நாபி மட்டமாகத் தூக்கி இருக்க வேண்டும்.

வரதகரத்தின் உள்ளங்கை நடுவானது, பூர்வ சூத்திரத்திலிருந்து 16 அங்குலமாகும். கர்த்தரி கரத்தின் மணிக்கட்டிலிருந்து கையின் வெளிப் பக்கமானது 12 அங்குலமாகும். அல்லது 11 அங்குலமாவது 10 அங்குலமாவது இருப்பதாகும், முழங்கையிலிருந்து மத்திய சூத்திரம் வரையில் ஒதுக்கம் 17, 18 அல்லது 19 அங்குலமாகும். ஜங்கையின் ( கண்டைக்காலின் ) ஒதுக்கம் 19 அங்குலமாகும். அடித்துடையின் ஒதுக்கம் 2 அங்குலமாகும். குல்பத்தின் ( கணுக்கால் சந்தியின் ) ஒதுக்கம் 1 அங்குலமாகும். ஊரு மத்தியத்தின் ( மத்தியசூத்திரம், ஜாநுவந்தமான துடை இவைகளின் ) ஒதுக்கம் 20 அங்குல மாகக் கொள்ளல் வேண்டும்.

ஜாநுவந்தரம் ( ஜாநு – முழங்கால், அந்தரம் – மத்தியபாகம் ) 4 அங்குலமாகும். ஜங்காதரம் 5 அங்குலமாகும். நளகாந்தரம் 6 அங்குலமாகும் குல்பாந்தரம் 4 அங்குலமாகும். பாதாங்குஷ்டதுவயாந்தரத்தின் ஒதுக்கம் 8 அங்குலமாகும்.

**உடலும், முத்திரைகளும் :**

இந்த மூர்த்தியை நேராக நிமிர்ந்த நிலையில் ராஜஸஸ்வபாவ முடைய தாகக் கல்பிக்க வேண்டும், கர்த்தரி முத்திரையுடன் கூடிய பரகஸ்தங்களில், வலக்கையில் மழுவும், இடக்கையில் பெண் மானும் கல்பிக்கப்படவேண்டும். மழு, மான் இரண்டும் வெளிநோக்காகவாவது உள்நோக்காகவாவது இருப்ப தாகும். சடைமுடியணிந்திருக்க வேண்டும் ( ஜடாமகுடம் ). அதன் வலப் பக்கத்தில் சந்திரகலையை அணிந்திருக்க வேண்டும், அல்லது இடப் பக்கத்தில் இளம் பிறைச் சந்திரனையணிந்திருக்க வேண்டும். மேலும் இம்மூர்த்தியானது பீதாம்பரம் தரித்து, சகலவிதமான ஆபரணங்களையுமணிந்து, அழகான முகமும் மூன்று கண்களுமுடையதாகும். ஆடையின் தலைப்பானது நளகாந்தமாக இருத்தல் வேண்டும்.

# இலிங்கோத்பவமூர்த்தி சிற்பங்களின் உருவமைதிகள்

## [ Lingodbhavamurti - Iconography ]

### சிவாலயத்தில் இலிங்கோத்பவமூர்த்தி அமைவிடம் :

இலிங்கோத் பவமூர்த்தி திருமேனியானது தென்னிந்திய திருக் கோயில்களின் கருப்பக்கிருக o மேற்கு வெளிப்புற கோஷ்ட மாடத்தில் ஆகமவிதிப்படி அமைக்கப்பட்டிருக்கும். பிரமன, விஷ்ணு ( திருமால் ) ஆகியோரின் கருவத்தை அடக்கச் சிவபெருமான் பெயரொளிப் பிழம்பாய் ( தூண்போன்ற ஒளிவடிவம் ) தோன்றினர். இதனை இலிங்க புராணம், கூர்ம புராணம், வாயு புராணம், சிவபுராணம் ஆகிய நூல்களில் விரிவாகக் காணலாம்.

### சிற்பத்திற்குரிய புராணம் :

கல்ப கால முடிவில் விஷ்ணு ஆழ்கடலில் இருந்தார். அப்போது ஓர் பேரொளிப் பிழம்பு தோன்றியது. அதின்று பிரமன் வெளிப்பட்டார். தன் எதிரில் உள்ள விஷ்ணுவைப் பிரமன் கண்டார். தன்னை விஷ்ணுவுக்கு அறிமுகப்படுத்திக் கொண்டு அவரை யார் என வினவினர்? விஷ்ணு தானும் அண்டத்தின் சிற்பிதான் என விடையளித்தார். இக்கூற்று பிரமனுக்கு கோபம் உண்டானது. இதனல் இருவருக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது.

அப்போது தீப்பிழம்பு ( லிங்கவடிவத்தில் ) தோன்றியது. இத்தீயின் நூற்றுக்கணக்கான நாக்குகள் ( ஜுவாலைகள் ) அலைவீசின. இதனைக்கண்ட பிரமனும், விஷ்ணுவும் தனது சண்டையினை மறந்து இத்தீம்பிழம்பின் அடியையும் முடியையும் முறையே தனித் தனியே தேடிச் சென்றனர். பிரமன் ஹம்ஸ வடிவில் ( அன்னவடிவாக ) ஆகாயத்தில் பறந்து முடியைக் காணச் சென்றார்.

விஷ்ணு வராக வடிவில் (பன்றி உருவம்) அடியினைத் தேடி பூமியைப் பிளந்து கொண்டு உட்சென்றார். இவ்விருவரது முயற்சி வீணாகப்போயிற்று. தம்மைவிடப் பெரிய சக்தி ஒன்று இருப்பதை உணர்ந்தனர். அடியும் முடியும் காணமுடியாத அப்பரம்பொருளைத் ஏத்திப் புகழ்ந்து பணிந்தனர்.

### காட்சியும் குரலும் :

ஆயிரம் கால் கைகளுடன் சூரியன், சந்திரன், அக்னி இவற்றை முக்கண்களாகவும், திரிசூலம், பிநாகம் என்கிற வில், யக்ஞோபவீதம் அணிந்து

---

o இலிங்கோத்பவ மூர்த்தியின் நேரே முருகனை பிரதிட்டை செய்திருப்பர் ( ஆவரணப்பகுதியில் - வருணஸ்தானம் ) ஜோதிவடிவாய் நின்ற பெருமான்முன் அக்னி நேத்ரத்தால் உண்டான முருகன் திருமேனிகாண்க.

இடி ஒத்தகுரலில் இறைவன் (சிவன்) பிரமா விஷ்ணுவை நோக்கி பின்வருமாறு கூறலானுர்.

நீங்கள் இருவருமே என்னிடமிருந்து வெளிப்பட்டவர்கள். (பிரமன் வலப் புறமிருந்தும், விஷ்ணு இடப்புறமிருந்தும் வந்தவர்கள்) நாம் மூவரும் ஒருவரே. இப்போது நாம்மூவரும் பிரமன், விஷ்ணு, மகேஸ்வரன் என மூன்று கூறுகளாகப் பிரிந்துள்ளோம் எதிர்காலத்தில் பிரமன் விஷ்ணுவிஞல் பிறப்பார். விஷ்ணுவின் கோபப் புருவத்திலிருந்து தோன்றுவேன் எனக்கூறி மறைந்தார். இந்தக் காலத் திலிருந்து இலிங்கம் எல்லா மாந்தர்களாலும் வழிபடப்பட்டது.

**பொய் உரைத்ததால் தனி ஆலயம் இல்லாது போயிற்று :**

திப்பிழம்பின் முடியினைக்காணும் ( உச்சிப்பகுதி ) பிரமன் மேலே போய்க் கொண்டிருக்கும் போது தாழம்பூ இதழ் ஒன்று கீழே வந்து கொண்டிருந்தது. பிரமன் நீ எங்கிருந்து வருகிருய் என வினவினுர். அதற்கு அப்பூஇதழ் மகேஸ்வரன் முடியிலிருந்து இறங்கியதாக கூறியது. எப்போது மேலே இருந்து கீழ்நோக்கி வருகிறேம் எனக்கூட நினைவில்லாமல் நீண்டகால மாகவே பயணம் செய்வதாகக் கூறியது.

இப்பூவிதழைப் பற்றி எடுத்துக் கொண்டு பிரமனும் கீழ்நோக்கி வந்து விஷ்ணுவிடம் தான் மகேஸ்வரன் முடியைக் கண்டுவிட்டதாகவும், அங்கிருந்து ஒரு பூவிதழைக் கொண்டு வந்து உள்ளதாகவும் பொய்யாகக் கூறினுர். இப்படிப் பொய் உரைத்தற்காக புவியில் மாந்தர் வணங்கும் தன்மையைப் பிரமன் இழக்கச் சபிக்கப்பட்டார். இதனுல் உலகில் பிர்மாவுக்குத் தனிக் கோவில் இல்லாது போயிற்று.

மேற்கண்ட புராண வரலாற்று நிகழ்ச்சியினை நமது சிற்பிகள் தமிழக திருக்கோயில்களில் மேற்கு கோஷ்ட மாடத்தில் தத்துவருபமாக மும்மூர்த்திகளின் நிலையினையும் எல்லாவற்றிற்கும் மேலாக விளங்குவது சிவபரம் பொருளே மேலான தத்துவம் என்று இலிங்கோத்பவ சிற்பம் உணர்த்துகின்றது.

**சிற்பத்தில் வடிக்கும் முறை :**

இலிங்கோத்பவ மூர்த்தியின் சிற்பத்தினை அமைக்கும்போது, சந்திர சேகர மூர்த்தியாகச் சிவனின் உருவம் இலிங்க வடிவின் முன் பகுதியில் ( குடைவில் புடைப்புச்சிற்பம் ) செதுக்கப்பட வேண்டும்.

**அம்சுமத்பேதாகமத்தில் :**

இலிங்க உருவின் மேல் புறம் ஐந்தில் ஒருபாகம், கீழ்புறம் ஐந்தில் ஒரு பாகம் விட்டு விடவேண்டும், என கூறப்பட்டுள்ளது. இலிங்கத்தின் மீது செதுக்கப்படும் சந்திர சேகரமூர்த்தியின் கால்கள் தெரியாதபடி ( முழங்கால் கீழ்ப்பகுதி ) அமைத்தல் வேண்டும். இலிங்க உருவின் வலப்புறம் அதன் தலைப்பகுதிக்கு அருகில் பிரமன் அன்னத்தின் வடிவிலும் இடப்புறம் அடிப்பதியில் விஷ்ணு வராக வடிவிலும் காட்டப்பட வேண்டும்.

பிரமன், விஷ்ணு, இவ்விருவரது உருவங்களும் இலிங்கத்தின் (பாண அமைப்பு) வலது இடது புறங்களில் இலிங்க உருவத்தைப் பார்த்து அஞ்சலி செய்த வண்ணம் இருக்கவேண்டும்.

சிவனின் திருமேனி சிவப்பு நிறமாக இருக்க வேண்டும். விஷ்ணு கருநிறமாகவும் பிரமன் மஞ்சள் கலந்த பொன்னிறமாக இருக்க வேண்டும். இந்த விவரங்களுக்கு மேலும் காமிகாமகத்தில் சில விளக்கங்கள் கூறப் பட்டுள்ளன. அன்னத்தின் அளவு சிவனின் முகத்தளவே இருக்க வேண்டும். வராகம் முகத்து அளவை விட இருமடங்கு இருக்கவேண்டும். வராக வடிவ மானது பூமியைத் தோண்டுவது போல் இருக்க வேண்டும். பிரமன் விஷ்ணு இவர்கள் திருஉரு பணிவு உள்ள அழகு மிளிரச் செய்யப்பட வேண்டும். அல்லது இக்காட்சியில் இவர்கள் இருவர் உருவங்களை முற்றிலும் நீக்கிவிடலாம். அவ்விதம் நீக்கிவிட்டால் அவசியமாக அன்னம் வராகம் உருவங்கள் பொறித்தாக வேண்டும்.

**சில்பரத்தினம் :**

இந்நூலில் சிவன் சூலம் ஏந்தி இருக்க வேண்டும் என்கிறது 'காரணகமம்' சிவன் நான்கு கரங்களுடன் விளங்க வேண்டும் என்கிறது. ஒரு கரம் அபய ஹஸ்த மாகவும் இரண்டொருகை வரத முத்திரையுடனும் மூன்றும் கரம் பரசுஏந்தியும் நான்காம் கரம் மானை ஏந்தியும் திருமுடியில் சந்திர கலையும் விளங்குதல் வேண்டும்.

**காஞ்சி கைலாசநாதர் கோயில் :** *( படம் - 27 )*

**இலிங்கோத்பவர் :**

காஞ்சிபுரத்தில் உள்ள கைலாசநாதர் கோவிலில் காணப்படும் இலிங்கோத்பவர், சிற்பம் மேலே கூறப்பட்ட இலக்கணங்களில் இருந்து முற்றிலும் மாறுபட்டது. உருவம் எட்டு புஜங்களைக் கொண்ட சிவனுரின் கரங்களில் பரசு, சூலம், அட்சமாலை அபயஹஸ்தம், இடுப்பில் ஊன்றிய கரம், ஏனைய மூன்று கரங்கள் சிதிலமாகியுள்ளபடியால் ஏனைய முத்திரைகள் காணப்படவில்லை. பொதுவாக இலிங்கவடிவின் மேற்பகுதியில் ஐந்தில் ஒரு பகுதி லிங்கமாகவே உருவம் எதும் செதுக்காமல் விடப்பட வேண்டும் என்பதும், கீழ்ப்பகுதியும் அவ்வாறே விடப்பட வேண்டும் என்பதும், சிவனின் திருஉரு முழங்காலுக்குக் கீழ்காட்டப்பட வேண்டியதில்லை என்பதும் விதிமுறை அல்லவா ? இச்சிற்பத்தில் இவை மீறப்பட்டுள்ளன. இலிங்கத்தின் மேல் கீழ்ப் புறங்கள் விடப்படவில்லை. ஆனால் வடமொழி வாசகத்தில் கூறியுள்ளபடி சிவனின் திருஉரு முழங்கால் வரையே உள்ளது. கீழே உள்ள பகுதி காட்டப்பட வில்லை. சிவனின் முடியில் சந்திர கலை உள்ளது.

விஷ்ணுவின் பன்றி அவதாரம் காட்டப் பட்டுள்ளது. விஷ்ணுவுக்கு நான்கு புயங்கள் இரு கைகள் பூமியைத் தோண்டுகின்றன. மற்ற இரு கரங்கள் சங்குசக்ரம் ஏந்தியுள்ளன. ஆகமங்களில் கூறியுள்ளபடி சிற்பத் தொகுப்பின் கீழ்ப்புறமாக இவை உள்ளன. ஆனால் நூல்களில் கூறப்பட்ட



படம் - 39

ஆந்திரமாநிலம் - நால்குண்டாவட்டம் பனகல்
ஸ்ரீ சோமேஸ்வரர் ஆலயத்தில் இலிங்கோத்பவ மூர்த்தி
[அயனும் மாலும் சிவலிங்கத்தை வழிபடல்]

( நன்றி : French Indology - Pondicherry )



படம் - 40

கன்னியாகுமரி மாவட்டம் - அகஸ்தீஸ்வரம் வட்டம் சுசீந்திரம் ஸ்ரீ தாணுமாலயப் பெருமான் (திரிமூர்த்தி) ஆலயத்தில் உள்ள முழுமையான இலிங்கோத்பவர் திருமேனி

( நன்றி : French Indology - Pondicherry )

சாதாரண பன்றி உருவம் இல்லை. பிரமன் அன்ன வடிவில் இல்லை. தன் சொந்த உருவுடன் ஆகாயத்தில் பறக்கிறார். பிரமன் லிங்கத்தின் இடப்புறம் உள்ள மற்றதேவதைகளின் கால்களும் படுக்கை வாட்டத்தில் உள்ளன. பிரமனும் விஷ்ணுவும் ஒரு கரத்தினை மேலே தூக்கிய படியும் ஒருகை இடுப்பில் ஊன்றியபடியும், மற்ற கைகள் தங்களுக்குரிய ஆயுதங்களை ஏந்தியபடியும் உள்ளனர். இந்த மாடக்கோவிலின் மேல்புற முகப்பு மிருந்த வேலைப்பாடு உள்ள மசரதோரணத்தோடு உள்ளது.

**அம்பர்மாகாளம் – இலிங்கோத்பவர் :**

அம்பர் மாகாளத்தில் உள்ளது. இலிங்கோத்பவ மூர்த்தியின் தலையில் மலர்ச்சரம் காணப்படுகிறது. சிவன் நான்கு புயங்களுடையவர். ஒரு கரம் அபய ஹஸ்தமாகவும் ஒருகை இடுப்பில் ஊன்றிய படியும் உள்ளது. மற்றஇருகைகளில் ஒன்று பரசும் மற்றது மானும் விளங்குகிறது. பாணத்தின் குடைவுப்பகுதியின் விளிம்பில் ஜுவாலைகள் சுற்றிலும் காட்டப்பட்டுள்ளன. இக்குறிப்புபற்றி திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணலாம். முழங்காலுக்குக்கீழ் கணுக்கால் வரையிலான பகுதி ஆகமவிதிகளுக்கு முரணுகக் காட்டப்பட்டுள்ளது. பாதங்கள் மட்டும் லிங்கத்துள் மறைந்துள்ளன. லிங்கத்தின் வலப்புறம் லிங்கத்தின் மேல் அன்னம் உள்ளது. அதன் அலகு மிகத்தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. இடப்புறம் லிங்கவடிவுக்குக்கீழ் பன்றிஉரு உள்ளது. பாதிதேவனுகவும் பாதி மிருகமாகவும் உள்ள இவ்வுரு பூமியைத் தோண்டிக் கொண்டு உள்ளது. இதுஇடைக் காலச் சோழர்கள் காலத்தைச் சேர்ந்தது. ( கி. பி. 11 - 12 நூற்றாண்டைச் சேர்ந்தது. )

**எல்லோரா சிற்பம் :**

எல்லோராவில் உள்ள தசாவதாரக்குகையில் இம் முழுச்சிற்பமும் கலையழகுடன் விளங்குகிறது. மத்தியில் ஒளிப் பிழம்பான தூண் உள்ளது. தூணின் மத்தியில் இருந்து சிவன் வெளிப்படுகிறார். ஒருகை அபய ஹஸ்த மாகவும் மற்றொன்று இடுப்பில் ஊன்றிய படியும் உள்ளன. மற்ற கரங்களில் பரசும் மானும் உள்ளன. புராணங்களில் பிரமன் விஷ்ணு முன் சிவன் ஒரு அனல் பிழம்பாய் ஆன தூண்போல் தோன்றியதாகக் கூறப்பட்டுள்ளது. (அதர்வண வேதம் - ஸ்கம்பா) இதற்கேற்ப சிற்பி லிங்கத்தைத் தூண்வடிவில் தூணுக்கு முக்கியத்துவம் கொடுத்து அமைத்து உள்ளார். தூணின் இரு புறமும் தீயின் நாக்கு சுடர்விடும் வண்ணம் காட்டப்பட்டுள்ளது. நான்கு முகங்களோடு பிரமன் ஆகாயத்தில் பறந்தபடி உள்ளார். விஷ்ணு வராகமாகத் தன் கை மற்றும் மூக்கினுல் பூமியைத் தோண்டியபடி உள்ளார். வலப்புறம் பிரமனும் இடப்புறம் விஷ்ணுவும் உள்ளனர். கைகள் அஞ்சலி செய்த வண்ணம் உள்ளன. பிறகரங்களில் தத்தமக்கு உரிய சங்கு சக்கரம் கமண்டலம் ஏந்தி உள்ளனர். பயபக்தியுடன் நிற்கின்றனர். இச்சிற்பத்தில் எல்லாக் கடவுளர்களும் மிக்க கவனத்துடன் நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளனர். சிவனின் உருவம் லிங்க வடிவில் குடைந்த பகுதியிலேயே காட்டப்பட்டுள்ளது. இத்தகைய சிற்பங்கள் எல்லாவற்றின் பொது அமைதி என்பது அறியத் தக்கது.

**சிவபுரம் இலிங்கோத்பவர் :**

செங்கை மாவட்டம் சிவபுரம் தலத்தில் விளங்கும் ஆலயத்தின் மேல் கோஷ்ட மாடத்தில் இலிங்கோத்பவர் சிற்பம் மிகுந்த கலைச்செறிவுடன் கூடியதாகும். பெருமானின் திருமுடி அலங்காரம் ( ஜடாமகுடம் ) முழுவதும் தெரிவது சிறப்பாகும். ஆனால் திருவடிகள் மறைந்து காணப்படுகின்றன, திருவடியினைத் தேடி பூமியின் கீழ்ப்பகுதியினைக் கூர்மாவதாரமூர்த்தி சென்று கொண்டிருக்கின்றார், திருமுடி தரிசனத்திற்காக அன்னவடிவ ரூபத்தில் நான்முகன் வானில் மேல் நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றார். இலிங்கத்தின் (பாணம்) மேற்பகுதியில் சுற்றிய படி மாலை காணப்படுகிறது. அயனும், மாலும் தேடி அலைவதனைத் தன் உள்ளத்திலே நினைந்து அகமகிழ்ந்து, சர்வாபரணங்களுடன் மேற்கு நோக்கிக் காட்சி தருகின்றார்.

**திருவாவடுதுறை இலிங்கோத்பவர் :**

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவாவடுதுறை ஸ்ரீ கோமுத்தீஸ்வரர் ஆலயத்தின் கருப்பக்கிருக மேற்கு கோஷ்டமாடத்தில் விளங்கும் இலிங்கோத்பவர் சிற்பம் முற்காலச் சோழர்காலத்திய சிற்பமாகும்.

அனலாய் விளங்கும் பெருமானின் அடிமுடி தேடும் முயற்சியில் தங்களை ஆட்படுத்திக்கொண்ட அயனும் மாலும் வராகரூபமாகவும் அன்னரூபமாகவும் கொண்டு தேடியும் காண்கிலர். பாணத்தின் மேற்பகுதியில் பூச்சரம் சுற்றப்பட்டுள்ளது, கோஷ்ட மாடத்தின் இருபுறங்களிலும் பிரமன் மற்றும் திருமால் நின்றநிலையில் உள்ளனர்.

**“ வேளச்சேரி - தண்டீஸ்வரர் ”** (படம் – 28) :

இவ் ஆலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவமூர்த்தி திருவுருவத்திலேயே அடி முடி தேடும் நிலையிலும் அதிலேயே (பாணத்திலேயே) கூப்பிய கரங்களுடன் வலப்பக்கத்தில் பிரமனும் இடப்பக்கத்தில் திருமாலும் உள்ளனர். பாணத்தின் நடைவுப்பகுதி சற்று வித்தியாசமாகவும் சிவனாரின் திருமுடி முழுவதும் காட்டப்பெற்று திருவடிகள் மறைத்துக் காட்டப்பட்டுள்ளன. மேலும் பின் கரங்களில் வழக்கத்திற்குமாறாக ஆயுதங்கள் மாறியும் உள்ளன. பின் இடக்கரத்தில் மழுவும், பின் வலக்கரத்தில் மானும் அமைந்திருப்பதைக் காணலாம்.

**புஞ்சை – நல்துணை ஈஸ்வரன்** (படம் – 29)

ஆலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவமூர்த்தியின் *(பாணப்பகுதியின்)* மேலே உருட்டாக அமைந்த மாலை விளங்குகிறது. நான்கு முகங்களையுடைய பிரமனின் வடிவம் நுண்ணிய வேலைப்பாட்டுடன் காணப்படுகிறது. பூமியைப் பிளந்து செல்லும் பாவனையுடன் இருகரங்களையுடைய வராகமும் காணப்படுகிறது. ஜடாமகுடத்துடனும், சர்வாபரணங்களுடனும், மான், மழு, பிறைச் சந்திரன் விளங்க, கீழ்நோக்கிய பார்வையுடனும் சிவனார் நின்ற கோலத்தில் காட்சிதருகின்றார். இவரது முழங்கால்கள் பாதிபிலிருந்து (திருவடி) மறைக்கப்

பட்டுள்ளன. ஒ மாடத்தின் மேலே நுண்ணிய வேலைப் பாடுகளுடன் அமைந்த தோரண வாயிலுடன் அமைந்த ரிஷபாந்திகர் சிற்பம் சிறப்புடையதாக விளங்குகின்றது.

இலிங்கோத்பவ மூர்த்தியின் வலக் கரத்தின் ( அபயம் ) விரல்கள் பின்னமாயுள்ளன.

**'' கோனேரிராஜபுரம் - ஸ்ரீ உமாமகேசுவரர் ஆலயம் ''** (திருநல்லம்)

இவ்வாலயத்தில் சிறிய வடிவினதாக விளங்கும் இலிங்கோத்பவ மூர்த்தி சிற்பத்தின் இருமருங்கிலும் நின்ற நிலையில் ஊரு, அபய கரங்களுடன் நான் முகனும், திருமாலும் உள்ளனர். இத்திருக்கோயில் - செம்பியன் மாதேவியார் தம் காலத்தில் செய்த திருப்பணியாகும்.

**'' திருத்தென்குரங்காடுதுறை ( ஆடுதுறை) ஸ்ரீ ஆபத்சகாயேஸ்வரர் ''**

இவ் ஆலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவ மூர்த்தி சிற்பம் கம்பீரமாக உள்ளது. நீள்வட்ட குடைவுப் பகுதியில் சிவபெருமான் விளங்குகின்றார். இக்கோயிலும் செம்பியன் மாதேவியார் செய்த திருப்பணியாகும்.

**'' கருந்தட்டாங்குடி - ஸ்ரீ வசிஷ்டேஸ்வரர் ( படம் - 30 ) ஆலயம் :**

இவ்வாலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவ மூர்த்தி சிற்பத்தின் மாடத்தில் திருமாலும், பிரமனும், இடுப்பில் கைவைத்துக் கொண்டு ஒருவரை ஒருவர் நேருக்கு நேரே பார்த்த வண்ணமாகவும் தத்தமது பராக்கிரமத்தைக் காட்டப் போவது போன்ற பாவனையிலும் தோற்றமளிக்கின்றனர். மேலே பூச்சரமும் ( பாணத்தின் மேல் ) கீழே வராகமும் உள்ளன. இதைப் போன்ற சிற்பத்தைக் காண்பது அரிதேயாகும்.

**7. ஆனுங்கூர் :**

திருவாவடுதுறைக்குக் கிழக்கே மூன்று கி. மீ. தொலைவில் உள்ள ஆனுங்கூரில உள்ள ஸ்ரீ அகஸ்தீஸ்வரர் கோயிலின் தேவ கோஷ்டத்தின் மேற்கு பாகத்தில் உள்ள இலிங்கோத்பவர் சிற்பத்தின் மேற்பகுதியில் அன்ன வாகனத்தில் பிரமனும், கீழ்ப்பகுதியில் வராகமூர்த்தியும் உள்ளனர். மேலும் மாடத்தின் இருமருங்கிலும் நின்ற நிலையில் பிரமனும், திருமாலும் ஊரு, அபய கரங்களுடன் தனித்து விளங்குகின்றனர். சிவபெருமானின் ஜடாமகுடம் முழுவதும் தெரியும் நிலையிலும், முழங்காலின் முட்டிப் பகுதியிலிருந்து மறைக் கப்பட்ட நிலையிலும் அமைந்துள்ள கோலத்தைக் காணலாம்.

**8. திருக்கருகாவூர் :**

திருக்கருகாவூர் – வெள்ளடையீஸ்வரம் எனப் போற்றப்படும் ( தஞ்சை மாவட்டம் ) ஆலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவ மூர்த்தியின் மேற்பகுதியில் அன்ன வாகனமின்றி பிரமனும், திருவடியின் கீழ்ப்பகுதியில் வராகமும், காணப்படுகின்றனர். மான், மழு, ஊறு, அபய கரங்களுடன் பெருமானானவர் தேஜோமயமாக விளங்குகின்றார்.

**9. திருவேள்விக்குடி :**

மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள குத்தாலம் இரயில் நிலையத்திலிருந்து 5 கி. மீ. தொலைவில் இருக்கும் ஸ்ரீ கலியாண சுந்தரேஸ்வரர் ஆலயத்தின் மேற்கு கோஷ்டத்தில் விளங்கும் இலிங்கோத்பவ மூர்த்தியின் இருபக்க மாடங்களில் ரிஷபத்துடன் கூடிய அர்த்த நாரீஸ்வரர் சிற்பமும், ஹரிஹரர் (திருமால், சிவன்) சிற்பங்களும் காணப்படுகின்றன.

**10. திருமீயச்சூர் :**

ஸ்ரீ முயற்சிநாதேஸ்வரர் ஆலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவர் சிற்பத்தின் மேற்பகுதியில் அன்ன வாகனம் மட்டும் மிகத் தெளிவாகப் பறந்து செல்லும் நிலையிலும், கீழ்ப்பகுதியில் வராகம் பூமியினைப் பிளந்து செல்லும் நிலையிலும் காணப்படுகின்றன. பாணத்தின் மேற்பகுதியில் வட்ட வடிவில் அமைந்த சூரியக்கதிர்கள் போன்ற மலர்களும் அதில் முத்து மாலைகள் கீழ் நோக்கித் தொங்கவிடப்பட்ட நிலையிலும் உள்ளன.

**11. கார்க்கோடகேஸ்வரர் (படம் - 31) :**

காமரசவல்லி - கார்க்கோடகேஸ்வரம் ஆலயத்தில் விளங்கும் சிற்பங்கள் யாவும் முற்காலச் சோழர்களின் கலைப்பொக்கிஷமாக விளங்குகின்றன. குறிப்பாக இலிங்கோத்பவர், பிரமன், துர்க்கை, கங்காளர் சிற்பங்கள் சிறப்புடையனவாகும்.

இலிங்கோத்பவ மூர்த்தியினைச் சுற்றிலும் (குடைவுப்பதியின் விளிம்பில்) தீச்சுடர்கள் காணப்படுகின்றன. இத்தகைய தீச்சுடர்களைப் பெரும்பாலான சிற்பங்களில் காண்பது அரிதாகும். பெருமானின் சிரசின் மேல் அன்னமும், தாழம்பூவும் விளங்குகின்றன. திருவடிப்பகுதியில் கீழ்நோக்கிய வராக மூர்த்தியும் காணப்படுகின்றார். ஜோதி வடிவாக விளங்கும் பெருமானைப் புராணங்கள் கூறியவாறு இத்திருமேனி அமைந்துள்ளது எனலாம்.

**12. கீழூர் விரட்டனேஸ்வரர் ஆலயத்தில்: ( படம் - 32 )**

விரட்டானேஸ்வரர் ஆலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவமூர்த்தியின் ஜடாமகுடம் முழுவதும் தெளிவாகத்தெரிகின்றது. மேலும் பெருமான் பின் வலக்கரத்தில் பரசும் திருமுகத்தைக்காணும் மானும் சர்வாபரணங்களும் விளங்கத் திருவடிகளைக் காட்டாது காட்சிதருகின்றார். இப்பெருமானின் வலப் பக்கத்தின் மேலே அன்ன வாகனத்தின் மேல் இருபக்கத்திலும் தாதுகாலை தொங்கவிட்டபடி பிரமன் திருமுடிகாண மேல் நோக்கி, விரைந்து செல்கின்றார். கீழ்ப்பகுதியில் வராகப் பெருமான் பூமியினைப் பிளந்து திருவடிகாண விழைகின்றார். இந்தச் சிற்பத்தில் மட்டும்தான் இவ்விருவரும் பெருமானின் வலப்பக்கத்தில் உள்ளனர்.

திருவாமாத்தூர் பஞ்சகதீஸ்வரர் ஆலயத்தில் விளங்கும் இலிங்கோத்பவ மூர்த்தியின் சிற்பம் இதைப் போன்று அமைந்துள்ளது.

**13. புள்ளமங்கை பிரமபுரீஸ்வரர் ஆலயம் : (படம் – 33)**

திரு ஆலந்துறை மகாதேவர் ஆலயத்திலும், பிரம்மபுரீஸ்வரர் ஆலயத்திலும் உள்ள இலிங்கோத்பவ மூர்த்தியின் சிற்பங்களின் சிறப்பம்சங்கள் ஒன்றாகவே அமைந்துள்ளன. புள்ளமங்கை ஆலயத்தில் விளங்கும் சிற்பத்தில் தேவர்கள் கீழ்ப்பகுதியில் காணப்படுகின்றனர். இவை காணவேண்டிய சிற்பங்களாகும். இலிங்கோத்பவரின் இருமருங்கிலும் வரதகரங்களாக பிரமனும், திருமாலும் காட்சியளிக்கின்றனர்.

**14. திருவாலிஸ்வரம் ( படம் – 34 )**

திருவாலீஸ்வரர் ஆலயத்தின் ஸ்ரீ விமானம் துவைதள விமானமாகும். இவ்விமானத்தின் முதல் அடுக்கின் மேற்கு நோக்கிய தெற்குப் பாகத்தில் பிரமனும், திருமாலும் அஞ்சலி ஹஸ்தங்களுடன் தனித்து விளங்க, சிவனுர் சோதிவடிவமாகக் காட்சிதருகின்ருர். இம்மூர்த்திகளைத் தாங்கும் பீடமாக பத்மங்கள் தனித்தே விளங்குகின்றன, ஒரேகல்லினுல் அமையப்பெற்ற மூன்று திருமேனிகளையும் இங்குக் காண்கின்ருேம். மேலே யோகநரசிம்மரும், வலப்பக்கத்தில் தட்சிணுமூர்த்தியும், இடப்பக்கத்தில் காலகாலரும் காட்சிதருகின்றனர்.

குறிப்பாக இலிங்கோத்பவர் திருமேனியின் திருவடிப் பகுதியில் தனித்து விளங்கும்படியான வராக மூர்த்தி காணப்படுகின்ருர். இவ்வுருவம் பத்மபீடத்திற்குக் கீழே தனித்துக் காண்பது சிறப்பாகும்.

**பிற்காலச் சோழர் தஞ்சைப் பிரகதீஸ்வரர் ஆலயம் :**

பிற்கால சோழர்களின் தலைசிறந்த மன்னனுகத் திகழ்ந்த இராஜராஜ சோழன் எடுப்பித்த ஆலயம் உலகத்தின் கலைக்கோயிலாக அமைந்துள்ளது எனலாம். இத்திருக்கோயிலின் விமானத்தை ஸ்ரீமேருவாகவே கருதுவோரும் உண்டு. இங்கே ஈடுஇணையில்லாச் சிற்பங்களுக்கும் கருக்கு வகைகளுக்கும் பஞ்சமில்லை எனலாம். ஒரு இடம்கூட விடாமல் மிகநுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த திருக்கோயில் இதுவே ஆகும். விமானம் சிகரம் போன்றது. அவ்வகையில் ஏனைய ஆலயங்களின் விமானத்தை விட இதுமிக உயரமானது.

பொதுவாக விமானம், சிற்பங்கள், இலிங்கம், ( மூலத்தானம் ), அம்பாள், திருமாளிகைப்பத்தி, நந்தி, சண்டேசுவரர் ஆலயம், இராஜ கோபுரம் என்ற வரிசையில் காணும் போது மற்றய ஆலயங்களைக் காட்டிலும் பெரியனவாகவும், கம்பீரமாகவும், அழகின் செறிவாகவும் இத்திருக்கோயில் விளங்குகின்றது.

**இரு இலிங்கோத்பவர் ( படம் – 35 )**

**( மேற்கில் )** இத்திருக்கோயிலின் மேற்கு கோஷ்டத்தின் தென்பால் விளங்கும் இலிங்கோத்பவ மூர்த்தியின் சிற்பம் ஏனைய ஆலயங்களைப்

போன்று உள்ளது. பிரமன் அன்ன வாகனமின்றி தனியே பறந்து செல்கின்றார். கீழே ஏரகமூர்த்தி உள்ளார். பக்கச் சுவரில் புடைப்புச் சிற்பங்களாக ஒன்றரை அடி உயரத்தில் கூப்பிய கரங்களுடன் நான்முகனும், திருமாலும் உள்ளனர்.

**கிழக்குநோக்கிய இலிங்கபுராணத்தேவர் ( இலிங்கோத்பவர் ) ( படம் - 36 )**

o இத்திருக்கோயிலின் தென்புறக் கோஷ்டத்திலுள்ள இச்சிற்பமும், இதனுடன் இணைந்த சுவர்ச்சிற்பங்களும் வேறு எங்கும் காணமுடியாத அரிய சிற்பங்களாகும். இத்திருமேனியானது கிழக்கு நோக்கியபடி உள்ளது. ( மூலத் தானத்திற்குச் சென்று வழிபட்ட பிறகு தெற்குப்படி வழியாக இறங்கி வரும் இடத்தின் வலப்புற மாடத்தில் இத்திருமேனியினைக் காணலாம் ) பெரிய இலிங்க உருவத்தின் உள்ளே ( குடைவாக உள்ள பகுதிகள் ) மான் மழு ஏந்திய சிவபெருமானின் முழு உருவமும் உள்ளது. பொதுவாக இதனை ஒத்த இலிங்கோத்பவர் சிற்பங்களில் இலிங்க உருவத்திலுள்ள சிவபெருமானின் பாதங்களும், தலை உச்சியும் காட்டப் பெறாமல் இருக்கும். ஆனால் இச்சிற்பம் இலிங்கோத்பவ மூர்த்தியில் இருந்து வேறுபட்டதாகும்.

சிவபெருமானின் திருவடிகளுக்குக் கீழே வலப்பக்கத்தில் சங்கும், சக்கரமும் ஏந்திய திருமால் கால்களை மண்டியிட்ட வண்ணம் இருகரங்கள் கூப்பியபடி ( அஞ்சலிஹஸ்தமாக ) சிவபெருமானை வணங்கும் திருமேனியும் உள்ளது. கோஷ்டத்திற்கு வெளியே முனிவர்களும் அடியார்களும் கை கூப்பி வணங்கும் சிற்பங்களும் உள்ளன. இவற்றோடு குள்ள பூதமொன்று சக்கரம் ஒன்றனை இருகரங்களிலும் ஏந்தி நிற்கிறது. தத்துவார்த்தமாக நோக்குகின்ற போது திருமுடியினைத் தரிசித்தலைவிட திருவடியினை நாடிச் சென்றால் நிச்சயம் அவன் அருள் கிட்டும் என்ற உண்மையின் காரணமாக இவ்வுரு அமைந் துள்ளது. சிற்ப நூல்களில் இவ்வமைப்பு கூறப்படவில்லை. ஷை ஆலயக் கல்வெட்டில் இலிங்கபுராணதேவர் எனப் பொறிக்கப்பட்டுள்ளது.

## 16. கங்கைகொண்ட சோழபுரம்:

இராஜராஜசோழனின் மகனான இராஜேந்திர சோழன் எடுப்பித்த கற்றளியே கங்கைகொண்ட சோழபுரம் கோயிலாகும். இங்கே விளங்குவது பிரகதீஸ்வரர் ஆலயம். இது தஞ்சைப் பிரகதீஸ்வரர் ஆலய அமைப்பினை ஒத்ததாகும். இத் திருக்கோயிலில் எண்ணற்ற சிற்பங்கள் புதுப்பொலிவுடன் விளங்கினாலும் மக்க ளின் இதயத்தையும் கண்ணையும் கவர்வனவாக, அமைந்துள்ள சண்டேசானுக் கிரகமூர்த்தி, சரசுவதி, கங்காதரர், சண்டேசர் ஆகிய சிற்பங்கள் மிகமிகச் சிறப் புடையனவாகும்.

---

o "தஞ்சாவூர்" - ஆதீன வெளியீடு எண் : - 427 எட்டாவது உலகத்தமிழ் மாநாட்டு மலர் - பக்கம் 214.

இத்திருக்கோயிலின் மேற்குக் கோஷ்டத்தின் மையப் பகுதியின் கீழ்ப் பகுதியில உள்ள மாடத்தில் ஸ்ரீதேவி, பூதேவி உடனுறை திருமால் சிற்பத்தின் மேல் அடுக்கு (முதல் தளம்) மாடத்தில் இலிங்கோத்பவமூர்த்தி சிற்பம் உள்ளது. பாணத்திலேயே பெருமானின் திருக்கோலம் சிறப்பாக அமைந்துள்ளது.

**திருக்கடவூர் - இலிங்கோத்பவர் : (படம் - 37)**

திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேஸ்வரர் ஆலயத்தின் மூலத்தானத்தின் மேற்குக் கோஷ்ட மாடத்தில் இலிங்கோத்பவர் திருமேனியினைக் காணலாம். எல்லாச் சிவாலயங்களிலும் காணப்படும் திருமேனிபோலக் காட்சி அளித்தாலும் இச்சிற்பத்தில் சிறு மாறுதல்கள் காணப்படுகின்றன.

சிவனாரின் திருமுடி முழுவதையும் இங்குக் காணலாம். இடுப்புப் பக்க வாட்டு வஸ்திரமானது இருமருங்கிலும் விரிந்து காணப்படுகிறது. பெருமானைச் சுற்றிலும் தீச்சுடர்கள் பிரகாசமாக ஒளிவிடுகின்றன. பாணத்தின் மேற்பகுதியில் பூச்சரம் சுற்றப்பட்டுள்ளது. பூக்கள்யாவும் சூரியன் போன்ற அமைப்பில் ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கினாற்போல உள்ளன. மேலே புருஷரூபத்தில் பிரமனார் திருமுடியினைத் தரிசிக்கச் சென்றுகொண்டிருப்பதும், கீழே திருவடிகளைத் தேடித் திருமால் பூமியினைப் பிளந்து செல்லுவதும் வேறு எங்கும் காணப்படாத அமைப்பாகும்.

இலிங்கோத்பவர் கோஷ்ட மாடத்தின் இருமருங்கிலும் நான்முகனும் திருமாலும் நின்ற நிலையில் சதுர்புஜங்களுடன் கூப்பித் தொழுதவாறு உள்ளனர். இத்திருமேனியின் (மாடத்தின் கீழே) இருமருங்கிலும் மிகச் சிறிய வடிவில் பஞ்சவிம்சதியில் காணும் சிவனாரின் இரு உருவங்களும் உள்ளன. இலிங்கோத்பவர் திருமேனி ஜடாமகுடம், மான், மழு, அபயம், ஊரு கரங்களுடன் சர்வாபரணங்களையும் அணிந்து நிமிர்ந்த பார்வையுடன் குமின்சிரிப்பினைக் காட்டுவதாகவும் இருவரும் காண முயலும் முயற்சியினை உலகத்துக்குக் காட்டுவதாகவும் அமைந்துள்ள சிற்ப அமைப்பு காணத்தக்கதாகும்.

**குன்றக்குடி - குகைக்கோயில் மலைக்கொழுந்தீஸ்வரர் : (படம்-38)**

இராமநாதபுரம் மாவட்டம், திருப்பத்தூர் வட்டம் - குன்றக்குடி மலைக்கொழுந்தீஸ்வரர் குகைக்கோயிலில் குடைவரைச் சிற்பமாக இலிங்கோத்பவர் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பங்களின்மேல் வண்ணக் கலவைகள் பூசப்பட்டுள்ளன. அடிமுடிதேடும் காட்சியினைச் செவ்வக வடிவாக அமைத்துள்ளனர் நம் முன்னோர்கள்.

பாணத்திலிருந்து வெளிப்படுவதாக அமைந்த சிவனாரின் சிற்பம் கம்பீரமாக உள்ளது. பெருமானின் கேசங்கள் யாவும் ஜடாபாரமாகவும் காதுகளில் குழைகளும், ஆபரணங்களும், பின்கரங்களில் மானும் மழுவும் காணப்படுகின்றன. பின் இருகரங்களைச்சுற்றி மேற்பகுதியில் பாணத்தின் வடிவினைக் குடைவாகக் காட்டினாற் போன்ற அமைப்பு உள்ளது. வலக்கரம் பெரும்பாலும் அபயமாகத்தான் காணப்படும். ஆனால் இங்கு வரத கரமாக இருப்பதனைக் காண்கிறோம்.

இடக்கரம் தொடையில் பதியவைத்தவாறு காணப்படுகிறது. சிவனாரின் வலப்பக்கம் சமபாத நிலையில் பின் இருகரங்களில் அக்கமாலை கமண்டலம் ஆகியவற்றை ஏந்தியபடியும் முன் இருகரங்களில் அஞ்சலி முத்திரையுடன் பெருமானைச் சேவித்தபடியும் பிரமன் காணப்படுகிறார்.

சிவனாரின் இடப்பக்கம் கிரீடமகுடம், சங்கு, சக்கரம், பீதாம்பரம், கங்கணங்கள் அணிந்து முன் இருகரங்களால் பெருமானைத் தொழுதபடி நின்ற நிலையில் திருமால் விளங்குகின்றார்.

திருமுடியில் காணும் உத்வேகத்துடன் பிரமன் அன்ன வடிவில் வானை நோக்கிச் செல்லும் காட்சி தனியாக மேலே காட்டப்பட்டுள்ளது. கீழ்ப் பகுதியில் வராக அவதாரம் காட்டப்படவில்லை. இதுவும் காண வேண்டிய அரிய இலிங்கோத்பவர் குடைவரைச் சிற்பமாகும்.

**பனகல் - சோதியாய் நின்ற இலிங்க சொரூபர் : ( படம் - 39 )**

இது ஆந்திரமாநிலத்தில் நால்குண்டா மாவட்டத்தில் உள்ள பனகல் என்னும் ஊரில் உள்ள ஸ்ரீ சோமேஸ்வரர் திருக்கோயிலில் காணும் இலிங்கோத்பவர் சிற்பம். இந்தச் சிற்பத்தை நோக்குகின்ற போது திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த இலிங்கபுராணத் திருக்குறுந்தொகைப் பாடலுக்கு ஏற்ப பொருத்தமாகவும் மிகச் சிறப்பாகவும் அமைந்த சிற்பமாக உள்ளது எனலாம்.

சோதிப்பிழம்பாகச் சிவபெருமான் விண்ணிற்கும் மண்ணுணிற்குமாய் தோன்றிய போது அடியும் முடியும் தேடி நான்முகனும் திருமாலும் அலைந்த தருணத்தில் இலிங்க வடிவமாய்த் தோன்றினன் என்பதைத் திருநாவுக்கரசு சுவாமிகள்,

> " செங்கணானும் பிரமனும் தம்முள்ளே
> எங்கும் தேடித் திரிந்தவர் காண்கிலார்
> இங்குற்றேன் என்று இலிங்கத்தே தோன்றினான்
> பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே "

எனக் குறிப்பிட்டுள்ளார்.

அவ்வகையில் இச்சிற்பமானது பிடத்தின் மேல் ருத்ரபீடம் உள்ள பாணம் சிறப்பாக உள்ளது (பாணத்தில் உள்ள குறியின் பலவகைகளை முன்னர் காண்க) பிரம்மபாகம் பூமிக்கடியில் மறைவாக உள்ளது. பிரமனும் திருமாலும் தத்தம் முத்திரைகளுடன் அஞ்சலி ஹஸ்தமாக விளங்குகின்றனர். காலடியில் அவர் ஏற்ற வராகவதாரம் முழுவதுமான மிருக உருவத்துடன் தேடிச் செல்கின்ற நிலையில் அமைந்துள்ளது.

இச்சிற்பத்தில் விளங்கும் பாணமானது நீண்டும் உயர்ந்தும் நடுவில் நீளக் கோடும் பக்கவாட்டுக் கோடுகளும் அமைந்து சிற்ப லட்சணத்துடன்



படம் - 41

ஜ்வாலா ஸ்தம்ப இலிங்கோத்பவர் ஆலம்பூர்
ஸ்ரீசுவர்க்கபிரம்மா ஆலயம் ஆந்திர மாநிலம்.

( நன்றி : French Indology - Pondicherry )



படம் - 42

ஸ்ரீ கம்பகரேஸ்வரர் திருக்கோயிலில் விளங்கும் சுடர் களுடன் கூடிய இலிங்கோத்பவர் திருமேனி. திருபுவனம், தஞ்சாவூர்மாவட்டம்-மூன்றும் குலோத்துங்கன் திருப்பணி

[ நன்றி : French Indology - Pondicherry ]

விளங்குகிறது. பாணத்தின் உச்சியில் மலர் இருப்பது போன்றதொரு அமைப்பு காணப்படுகிறது. இச்சிற்பத்தைச் சுற்றி தடித்த நிலையில் ( சுரும்பு வளைந்த நிலை ) திருவாட்சி போன்றதொரு அமைப்பும் காணப்படுகிறது.

**சுசீந்திரம் - இலிங்கோத்பவர் : (படம் - 40)**

சுசிந்திரம் தலத்தில்தான் மும்மூர்த்திகளையும் ஒன்றாய்க் காணும் பேறு யாவர்க்கும் கிட்டும். நாகர்கோயிலிலிருந்து கன்னியாகுமரிக்குப் போகும் வழியில் பழையாற்றங் கரையில் இருக்கும் இவ்வூருக்குப் புகழும் பெருமையும் புனிதமும் தருவது இவ்வூரில் அமைந்துள்ள தாணுமாலய சுவாமி கோயில ஆகும்.

இக்கோயிலின் கோபுரமும் பிரகாரங்களும், பிரகாரங்களில் காணும் பாவை விளக்குகளும் அழகு ததும்பும் கலைக்கூடமாக இன்றும் விளங்குகின்றன. தூண்களில் பாவை விளக்குகளை நூற்றுக் கணக்கில் காண்பது மிகவும் அரிய காட்சியாகும்.

இத்திருக்கோயிலில் எத்தனையோ சிற்பங்கள் எழிலோடு காட்சியளிக்கின்றன. அதில் இலிங்கோத்பவர் சிற்பமும் ஒன்றாகும். இலிங்க பாணத்திலிருந்து வெளிப்பட்டு நிற்பது போன்ற அமைப்பில் சிவபெருமான் விண்ணிற்கும் மண்ணிற்கும் சமபாத நிலையில் மான் மழு, அபயம், வரதம் கொண்டு சந்திர சேகர ரூபமாய்க் காட்சி தருகின்றார்.

சந்திரசேகரர் திருமேனி போன்றே இலிங்கோத்பவர் திருமேனியும் அமைத்தல் வேண்டும் எனச் சிற்பநூல்கள் கூறுகின்றன. அந்த வகையில் இது சிறந்து விளங்குகிறது. பெருமானின் வலப்பால் சங்கு, சக்கரம், வரதம், கதஹஸ்தம், கிரீடம், யக்ஞோபவிதம் தரித்து சர்வாபரணங்களுடன் திருமால் நின்ற நிலையில் விளங்குகின்றார். இவருக்குப் பின்னால் வராக அவதாரம் நிற்பதையும் காணலாம்.

பெருமானின் இடப்பக்கம் நான்கு சிரசுகளுடனும் அக்கமாலை, கெண்டி, அஞ்சலி ஹஸ்தங்களுடன் சிவனாரை சேவித்தபடி பிரமன் காட்சிதருகிறார். பிரமனின் தலைக்குமேல் அன்னம் திருமுடிதரிசனம் கிடைக்காதா என்ற எண்ணத்தில் வானில் பறந்து செல்கிறது. இம்மூன்று உருவங்களும் ஒரே கல்லினால் செய்யப்பட்டனவாகும்.

**சுசீந்திரமும் துறைசை ஆதீனமும் :**

சுசிந்திரம் ஆலயத் திருக்குளத்தின் வடகரையில் தெற்கு நோக்கியபடி ஈசானமடம் என்று போற்றப்படும் திருவாவடுதுறை ஆதீனக்கிளை மடம் உள்ளது. இத்திருமடத்தில் ஸ்ரீ நமசிவாய மூர்த்தி திருக்கோயில் கொண்டு அருள்பாலிக்கின்றார். திருவாவடுதுறைத் தலைமை மடத்தில் விளங்கும் ஸ்ரீ நமசிவாயமூர்த்தி குருமூர்த்தம் போலவே இங்குள்ள கட்டுமானப் பணியும்

அமைந்துள்ளது எனலாம். தமிழில் முதன் முதலில் பாஷ்யம் அருளிச் செய்த ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் இத்திருமடத்தில் சைவ சந்நியாசமும் தீட்சையும் பெற்றுத் திருவாவடுதுறை மடத்திற்கு மேலும் பெருமை சேர்த்தார்கள். பலநாயக்க மன்னர்களின் சிற்பங்கள் உள்ள திருமடமாகும். மேலும் இவ்வூரில் வாழும் மக்கள் பலர் இதனை நாயக்கர் மடம் என்று கூறுவதும் உண்டு.

**சுசீந்திரம் ஆலய இராஜகோபுர வாயிலில் ஆதீனக் குரு மூர்த்திகளின் சிற்பம் :** ( 4-வது பட்டம் )

சுசீந்திரம் ஸ்ரீ தாணுமாலயப் பெருமான் திருக்கோயிலின் கிழக்கு இராஜகோபுர நுழைவாயிலின் வலப்பக்கத் தூணின் புடைப்புச் சிற்பமாக **இவ்வாதீனத்தின் 4-வது பட்டத்தில் விளங்கியருளிய ஸ்ரீ உருத்திரகோடி தேசிக மூர்த்திகளின் திருவுருவம் 130** செ. மீ. உயரத்தில இவ்வாதீன சம்பிரதாய முறைப்படி அமைந்துள்ளது. சிரசடை, உருத்திராக்கம், ஜபமாலை, ஆறுகட்டி முதலானவைகளை இம்மூர்த்திகளின் திருவுருவத்தில் காணலாம். ஞான தேசிக மூர்த்திகளின் தலைக்குமேல் கயிலாய மலையில் உமையாம்பிகை உடனுறை ஸ்ரீ பரமேஸ்வரன் சுகாசனத்தில் அருங்காட்சி வழங்கும் 1 அடி உயரமுள்ள ஓர் புடைப்புச் சிற்பமும் காணப்படுகிறது.

இந்தச் சிற்பத்தின் வாயிலாக, திருக்கயிலாய பரம்பரையாகிய திருவாவடுதுறை ஆதீனம் வழிவழியாக வருகின்றது என்பதனையும் அவ்வழியில் வந்த மகா சந்நிதானம் திருவுருவம் இது எனவும் நாம் அறியச் சான்றாக அமைந்துள்ளது. தேசிக மூர்த்திகளின் எதிரே உள்ள தூணில் கூப்பிய கரங்களுடன் **''தெக்குமான் மடத்துப் போற்றியான நீலகண்ட புருஷோத்தமர் ''** சிலையும் உள்ளது. இவ்விருவரும் இவ்வாலய ஸ்ரீ பலிபுர அமைப்புக்காக நிதி திரட்டி ( தெற்குப் பெரிய பிரகாரம் மற்றும் மேற்குப் பிரகாரம் ) திருப்பணியை முடித்தவர்கள் என்பதால் இவர்களது உருவத்தை அமைத்தார்கள். மேலும் இதன் விபரத்தை **A Monagraph - '' The Sucindram Temple '' Page - 57 Description of the Temple - Natakasala** என்ற பகுதியில் காண்க.

**ஆலம்பூர் - ஜ்வாலா லிங்கோத்பவர் :** (படம் - 41)

ஆந்திர மாநிலத்தில் – மாகபூப் நகர் ***( Mahaboob Nagar )*** ஆலம்பூர் **(Alampur)** வட்டத்தில் ஆலம்பூர் என்னும் இடத்தில் சுவர்க்க பிரம்மா ***( Swarga Brahma )*** எனும் ஆலயத்தில் காணும் ஜ்வாலா இலிங்கோத்பவர் சிற்பமானது. கலையின் வெளிப்பாட்டையும் புராணத்தில் கூறியபடி அடிமுடி தேடலின் போது சென்ற யுகங்களையும் காட்டும் காலக்கண்ணாடி போல நம் முன்னே காட்சியளிக்கின்றது.

சிவபெருமான் நான்கு கரங்களுடன் சமபாதக ஸ்தானத்துடன் விளங்குகின்றார். பின் இருகரங்களில் முறையே மழுவும் சூலமும் விளங்குகின்றன. முன் வலக்கரம் அபயமாகவும் முன் இடக்கரம் இடுப்பில் பதிந்ததாகவும் உள்ளன.

திருமேனியில் கண்டாபரணமும், தடித்து அமைந்த யக்ஞோபவீதமும் விளங்க ஜடாமகுடம் தரித்தவராய் ஜோதி ஸ்வரூபமாக பாணத்தின் மையப் பகுதியில் ( நீள்வட்ட வடிவில் குடைவுப் பகுதியில் ) விளங்குகின்றார். பாணத்தைச் சுற்றி ஜ்வாலைகள் ( தீப்பிழம்பு ) வீசுகின்ற முறையில் இலிங்கோத்பவர் சிற்பத்தை சிற்பி சித்தரித்துள்ளார்.

**பிரம்மாக்களின் உருவங்கள் :**

சிவபெருமானின் வலப்பக்கம் திருமுடி கண்டு தரிசனம் செய்யப் பல யுகங்களில் உண்டான பிரம்மாக்கள், தத்தமது நிலையில் முயற்சித்தும், முயற்சி பலிக்காது தம் தவற்றை உணர்ந்தவாறு பறக்கின்ற நிலையில் காணும் ஒரு பிரமனின் உருவமும், அதன் கீழ் கூப்பிய கரங்களோடு நின்ற நிலையில் காணும் மற்றொரு பிரமனும் உத்குடிகாசனமாக அமர்ந்த நிலையில் கீழே காணும் மற்றொரு பிரமனின் திருவுருவமும் அழகாகவும் எடுப்பாகவும் காணப்படுகின்றன.

**விஷ்ணு உருவங்கள் :**

இடப்பக்கத்தில் கீழே திருமுடியைத் தரிசிப்பதைவிடத் திருவடி பற்றினால் திருவருள் கிடைக்கும் என்று நினைந்து, வராக அவதாரப் பெருமான் ஜ்வாலா ஸ்தம்பத்தின் அடிப்பகுதியினைக் காண பூமியைப் பிளந்தவாறு (திருவடியைத் தேடி) கீழ் நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றார். இதற்குமேல் கிரீட மகுடம், சங்கு, சக்கரம் கொண்டு நளினமாக அபயாஞ்சலியாகத் திருமுகம் சாய்த்துத் தமது தவற்றை உணர்கின்ற நிலையில் திருமாலின் தோற்ற வெளிப்பாடு காட்டப்பட்டுள்ளது.

இவருக்குமேலே ஓர் உருவம் இசைக்கருவி ஒன்றினை ஏந்திய படி காட்டப்பட்டுள்ளது. இத்திருவுருவத்தின் விளக்கத்தை யூகிக்க முடியவில்லை. இருப்பினும் இந்த ஜ்வாலா இலிங்கோத்பவர் சிற்பத்தைச்சுற்றி ஆறு சிற்பங்கள் உள்ளன. இவையாவும் ஒரே கல்லினால் அமைந்த புடைப்புச் சிற்பங்களாகச் செய்து சுற்றுச் சுவரில் பதித்துள்ளனர்.

இலிங்கோத்பவர் சிற்பங்களிலே இது மிகவும் சிறப்புடைய சிற்பமாகும். இவ்வமைப்பு தமிழ் நாட்டிலுள்ள திருக்கோயில்களில் எங்கும் காணப்படவில்லை.

**திருபுவனம் இலிங்கோத்பவர் :** *( படம் – 42 )*

தஞ்சைமாவட்டம், திருவிடைமருதூர் வட்டம், திருபுவனம் தலத்தில் உள்ளதிருக்கோயில் ஸ்ரீ கம்பகரேஸ்வரர் ஆலயமாகும். இவ்வாலயத்தை மூன்றும் குலோத்துங்க சோழன் கட்டி அமைத்தான். இந்த ஆலயப் பெருமானை நடுக்கம் தீர்த்த பெருமான் எனவும் கூறுவர். தஞ்சைப் பெரிய கோயிலினைப் போன்ற அமைப்பினை உடையது இவ்வாலயம். விமனம் முதலிய பகுதிகள் யாவும் கருங்கல்லால் ஆக்கப் பெற்றவையாகும்.

இத்திருக்கோயிலில் மிகவும் சிறப்புடைய சந்நிதியாக விளங்குவது ஸ்ரீ சரபமூர்த்தி சந்நிதியாகும். திருமாலின் நரசிங்க அவதாரத்தினை அடக்கியாளும் பராக்கிரம மூர்த்தியாக சிவபெருமானின் திருவுருவம் இவ்வாலயத்தில் அமைந்துள்ளது. இதற்குரிய உற்சவமூர்த்தியும் கலையம்சத்துடன் விளங்குகின்றார்.

இக்கோயிலின் மூலத்தானத்து இறைவன் இலிங்கத் திருமேனியாகக் கிழக்கு நோக்கி அருள் பாலிக்கின்றார், இராமாயண சிற்பங்கள். பரத சிற்பங்கள், உயிர் வாழினங்களின் சிற்பங்கள். சிவபராக்கிரம சிற்பங்கள் போன்ற பலவகைச் சிற்பங்களை எங்கு நோக்கினும் இவ்வாலயத்தில் காணலாம்.

மூலத்தானத்தின் கோஷ்டப் பகுதியில் சட்டைநாதர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோத்பவர், பிரமன், துர்க்கை சிற்பங்கள் உள்ளன. இதனுள் கம்பிரமாக மேற்குக் கோஷ்ட மாடத்தில் இலிங்கோத்பவர் சிற்பம் உள்ளது. இம்மாடத்தின் இருபுறத்திலும் திருமாலும் பிரமனும் ஒரே உயரத்தில் கை கூப்பித்தொழும் நிலையில் புடைப்புச் சிற்பங்களாக உள்ளனர்.

இலிங்க பாணப்பகுதியில் சந்திர சேகர மூர்த்தமாய் சிவனார் விளங்குகின்றார். பின் கரங்களில் அமைந்த மானும் மழுவும் முன்நோக்கி அமைந்தபடியும், முன் இருகரங்கள் அபய. ஊறு முத்திரைகளோடு ஜடாமகுடம் ஆபரணங்கள் தரித்தவராய் இம்மூர்த்தம் பிர்ம்மாண்டமாய்க் காட்சியளிக்கின்றது.

பாணத்தின் மேலேயும் கீழேயும் பூச்சரம் காட்டப்பட்டுள்ளது. பெருமானின் அடியினைத் தேடும் முயற்சியில் ஈடுபடும் வராக அவதாரம் வலப்பக்கத்திலும், முடியினைக்காணும் முயற்சியில் ஈடுபடும் பிரமன் எடுத்த அன்னரூபம் திருமுடியின்மேல் இடப்பக்கத்திலும் காணப்படுகின்றன. ஜோதி சொருபமாக விண்ணிற்கும் மண்ணிற்குமாய் நின்ற பெருமானைச் சுற்றி நாற்பது தீச்சுடர்கள் மாலையாக அமைந்துள்ளன. தஞ்சை மாவட்டத்திலேயே மிகப் பெரிய இலிங்கோத்பவ மூர்த்தமாக இச்சிற்பம் விளங்குகின்றது. இதில் காணப்படும் வேலைப்பாடுகள் யாவும் தெளிவாகவும் நுணுக்கமாகவும். எடுப் பாகவும் விளங்க சிற்பி தனது கைத்திறனைக் காட்டியுள்ளார்.

**பஞ்சலோகத்தில் இலிங்கோத்பவ மூர்த்தி ( உற்சவமூர்த்தி ) ( படம் - 43 )**

திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோயில் வட்டம் கரிவலம் வந்த நல்லூரில் உள்ள ஸ்ரீ பால்வண்ணநாதேஸ்வரர் ஆலயத்தில் பஞ்சலோகத்தில் அமைந்த இலிங்கோத்பவ மூர்த்தி திருமேனி வழிபாட்டில் உள்ளது. தஞ்சைப் பெரிய கோயிலிலும் இலிங்கோத்பவர் செப்புத் திருமேனி இருந்ததற்கு o ஓர் கல்வெட்டும் காணப்படுகிறது.

---

o இந்நூலின் கல்வெட்டுப் பகுதியில் விரிவாகக் காணலாம்.

பத்ரபீடத்தில் அமைந்த பாணத்தின் நடைவுப் பகுதியில் சந்திரசேகரமூர்த்தமாய் இலிங்கோத்பவ மூர்த்தியானவர் ஜடாமகுடம், பத்ர குண்டலம், யக்ஞோபவீதம், ஸ்தன சூத்திரம், பாஹுவலமாலை, வீரகண்டாமணி, கழல், மோதிரங்கள், திருமார்பில் யக்ஞோப வீதம் ஆகியன அணியப்பெற்றவராய் பின்கரங்களில் முறையே மானும் மழுவும் ஏந்தி, வலக்கரம் அபய முத்திரை கொண்டும், இடக்கரம் வரத முத்திரை கொண்டும் குமின் சிரிப்போடு விண்ணிற்கும் மண்ணிற்குமாய் ஜோதி சொருபராய் நாம் கண்டு தரிசிக்கு மாறு காணப்படுகிறுர். திருமேனியினைச் சுற்றி அமைந்த திருவாட்சியில் யாளி, மகரம் பொருந்த இருபத்தொரு தீச்சுடர்கள் காணப்படுகின்றன. இத்திருவாட்சி தனியாகக் கழற்றும் முறையில் அமைந்துள்ளது.

தற்போது இத்திருமேனி ஸ்ரீ பால்வண்ணநாதேஸ்வரர் ஆலயத்தில் இருக்கின்றது. திருக்கார்த்திகை நாளில் தரிசிப்பது மிகவும் சிறப்பாகும்.

**திருமயம் குடைவரைக் கோயிலில் இருகரம் கொண்ட இலிங் கோத்பவர் (படம் – 44)**

திருமயம் திருச்சியிலிருந்து புதுக்கோட்டை வழியாக மதுரை செல்லும் பாதையில் புதுக்கோட்டைக்கும் திருப்பத்தூருக்கும் இடையில் அமைந்துள்ள ஒரு புனிதத் தலமாகும். இங்குதான் மிக்க பழம்பெருமை வாய்ந்த o இரு குடைவரைக் கோயில்கள் உள்ளன. ஒன்று ஸ்ரீ சத்திய கிரீசுவரர் கோயில் கொண்டிருக்கும் குடைவரைக் கோயில், மற்ருென்று ஸ்ரீ சத்திய மூர்த்திப் பெருமாள் காட்சி கொடுக்கும் குடைவரைக் கோயில். அரிக்கும் அரனுக்கும் அடுத்தடுத்து குடைவரைக் கோயில்கள் அமைந்துள்ள அற்புதத்தை இத்திருத் தலத்தில் மட்டுமே காண இயலும்.

**மூலவர் சிறப்பு :**

ஸ்ரீ சத்தியகிரீசுவரர் அமையப் பெற்றிருக்கும் குடைவரைக் கோயிலைக் காண்போம். இந்த மூலத்தானத்தில் காணப்படும் பெருமானின் திருவுருவமான (இலிங்கத்திருமேனி) ஆவுடையாரும் இலிங்கபாணமும் அடித்தளப் பகுதியிலிருந்தே செதுக்கப்பட்டுள்ளன. இங்குக் காணப்படும் ஆவுடையார் உருவத்தில் ஒரு சிறப்பு யாதெனின் ஆவுடையாரின் கோ முகப்பகுதியை ஓர் அழகிய சிம்மம் தாங்கிக் கொண்டிருப்பது போல் அமைக்கப்பட்டிருப்பதாகும். இது ஓர் அற்புதக் காட்சியாகும்,

**கருவறையின் எதிரில் :**

இக்கோயில் கருவறையின் எதிர்ப் புறச்சுவரில் இலிங்கோத்பவரின் குடைவுச் சிற்பம் ஜடாமகுடம் அணிந்து, (ஜடாபாரமாகவும் கொள்ளலாம்), காதில் பத்ர குண்டலங்கள், கழுத்தில் கண்டாபரணம் தரித்து, மார்பில் முப்புரி நூல் அணிந்து காணப்படுகிறது. இலிங்கோத்பவர் வலக் கையை வரத

---

o ஆதீன மெய்கண்டார் இதழ் ஏப்ரல் – 1991

முத்திரையுடனும் இடக்கையைக் கட்யவலம்பிதமாகவும் காட்டிக் காட்சி கொடுக்கிறார். x பின்னால் கரங்கள் ஏதும் காட்டப்படவில்லை. இங்கு இலிங் கோத்பவரின் திருவுருவம் இடுப்பளவு மட்டுமே காட்டப்பட்டுள்ளது. அதற்குக் கீழே கால்கள் காட்டப்படாமல் தூண்வடிவில் காட்டப்பட்டுள்ளது. இம்முறை பிற்காலத்தில் படிப்படியாக மாறி முழு உருவமும் கொண்டு விளங்கும்படி அமைக்கப்படலாயிற்று என்பதை இச்சிற்பத்தின் மூலம் அறியலாம். ஸ்ரீ சத்தியகிரீஸ்வரர் ஆலயம் மற்றும் சத்திய மூர்த்தி பெருமாள் ஆலயம் இரண்டும் ஏறக் குறைய 1300 ஆண்டுகளுக்கு முன்னால் அமையப் பெற்ற தாகும் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். தற்போது இவ்வாலயங்கள் இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

இது போன்றே **பிள்ளையார்பட்டி** குடைவரைக் கோயிலில் இலிங் கோத்பவர் சிற்பம் ஒன்று உள்ளது. கி. பி. ஆறும் நூற்றாண்டைச் சேர்ந்த இச்சிற்பம் காலத்தால் முந்தியதாகும்

**குடிமல்லூர் இலிங்கோத்பவர் : ( படம் - 45 )**

வாலாஜாபேட்டைக்கு அருகில் உள்ள குடிமல்லூர் சிவாலயத்தில் விளங் கும் இலிங்கோதபவ மூர்த்தியின் கலையழகு மிகச் சிறப்பானதாகும். செவ்வக அமைப்பின் மேல் சிவலிங்கத்தின் பாணம் உள்ளது. பாணத்தின் மேற்பகுதி யில் கண்போன்ற குடைவுப் பகுதியில் புடைப்புச் சிற்பமாக மான் மழுவினைத் தனது பின் கரங்களில் ஏந்தியுட முன் இரு கரங்களில் அபய, வரத முத்திரை களையும் கொண்டும் சிவபெருமான் காட்சியளிக்கின்றார். இச்சிற்பத்தில் இவரது ஜடாமகுடம் முழுவதும் மறைக்கப்படவில்லை. திருவடி மட்டிலும்தான் மறைக் கப்பட்டுள்ளது. குடைவுப் பகுதியினைச் சுற்றி (சிவபெருமானைச் சுற்றி) தீச் சுடர்கள் பல மாலையாகவே உள்ளன. இப் பெருமானின் திருமுடி திருவடி காணாது திகைத்த பிரமனும், திருமாலும் கூப்பிய கரங்களுடன் சரண்புகுகின்ற னர். இவர்களது திருமேனிகள் பாணத்தின் அடிப்பகுதியில் நின்ற நிலையில் காண்பிக்கப்பட்டுள்ளது. இவர்களின் கீழே மையமாக புருஷ உடலும் பன்றி முகமும் உடைய வராக ரூபம் சங்கு சக்கரத்தைத் தனது பின் கரங்களில் தாங் கியபடியும் தனது முன் கரங்களால் பூமியினைப் பிளந்து சென்றபடியும் காட்டப் பட்டுள்ளது. பாணத்தின்மேல் வலப்பக்கம் பிரமனின் உருவம் காட்டப்பட் டுள்ளது. கலையம்சத்தோடும், நுணுக்கமாகவும் பாணத்திலேயே மேற்கண்ட நான்கு உருவங்களும் காட்சியளிக்கின்றன.

**திருவண்ணாமலையே இலிங்கோத்பவ மூர்த்தி ரூபம் :**

நினைத்தாலே முக்தி கிடைக்கும் தலம் திருவண்ணாமலையாகும், பிரமனும், திருமாலும் உணர்ந்து தெளியும் பொருட்டு சிவபிரானே சோதிவடிவாய் நின்று பின்னர் இலிங்கத் திருஉருவாய்க் காட்சியளித்த திருத்தலமாகும்.

---

x சீர்காழி ஸ்ரீ பிரம்மபுரீஸ்வரர் ஆலயத்தில் தோணியப்பராக விளங்கும் மூலத்தானத்து மூர்த்திக்கு இரு கரங்கள் மட்டுமே உள்ளன; உற்சவமூர்த்திக்கு ஆயுதம் இல்லாத கரங்கள் காணப்படுகின்றன;

இத்தலத்து மலையானது காலத்தால் முற்பட்டதாய், தன்னுள் அதிகமான வெப்ப சக்தியைக் கொண்டு விளங்குவதும் ஆகும். இம்மலையின் அடிவாரத்தில் விளங்குவது ஸ்ரீ அருணாசலேஸ்வரர் ஆலயமாகும். சிற்பக்கலைக்கு எடுத்துக் காட்டாகவும் பல வரலாற்று உண்மைகளைக் கொண்டதாகவும், சித்த புருஷர்கள் வாழ்ந்துவருகின்ற சிறப்புடையதுமாகிய தலமாக விளங்குகிறது.

இத்திருக்கோயிலின் கருப்பக்கிருகத்தில் சர்வாபரணங்களுடன் இத்தலத்துப் பெருமான் இலிங்கத் திருமேனியாக எப்போதும் காட்சியளிக்கின்றார். இது 25 ஏக்கர் நிலப்பரப்பில் ஏழு பிரகாரங்களுடன் அமைந்துள்ளது. இத் திருத் தலத்தில் மணிவாசகர் திருவெம்பாவையை அருளிச் செய்தார்.

சுவாமி கோயிலின் கருப்பக்கிருக கோஷ்ட மாடங்களில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, தல விசேஷமூர்த்தியாகிய இலிங்கோத்பவர் திருவாட்சியுடன், பிரம்மா, துர்க்கை ஆகியோர் சுற்றிலும் காட்சிதருகின்றனர்.

இலிங்கோத்பவர் திருமேனியானது மேற்குக் கோஷ்ட மாடத்தில் உள்ளது. இதற்கு பிரத்தியேகமாக கலையம்சத்துடன் கூடிய சித்திரவேலைப்பாடால் வடிக்கப்பட்ட மகரத் திருவாட்சி அமைக்கப்பட்டுள்ளது. இலிங்க பாணத்தில் குடைவுப்பகுதியில் விளங்கும் சிவபெருமான் சகல லட்சணங்களுடன் கூடியவராய் சாந்தமாகத் திருமுடியும், திருவடியும் காட்டாது காட்சியளிக்கின்றார். பாணத்தின் மேலே அன்னமாகப் பிரமனும், கீழே வராகமாகத் திருமாலும் பெருமானின் திருமுடியினையும் திருவடிகளையும் தேடுகின்றனர். இவ்வமைப்பையே எல்லாச் சிவாலயங்களிலும் காணலாம், இத்தலம் பஞ்சபூதத்தலங்களில் ஒன்றான அக்னித் (நெருப்பு) தலமாம். கார்த்திகை மாதத்தில் நிகழும் கார்த்திகைப் பெருவிழாவில் அக்னிவடிவாய்ப் பெருமான் காட்சி வழங்குதலைக் காணலாம்.

**இவ்வாலயத்தில் இலிங்கோத்பவமூர்த்தி ரூபங்களில் பல நிலைகள் :**

இத்திருக்கோயிலின் கருப்பக்கிருக மேற்கு மாடத்தில் எல்லாச் சிவாலயங்களிலும் காணப்படுகின்ற திருமேனி போல இலிங்கோத்பவத் திருமேனி உள்ளது. இவ்வாலய இராஜகோபுரத்தின் உட்பக்கம் இரண்டாவது அடுக்கில் உள்ள மாடத்தில் இலிங்கோத்பவர் சிற்பம் ஒன்றும் உள்ளது.

**இரண்டாம் பிரகாரத்தில் :**

இவ்வாலய இரண்டாம் பிரகாரத்தின் மேற்குப்பகுதியில் கிழக்கு நோக்கியபடி சிறிய கோயிலான **"அண்ணாமலையார் அடிமுடி காணாத ஆலயம்"** ஒன்று உளது, இதில் உள்ள திருமேனியானது முற்றிலும் மாறுபட்ட நிலையில் விளங்குகிறது.

சந்திர சேகரர் திருமேனியாக சுவாமியும் அம்பிகையும் முழுமையான உருவத்தில் நின்றவாறு காட்சியளிக்கின்றனர். சுவாமியின் பின்னால் ரிஷபம் நின்றவாறு உள்ளது. சுவாமியின் மேற்பகுதியில் மலையின் அமைப்பு காட்டப் பட்டுள்ளது. மலையின்கண் அன்னப்பறவை பறந்து செல்லும் காட்சியும்,

திருவடியின் கீழ் வராக அவதாரமும் காட்டப்பட்டுள்ளன. சுவாமியின் ஜடா மகுடத்தின் இடப்பக்கத்தில் சந்திரபிறையும், பின்னால் நிற்கின்ற ரிஷபத்தின் முகம் சுவாமியின் இடக்கரத்தைத் தாங்கியது போலவும் உள்ளது. இந்தச் சிற்பத் தொகுதி யாவும் ஒரு கற்பலகையில் அமைந்த புடைப்புச் சிற்பமாகும், மேலும் அம்மன்கோயிலின் துவார சக்தியின் (வடக்குப்பக்கம்) ஓர் இலிங்கோத்பவர் திருமேனி உள்ளது.

**ஈசான மடத்தின் முன்னால் :**

மேற்கண்ட அமைப்பு போன்றே ரிஷபம் இல்லாமல் ஏனைய அம்சங்களுடன் இலிங்கோத்பவ மூர்த்தி கோயில் ஒன்று சிறியதாக இத்தலத்தின் ஈசான பாகத்தில் உள்ள ஈசான மடத்தின் முன்னால் உள்ளது. இதுவும் கற்பலகையில் அமைந்த புடைப்புச் சிற்பமாகும். இக்கோயிலைப் பார்த்தவாறு ஓர் நந்தியும் காணப்படுகிறது.

**திருவண்ணாமலையில் - இவ்வாதீனத்து ஸ்ரீ சிவப்பிரகாச தேசிகர்**

திருக்குடமூக்கு என்னும் கும்பகோணத்தில் சைவ வேளாளர் குலத்தில் உதித்த ஒருவர் திருவாவடுதுறை ஆதீனத்தின் குரு முதல்வராக விளங்கிய ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் திருவருட் செயல்களையும், ஞானானுபூதிகளையும் கேள்வியுற்று அவர்களிடம் ஞானோபதேசம் பெறும் பேரவாவுடன் வர, அவரது பரிபாக நிலையைத் திருவுளம் கொண்டு ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் அவர்க்குத் தீக்கையும் சிவஞான உபதேசமும் சிவப்பிரகாசர் என்ற தீட்சைப் பெயரும் அருளித் தமக்குத் துவிதிய ஆசிரியராக வைத்தருளினர்.

அக்காலத்தில் சிதம்பரம் ஸ்ரீ நடராஜ மூர்த்தி ஆலயத்தில் ஏற்பட்ட பூசை முட்டுப்பாட்டைத் தவிர்க்கும் பொருட்டுத் தமது ஞானாசிரியரான ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் கட்டளைப்படி வேலூர் சென்றார். அப்போது அங்கே விசய நகரத்து அரசருக்கு முதல் அமைச்சராக இருந்து அரசாங்கத்தை நிர்வாகம் செய்து வந்தவர் உத்தம வீரசைவர் ஆவார்.

**சந்தித்தல் :**

அவரை **"இலிங்கணபத்தர்"** என்று அழைப்பர். அவரைக்கண்டு குருகட்டளையை நிறைவேற்றச் சிவப்பிரகாசர் கருதினர். வீரசைவரையன்றி வேறு எவரையும் கண்டு பேசாத அவரைச் சந்திக்க ஒரு உபாயம் செய்தார். தமது பூசா மூர்த்தியாகிய சிவலிங்கத்தைத் தமது கழுத்திலும் தாரணம் பண்ணிக் கொண்டார். பின்னர் வீரசைவக் கோலத்துடனே போய் இலிங்கணபத்தரைக் கண்டு நிகழ்ந்தன கூறி, சிதம்பரம் நடராசருக்கு வைணவ அதிகாரிகளால் நேரிட்ட பூசை முட்டுப்பாட்டைத் தவிர்த்தார்.

திருமடம் அமைத்து வழங்கல் :

திருவண்ணாமலையில் அமைச்சர் இலிங்கணபத்தர் பேரன்போடு அமைத்துக் கொடுத்த திருமடத்தில் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் திரு ஆணை பெற்று எழுந்தருளியிருந்தார். இலிங்கணபத்தர் கி. பி. 1610 வரை வேலூரில் இருந்ததாகச் சரித்திர வல்லுநர் கூறுவர். இலிங்க துரையான இலிங்கமரெட்டியார் கி. பி. 1610 முதல் 1648 வரையில் துறையூர் பாளையப்பட்டுக்குத் தலைவராக இருந்தனர். துறையூரில் அவரால் ஏற்படுத்தப்பட்ட திருமடத்திலும், திருவண்ணாமலை மடத்திலும் சிவப்பிரகாசர் தங்கியிருந்தார். இவர் பின்பு ஒரு சமயம் தலயாத்திரையாகச் சென்ற பொழுது சோழ நாட்டிலே பட்டீச்சுரத்துக்குச் சமீபத்திலே உள்ள **முழையூரில்** சிவப்பேறு எய்தினர். இம்மூர்த்திகளின் சமாதித் திருக்கோயில் இத்தலத்திலுள்ளது. இவர்கள் பற்பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள்.

**சிறப்புடைய இலிங்கோத்பவர் சிற்பங்கள் உள்ள ஏனையதலங்கள் :**

1. அலகாதிரிபுத்தூர் – ஸ்ரீ சுவர்ணபுரீஸ்வரர் ஆலயம்

2. திருச்செங்காட்டங்குடி – ஸ்ரீ உத்திராபதீஸ்வரர் ஆலயம்

3. நாகைப்பட்டினம் – ஸ்ரீ காயாரோகணேசர் ஆலயம்

4. கூவம் – ஸ்ரீ திரிபுராந்தகேஸ்வரர் ஆலயம் – சிறிய குடைவுப் பகுதியும், நீண்டபாணமும், உச்சியில் அன்னமும் விளங்குகின்றன.

5. கூளம் பந்தல் – ஸ்ரீ ஜெகந்நாதீஸ்வரர் ஆலயம்

6. குன்றக்குடி – குடைவரை – சிவபெருமான் இடுப்புவரை உருவாக்கப் பெற்று அதற்குக் கீழே தூண்போன்ற அமைப்பு.

7. திருவண்ணாமலையில் – மேலப்பிரகாரத்தில் – இடபம் – சிவன்–உமை விளங்க பிரமனும் திருமாலும் தேடல்.

8. சிதம்பரத்தில் இலிங்கோத்பவர் ஓவியமாக உள்ளார்.

# LINGODBHAVA MURTI

* HAVING described the various forms of *lingas*, let me now proceed to a description of the Lingodbhavamurti. This is one of the common icons in Southern India, which according to the *Agamas* is required to be placed in the niche in the western wall of the *garbha-griha* or the central shrine. Siva is said to have appeared in the form of a blazing pillar of immeasurable size to quell the pride of Brahma and Vishnu. The story, which is almost identically given in the *Linga-purana*, the *Kurma-purana*, the *Vayu-purana* and the *Siva-purana*, runs as follows :— Vishnu at the end of a *kalpa* was slumbering on the deep abyss of waters; a great illumination occurred then near Vishnu and from it emerged Brahma. Brahma saw before him another person Vfshnu ; Brahma approached Vishnu and introduced himself to Vishnu as the creator of the whole universe and demanded of Vishnu who he was ; towhich Vishnu replied that he was also the architect of the universe. Brahma could not brook the statement of Vishnu and a quarrel ensued between them both. At this juncture there appeared a *linga* resembling the great cosmic fire, with hundreds of tongues of flames blazing out of it. Instead of quarrelling with each other Brahma and Vishnu set about to find out the top and bottom respectively of this huge mass of fire, for which purpose the former assumed the form of a swan *(hamza)* and flew up in the air ; while the latter took the form of a boar and burrowed down into the earth. The attempt of these two Gods to discover the reality and measure of this fiery pillar proved futile. They then came to realise that there certainly was something far greater than themselves ; whose top or bottom they could not find out : thus humiliated they approached this pillar of fire and began to praise it. Pleased with their prayers Siva manifested himself to them in the body of this fiery *linga* with a thousand arms and legs, with the sun, the moon and the fire as his three eyes, bearing the bow called the *pinaka*, clad in the hide of an elephant, carrying the *trisula*, wearing the

* Ref :- Hindu Iconography - By-Gobinath Rao, page 105 to 111
இப்பகுதியின் தமிழாக்கம் முன் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது-

*yajnopavita* made of snakes and with a voice resembling the rumbling of the clouds or the noise of the drum, addressed Brahma and Vishnu thus :— 'You both are born from me, Brahma, having come from my right loin and Vishnu from the left loin ; all three of us are really one but are now separated into three aspects, namely, Brahma, Vishnu and Mahesvara. Brahma will in the future be born of Vishnu and at the beginning of a *kalpa*, I myself will be born from the angry brow of Vishnu " Thus declaring, Mahesvara disappeared. From this time the *linga* came to be worshipped by all men.

While searching for the top of the pillar of fire, Brahma came by a petal of the *ketaki* flower and asked it wherefrom it was descending; to this the petal answered that it was falling from the head of Mahesvara, for what length of time it could not rember. Taking hold of this petel, Brahma descended and lied to Vishnu that he had discovered the head of Mahesvara and from it had brought this petel of the *ketaki* flower. For uttering this piece of falsehood Brahma was cursed not to receive any worship from men on earth. Hence it is stated, Brahma is never enshrined in a separate temple and offered worship.

In the *Amsumadbhedagama* is found the following description of the Lingodbhavamurthi. The figure of Sfva in the aspect of Chandrasekharamurti should be carved on the front of a *linga*. It is stated in the *Karanagama* that one-fifth part of the *linga* should be left out on the top and at the bottom respectiveiy without any sculpture. The legs below the knees of the figure of Chandrasekhara carved on the *linga* should be invisible, that is should be left unsculptured. On the right of the *linga* and near its top Brahma should be represented in the shape of a swan (*hamsa*) while Vishnu should be carved in the form of a boar on the left at the foot of the *linga*. The figures of Brahma and Vishnu should be sculptured onthe right and left respectively of the *linga* and also facing it, with two hands held on the chest in the *anjali* pose. The colour of the figure of Siva should be red, that of Vishnu black and that of Brahma golden yellow. Over and above this description, a few additional details are found in the *Kamikagama*. The size of the swan, it is stated, should be the same as that of the face of Siva,

while that of the boar, twice that of the face of Siva. The figure of the boar should be worked out as digging into the earth. The fiigures of Vishnu and Barhma should be expressive of submission and be sculptured beautifully; or they may be altogether omitted from the panel; in this latter case, the swan and the boar should necessarily be there. The *Silparatna* adds that Siva should carry the *Sula* in one of his hands; whereas, *Karanagama* requires that of the four hands one should be in the *abhaya* pose, another in the varada pose should carry the *parasu* and the fourth a *krishna - mriga* (a block buck) and that the digit of the moon (*chandra-kala*) should adorn the crown of Siva. Such is the descrp-tion of the Lingodbhvamurti, which is illustrated with three pictures. The first photograph (Pl. XIII) is that of the Lingodbhva murti found in the Kailasanathswamin temple at Canjeevaram and is over twelve hundred years old. This piece of sculpture is very much at variance with the textual description. The figure of Siva-chandrasekara has eight arms of which some are seen carrying the *parasu*, the *sula* an *akshamala* and some other objects while one is held in the *abhaya* pose and another is resting upon the hip (*katyavalambita*). Then again the one-fifth part of the *linga* on the top is not left unsculptured, nor is the part ot the *linga* lower than the knees of the fiigure of Siva, equal to a fifth of the total length of the *linga*. But the sculpture agrees with the Sanskrit texts in that the legs of siva below the knees are left out unsculptured; the digit of the moon is shown on the crown of Siva; the boar-*avatara* of vishnu with four hands out of which two are shown as diggfng the earth and the other two as carrying the *sankha* and the *chakra* and not an ordinary boar; as stated in the *Agamas*, is carved out at the bottom space of the panel; Brahma is seen flying in the air in his own form instead of as a swan; one of his legs as also that of the other deities on the left of the *linga*, is horizontal. whiie the figures of Brahma and Vishnu each having four arms are sculptured on the right and left of the *linga*; they have each one arm lifted up in the pose of praising while the other rests upon the hip. and the remaining ones carry their characteristic weapons. The top of the niche has got a highly artistically carved *makara-torana*.

The second photograph, Fig. 2, Pl. XIV. represents the Lingodbhavamurti in the temple of Siva at *Ambar Magalam*.

In this. the *linga* has a wreath of ffowers thrown over its top; the figure of Siva is shown with four arms, one of which is held in the *abhaya* pose, the other in the *katyavalambita* pose (resting upon the hip), and the remaining two carry the *parasu* and the black buck. The legs of the figure of Siva below the knees and up to the ankles are sculptared against the rules laid down in *Agamas;* the feet alone are kept hidden in the *linga* On the right of the *linga* and on its top is to be seen the swan whose beak is prominently visible; below and on the left of the *linga* is to be seen the boar, half man and half beast. burrowing the earth This piece of sculpture belongs to the mediaeval Chola period. that is. to the 11th or 12th century A. D.

The third picture, is a pen and ink sketch of the lingodbhavamurti from the dasavatara Cave at Ellora. The whole panel is a remarkable piece of artistic work; it consists of the blazing pillar of fire at the centre, with the fiigure of Siva emerging from the middle of it, having one hand in the *abhaya* pose another restng on the hip while the others are carrying perhaps the *parasu* and *mirga* (deer). Since Siva is said in some *puranas* to have precented himself before Brahma and Visbnu as a flaming pillar (the *Skambha* of the *Atharvanaveda*). the artist has shaped the *linga* like a pilar with a capital. Flames are bursting out in tongues on both side of the pillar. Brahma with four faces is seen flying in the air. and Vishnu as Varaha is digging the earth with his hands and snout. On the right and left are seen Brahma and Vishnu respectively standing in a reverential attitude. with two hands clasped in the *anjali* pose and the other two carrying the characteristic objects such as the *sankha* the *chakra.* the *kmaandalu* etc., of these two deities. The details in this sculpture are executed in the most exquisite manner. It might be observed that in all these cases the figure of Siva is enclosed in a lenticular aperture on the surface of the *linga.*

**Lingodbhavar :**

* Lingodbhava " the linga - manifestation." is a familiar figure of Siva seen on the West wall of the central shrine of Siva temples built in Chola times As his name implies. he is represented within a huge linga, the portion of the feet below the ankles being hidden in the linga. Brama in the form of a swan is seen soaring

* Ref : South Indian images By - H Krishna Sastri - 1916.

up on the left side of Siva; While on the right side, Vishnu is delving below into the depths of the earth in the form of boar. 1. Also these Gods ( i.e. Brahma and Vishnu ) in their true glory stand on either side of Siva with folded hands. The figure emanating from the middle of the linga has four hands like Chandrsekara and holds in back arms the axe and the antelope and in the front hands the abhaya and the varada postures.

In the illustration given, the left hand is. however seen resting freely on the waist. In the Tanjore inscriptions Lingod - bhava is mentioned by the name "Linga purana deva" i e,. the god of the Linaga - purana which describes the greatness of the linga.

The story runs that a dispute arose between Brahma and Vishnu as to who is the grater of the two Siva told them that whoever first saw the top or the bottom of his own fiery linga - form 2. and came back to report he would be considered the greater. Brahma soared on his swan to see the top of the Siva linga. While Vishnu as a boar dug down and down to see its bottom. Ages passed away and neither came to his goal.

At last Bihma saw one Ketagi flower coming down. It had fallen from Siva's head ages ago Brahma suborned it to give false evidance and then came back and uttered a lie, saying that he had seen the top of the linga, citing the Kataki flower as his witness' Siva knew the lie and cursed Brahma that he should thenceforward go without any worship in temples. Brahma had five heads at this time. Siva also Cut off the head which uttered the lie 3. The flover Ketaki too which abetted the crime, was excluded from the flowers dear to siva. On an apalogy being offerd the latter was however accepted as a special case. during the worship on the night of the Siva - ratri festival which falls on the fourteenth day of the dark half of Magha (Jannsry - February) in each year and is held sacred in honour of the linga - mani festation of Siva.

---

1. The swan and the boar are in some pictures found to be half-man and half-animal.

2, on the east main gopura of the Chidambaram temple is an image of lingodbhava surrended by flames of fire.

3. The Karanagama mentions a sportive from of Siva cutting off one of the heads of Brahma The image is stated to have four arms holding the thunder - bolt and the axe in the right hand and the trident and Brahmas's skull in the left.

# திருவண்ணுமலைத் தலச்சிறப்பு

திருவண்ணுமலைத் திருத்தலமானது நடுநாட்டுத் தலங்களில் 22-வதாக எண்ணப்படுவது. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூவகையிலும் சிறப்புடையது.

அண்ணுமலையார் உண்ணுமுலையாளுடன் எழுந்தருளி அன்பர்களுக்கு அருள்புரிகின்ற அற்புதப் பதி. உயர்ந்தோங்கிய அருணுசலத்தின் அடிவாரத்தில் அண்ணுமலைப் பெருமானின் திருக் கோயில் உள்ளது.

o பஞ்சபூதத்தலங்களுள் நெருப்புக்குரிய தலம் இதுவேயாகும். இயற்கையாகவே இம்மலை மிகுந்த வெப்பத்தைத் தன்னகத்தே கொண்டுள்ளது என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர். நினைக்க முத்தியளிக்கும் தலம்.

**கோபுரங்கள் :**

பல மகான்களும் ரிஷிகளும் தவம் இருந்து சித்திபெற்ற தலம். 11-நிலைகளை உடைய இத்திருக்கோயிலின் கிழக்குக் கோபுரம் 216 அடி உயரம் உடையது. தெற்குக் கோபுரம் - திருமஞ்சனக்கோபுரம் என்றும், மேலக் கோபுரம் - பேய்க் கோபுரம் என்றும், வடக்குக் கோபுரம் - அம்மணி அம்மாள் கோபுரம் என்றும் வழங்கப்படுகின்றன.

கோயிலின் வடகிழக்கு மூலையில் ஆயிரங்கால் மண்டபம் உள்ளது கிழக்குப் பக்கத்தில் நுழையும் போதுள்ள உட்கோபுரம் வல்லாள மகாராசன் கோபுரம் என்று வழங்கப்படுகிறது. இக்கோபுரத்தின் வடகிழக்கு மூலையில் சக்தி விலாசமும் உள்ளது. மேற்கு நோக்கி உட்சென்ருல் கிளிக்கோபுரத்தைக் காணலாம். தலவிருட்சத்தின் மேற்கே திருக்கலியாண மண்டபமும் உள்ளது

| | | |
|---|---|---|
| **இறைவன்** | — | அருணுசலேசுவரர், அண்ணுமலையார் ( படம் – 46 ) |
| **இறைவி** | — | அபிதகுஜாம்பாள், உண்ணுமுலையம்மை |
| **தலவிருட்சம்** | — | மகிழமரம் |
| **தீர்த்தம்** | — | பிரமதீர்த்தம், சிவகங்கை |

---

**o பஞ்சபூதத்தலங்கள் :**

| | | |
|---|---|---|
| மண் | — | காஞ்சிபுரம், இராமேசுவரம், ஆகாயம் - சிதம்பரம் |
| நீர் | — | திருவானைக்கா |
| நெருப்பு | — | திருவண்ணுமலை |
| காற்று | — | ஸ்ரீ காளத்தி |

தலப்பனுவலிகள் — திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மணிவாசகர், நக்கீரர், பரணர், கபிலர், பட்டினத்தார், இராமலிங்க சுவாமிகள் முதலிய பலரும் பாடியருளி யுள்ளார்கள்.

மண்டபங்கள் :

இக்கோயிலின் முன்னால் நீண்ட மண்டபம் உள்ளது. கோயிலின் உள்ளே சென்றால் நேரே x கம்பத்திளையனர் சந்நிதியும் ஞானப்பால் மண்டபமும் உள்ளன. வலப்பால் சக்தி விலாச கல்யாண மண்டபமும் புரவி மண்டபமும் காணப்படுகின்றன. மண்டபங்களில் கலைநுணுக்கம் வாய்ந்த சிற்ப அழகினையும், கருக்கு வேலைகளையும் காணலாம்.

தீர்த்தம் :

இத்திருக்கோயிலின் உள்ளும் வெளியிலும் மலைப்பகுதியிலுமாக 360 தீர்த்தங்கள் உள்ளன. சிவகங்கையும், பிரமதீர்த்தமும், மலைப்பகுதியிலுள்ள அக்னிதீர்த்தமும், இந்திர தீர்த்தமும் சிறப்புடையனவாக எண்ணப்படுகின்றன. வருடத்தில் நடைபெறுகின்ற தெப்போற்சவம் இந்திர தீர்த்தத்தில் நடைபெறும்.

o வழிபாட்டு முறையில் திருமேனிகளின் தரிசனங்கள் :

சிவகங்கைத் தீர்த்தக் கரையில் சர்வசித்தி விநாயகரைத் தரிசித்து படிகளேறிக் கல்யாணசுந்தரரைத் தொழுது மீண்டும் வந்து பெரிய நந்திதேவரை வணங்கிப் படிகளேறிச் சென்றால், வல்லாள மகாராசன் கோபுரத்தில் கோபுரத்திளையனர் சந்நிதியில் - வள்ளி தெய்வானையுடன் சுப்பிரமணியரைத் தரிசிக்கலாம்.

சக்திவிலாச சபா கல்யாணமண்டபத்தின் இடப்பால் விளங்கும் எட்டு கைகளையுடைய காலபைரவரைத் தரிசிக்கலாம். எதிரில் பிரம தீர்த்தம் உளது. வலப்பால் புரவி மண்டபம்-ஆனைத்திறை கொண்ட விநாயகர் - நளேஸ்வரர்-இடப்புறம் திரும்பினால் விக்னேஸ்வரர், வித்யாதரேஸ்வரர் பிரமலிங்கம் ஆகிய திருவுருவங்களைத் தரிசிக்கலாம். பின்னர் திரும்பிப் படிகளேறும்போது பைரவரையும் சனீஸ்வரரையும் தொழுது சென்றால் வலப்பால் ஏகாம்பரேஸ்வரரைத் தரிசிக்கலாம். பின்புறத்தில் சப்தகன்னியரையும் சாஸ்தாவையும் ரேணுகாம்பாளையும் தரிசிக்கலாம்.

---

x "அதல சேடனராட" — என்னும் அருணகிரியார் திருப்புகழுக்கு முருகன் கம்பத்தில் வெளிப்பட்டு அருள்செய்த சந்நிதி.

o "திருமுறைத் தலங்கள்" - பு. மா. ஜெயசெந்தில்நாதன் - இந்து சமய மன்றம், காஞ்சிபுரம் - 2.



படம் - 43

ஸ்ரீ பால்வண்ணநாதேசுவரர் ஆலயத்தில்
விளங்கும் பஞ்சலோக இலிங்கோத்பவர் திருமேனி
கரிவலம் நல்லூர் - திருநெல்வேலி மாவட்டம்.

[ நன்றி : French Indology - Pondicherry ]



படம் - 44

திருமயம்-புதுக்கோட்டை மாவட்டம் ஸ்ரீ சத்யகிரீஸ்வரர் குடைவரைக்கோயில் இருகரங்களை உடைய இலிங்கோத்பவர் (இதுபோன்ற உரு அமைப்பினை பிள்ளையார்பட்டியிலும் காணலாம்)

[ நன்றி : French Indology - Pondicherry]

இடப்பால் வெளிச்சுற்றில் இத்தலத்திற்கே உரிய சிறப்புடைய "மகிழமரம்" உள்ளது. மலைப்பாதை வாயிலை வணங்கியவாறே வந்தால் அம்பாள் சந்நிதியில் உண்ணாமுலையம்மையைத் தரிசிக்கலாம். அம்பாள் மூலத்திருமேனி – சிறிய மூர்த்தமாக அமைந்துள்ளது. அம்பாள் சந்நிதிக்கு எதிரில் காளஹஸ்தீஸ்வரலிங்கம் அமைந்துளது.

வலமாக வந்து வெள்ளிக்கவசத்துடன் அழகிய கோலத்தோடு விளங்கும் துவாரவிநாயகரை வணங்கி, பழனியாண்டவரைத் தரிசித்து, கவசமிட்ட கொடிமரத்தருகே நமஸ்கரித்து சுவாமி சந்நிதிக்குள் நுழைந்தால் விளக்குகளின் பிரகாசம் கண் கொள்ளாக் காட்சியாக விளங்குகிறது.

வலப்பால் - உற்சவமூர்த்த மண்டபம்:

இதனுள் வலமாக வரும் போது சனந்தனர் முதலானோர் வழிபட்ட சிவலிங்கங்கள், நால்வர் (மூல - உற்சவமூர்த்தங்கள்) அறுபத்துமூவர் மூலத்திருமேனிகள், சப்தமாதாகன்னியர்கள், கௌதமர், துர்வாசர், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், வேணுகோபால சுவாமி, கஜலட்சுமி, ஆறுமுகர், பிட்சாடனர், அறுபத்துமூவர் உற்சவமூர்த்தங்கள், நடராச சபை முதலான சந்நிதிகள் உள்ளன. அவற்றைத் தரிசிக்கலாம்.

விசுவாமித்தரர், பதஞ்சலி, வியாக்ரபாதர், அகத்தியர் முதலானோர் வழிபட்ட இலிங்கங்கள், ஜ்வரஹரேசுரர், காலசம்ஹாரர், பைரவர் ஆகிய திருமூர்த்தங்களைத் தரிசனம் செய்து கொண்டே சென்றால் சுவாமி சந்நிதியை அடையலாம்.

சுவாமி:

மூலத்தான மூர்த்தியான "அருணாசலப் பெருமான்" இலிங்கத் திருமேனி கொண்டு தங்கக்கவச நாகாபரணத்துடன் வைரவிபூதி நெற்றிப்பட்டம் ஜொலிக்கக் காட்சிதருகின்றார். சந்நிதியின் இருபுறமும் அழகாக விளக்கு வரிசைகள் உள்ளன. "அண்ணாமலைக்கு அரோஹரா" என்று வாய்விட்டுச் சொல்லி கைகூப்பித் தொழுது பக்தியில் திளைத்த வாறே இப்பெருமானின் கருப்பக்கிருகத்தினை வலம் வரும் போது கோஷ்ட மாடங்களில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, "திருவாட்சியுடன் அமைந்த இலிங்கோத்பவர்" பிரம்மா, துர்க்கை தனித்த நிலையில் சண்டேசுவரர் ஆகியோரைத் தரிசனம் செய்து மகிழலாம்.

உற்சவங்கள்:

இத்தலத்தில் நடைபெறும் பெரிய விழா கார்த்திகைத் திருவிழா வாகும். இது கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நாளைத் தீர்த்தமாகக் கொண்டு நடைபெறும் பெரிய திருவிழாவாகும். இவ்விழாவிலேதான்

மலையில் பெரிய தீபம் ஏற்றப்பட்டு தீபதரிசனம் செய்வர். இந்தியாவின் பல இடங்களிலிருந்தும் அன்பர்கள் வந்து தரிசிப்பர்.

சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தைத் தீர்த்தமாகக் கொண்டு பிரமோற்சவமும் நடைபெறுகிறது. பங்குனி உத்திரத்தில் திருக்கலியாணமும், மாசிமாதத்தில் வல்லாளன் திருவிழாவும், தை மாதம் திருவூடல் விழாவும் ஆனிவிழாவும், ஆடியில் அம்பிகை விழாவும் பவித்ரோற்சவமும், நவராத்திரி, கந்த சஷ்டி, திருவெம்பாவை ஆகிய உற்சவங்களும் நித்திய நைமித்திய உற்சவங்களும் நடைபெறுகின்றன.

**சோதியாய் நின்ற அண்ணாமலையார் சிறப்பு: ( படம் - 48 )**

பிரமாவுக்கு, தான் படைப்புக் கடவுள் என்ற இறுமாப்பு வந்து திருமாலிடம் சென்று நானே பெரியவன் என்று பெருமைபேச, திருமாலோ "நீ என் உந்தியில் உதித்தாய்; ஆகையால் நானே பெரியவன்" என்று வாதிட, இருவரும் சிவனிடம் முறையிட்டனர். இவர்களுக்குப் பாடம்புகட்ட, சிவன் தன் அடி - முடி கண்டவதர்ான் பெரியவர் என்று கூறி தீப்பிழம்பாகக் காட்சிதந்தார். திருமால் வராக உருக்கொண்டு பாதாளம்வரை சென்றார். உடல் களைப்புற்றுத் தம் தோல்வியைத் திருமால் ஒப்புக்கொண்டார்.

பிரமனோ அன்ன உருக்கொண்டு முடிதேடிப் பறந்து சிறகுகள் எரிந்து சாம்பலாகிக் கீழே விழுந்தார். பின் இருவரும் அகந்தை நீங்கி சிவனை வணங்கச், சிவபெருமான் ஒரு மலையாய்த் தன் சோதியை ஒடுக்கிக்கொண்டார். அம்மலையே அண்ணாமலை. அந்தச் சோதியினை நினைவு கூரும் முகத்தான் கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரத்தில் மலையில் தீபம் ஏற்றி அன்பர்கள் வணங்குகின்றார்கள். இக்காட்சியினை இவ்வாலயத்தின் மேற்கு கோஷ்ட மாடத்தில் திருவாட்சியுடன் அமைந்த இலிங்கோத்பவர் திருமேனியினைக் காணலாம்.

**அறிவியல் அடிப்படையானது :**

இந்தியாவின் வடக்கே இமாலயம் ஓர் அரணாக விளங்குகின்றது. இது உலகிலேயே உயரமான சிகரத்தை உடையது. இருந்தாலும் இமாலய மலையை விட மிகப் பழமையான மலை திருவண்ணாமலை யாகும். அது மட்டுமா? உலகிலேயே இந்தமலை தான் மிகப்பழமையான மலை. அதிகமான வெப்பத்தையும் கொண்டது

1949 ஆம் ஆண்டு சனவரி மாதம் நிகழ்ந்த இந்திய விஞ்ஞானக் குழுவில் "டாக்டர் பீர்பால் சகானி" என்ற அறிஞர் இக்கருத்தை ஆமோதித்துப் பேசினார். பிற பிரதேசங்கள் நில நடுக்கங்களால் பாதிக்கப்படுவது போல தட்சணப் பீடபூமி அவதிப்படுவதில்லை, என்பதற்கு இதன் பழமையே சான்றாகும். புராணங்கள் இந்த அண்ணாமலையைப் பூமியின் மத்திய பாகம் என்றே வருணிக்கின்றன.

பஞ்சபூதத் தலங்களில் இதனைத் தேயு தலம் எனப்போற்றுவர். இப்புவி மண்டலம் படைப்பின் ஆரம்பத்தில் நெருப்புக் கோளமாய் இருந்து குளிர்ந்தவுடன் இறுகிக் கல், மண் இப்படி ஆகியது என்கிறது பூகோள சாத்திரம்.

திருவண்ணாமலையே சிவலிங்க வடிவம் :

சாதாரணமாகப் புனித மலைகளில் இறைவனாகிய சிவபிரான் உறைவதாகக் கூறி மக்கள் வணங்குவர். ஆனால் இத்தலத்தே மலையே இறைவனின் சொரூபம். சிவபெருமானின் திருவுருவங்கள் எங்கெங்கு அமைந்துள்ளனவோ அங்கெல்லாம் நந்தியம்பெருமானைக் காணலாம். அதுபோல இறைவனாகிய இம்மலையைச் சுற்றி ஏராளமான நந்தி உருவங்கள் இருப்பதைக் காணலாம். இத்தலம் இலிங்க உற்பத்தித் தானமாகிய இலிங்கோத்பவர் தலமல்லவா ? மலை வழி நெடுகிலும் இலிங்க வடிவங்களைக் காணலாம்.

கிரிப் பிரதட்சண முறை :

திருவண்ணாமலையைச் சுற்றிவருவது, தரிசிப்பது, நினைப்பது எல்லாமே முக்தி அளிக்கும் சாதனங்களாகும். இத்திருமலையைச் சித்திரை முதல் நாள், மாசிமாதத்துச் சிவராத்திரி, கார்த்திகை மாதக் கார்த்திகை, பௌர்ணமி நாட்கள் ஆகியவை மிக உகந்த நாட்களாக மக்கள் எண்ணுகின்றனர். ஒவ்வொரு கிழமையிலும் கிரி வலம் வந்தால் என்ன பலன் கிடைக்கும் என்பதனைப் புராணங்கள் புகலுகின்றன.

கட்டடக்கலை : ( படம் – 47 )

o தமிழகத்தில் உள்ள சில சிறந்த ஆலயங்களுள் இந்தத் திருவண்ணாமலை ஆலயமும் ஒன்று. இது சுமார் 25 ஏக்கர் நிலப் பரப்பைக் கொண்டது. கிழக்கு மேற்காக உள்ள மதில் சுவர் 700 அடி நீளமும், தென்மதில் 1479 அடி நீளமும், வடக்கு மதில் 1590 அடி நீளமும் கொண்டது. இவ்வளவு பெரிய நிலப்பரப்பை உடைய இந்தக் கோயிலுக்கு முடி சூட்டியது போல கிழக்குக் கோபுரம் 11 நிலைகள் கொண்டு எழும்பி 216 அடி உயர்ந்து நிற்கிறது. அதன் அடிவாரம் 135 அடிக்கு 96 அடி பரந்துள்ளது. கிழக்குக் கோபுரம், ஆயிரங்கால் மண்டபம், சிவகங்கை, திருக்குளம் யாவும் கிருஷ்ண தேவராயர் பணியாகும். இவைகளில் விசயநகரக் கலைப்பாணியைக் காணலாம்.

---

o திருவண்ணாமலை - பக்கம் 45, 46 - மணிவாசகர் பதிப்பகம் - முதல் பதிப்பு மே 1993.

இந்த ஆலயம் பல்லவ மன்னர்கள் காலத்திலிருந்து ஆங்கிலேய கிழக்கு இந்தியக் கம்பெனிக்காரர்கள் காலம் வரை தென்னாட்டில் ஆதிக்கம் செலுத்திய அவ்வளவு பேர்களின் ஆட்சியைக் கண்டிருக்கிற தல்லவா? ஒவ்வொருவரும் இக்கோயிலில் தங்களுடைய முத்திரையைப் பதிய விட்டிருக்கிறார்கள்,

பழைய பாணியில் புதுப்பொலிவு :

இந்த ஆலயம் இறைவனின் கோயிலாக மட்டுமா இருந்தது? சில அரசர்களுக்குக் கோட்டையாகவும் விளங்கியது. கி. பி 17 ஆம் நூற்றாண்டில் இப்பிரதேசம் கர்நாடக நவாப்புகளின் ஆதிக்கத்தில் சிக்கியது. கி. பி. 1753 க்குப் பிறகு ஒரே களேபரம்.

முராரிராவ், கிருஷ்ணராயன், மிருத்துசா அலிகான், பர்கத் அலிகான், பிரஞ்சுத் துருப்புகள் யாவரும் நுழைந்த இடம். ஆங்கிலேயா சிப்பாய்த் தலைவன் ஸ்டீபன் ஸ்மித் இதை முற்றுகையிட்டான். இதில் ஒரு தெய்வ பக்தி பாருங்கள்! சந்தா சாகிப் துருப்பைச் சேர்ந்தவன் பர்கூத் அலிகான். இந்த முற்றுகையின் போது ஆலயத்தில் போர் கூடாது என்ற நல்ல எண்ணம் கொண்டு ஆற்காட்டிலிருந்து உதவி வரும் வரை சண்டையை நிறுத்தி வைத்திருந்தான். இதனால் சண்டைகளால் பாழ்படாமல் பழைய கலைப்பாணியினை அப்படியே இன்றும் கொண்டு விளங்குகிறது.

செப்புப் படிமங்கள் :

கோயிலுக்குள் விளங்கும் தெய்வப் படிமங்களை ( சிலாரூபங்கள் ) கோயிலுக்குள் வந்தால்தான் காணமுடியும். ஆனால் வரமுடியாதவர்களும் மற்ற மதத்தினரும் காணும் வண்ணமும் அவர்கட்கு அருள் கிட்டுமாறும் நமது முன்னோர்கள் பஞ்சலோகப் படிமங்களை வீதிஉலா வரச்செய்து அவர்களைப் பேரானந்தம் அடையச் செய்தனர். அவ்வகையில் இத்திருக்கோயிலுக்குள் பல செப்புத் திருமேனிகள் உள்ளன.

அவையாவன கணபதி, பிரதோஷநாயகர், சுப்ரமண்யர், வள்ளி, தெய்வானை, சந்திரசேகரர், சந்திர சேகர அம்மன், அர்த்தநாரிஸ்வரர், சோமாஸ்கந்தர், பக்தானுக்ரக சோமாஸ்கந்தர் ( சிவன் – உமை - கந்தன் இவர்களோடு கணபதியும் உள்ள குடும்பச்சூழல் ) பிச்சை புகக்கும் பெருமான், சண்டேசுவரர், சண்முகர், அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், நடராசர், சிவகாமி, அறுபத்து மூவர், பிடாரி, பராசக்தி, பள்ளியறைச்சொக்கர், முதலான திருமேனிகளாகும்.

ஓவியங்கள் :

விஜயநகர மன்னரான கிருஷ்ணதேவராயர் காலத்தில் தொடங்கி சேவப்பநாயக்கர் காலத்தில் முடிந்த கிழக்கோபுரத்து ஓவியங்கள் உள்ளன. சிவபெருமானின் திருவிளையாடல்களும், 25 சிவமூர்த்தங்களும், மகாபாரதக் காட்சிகளும் தலப்புராண ஓவியங்களும் உள்ளன. இவைகள் பாதுகாக்கப்பட வேண்டும்.

வழிபட்டோர் :

நினைக்க முக்தி கிடைக்கும் தலம் இத்தலம். பிரதத்ராஜன், அஷ்டவசுக்கள், பிரமதேவன், திருமால், சந்திரன், புளகாதிபன், விசுவாமித்திரர், பதஞ்சலி, வியாக்ரபாதர், அகத்தியர், சித்தர்கள், முதலிய முனிவர்கள் வழிபட்ட தலமாகும்.

வித்யாதரர்களாகிய இருவர் ஒரு ரிஷியின் சாபத்தால் பூனையாகவும், குதிரையாகவும் இருந்த நிலை இத்தலத்தை வலம் வந்தபின் மாறின.

திருமுறை ஆசிரியர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் (இத்தலத்தில் திருவெம்பாவை பாடியருளினர்). ஆகியோரும் நக்கீரர், பரணர், கபிலர், பட்டினத்தார், அருணகிரிநாதர் ஆகியோரும் இத்தலத்தைப் பாடித் துதித்துள்ளனர்.

மேலும் குருநமசிவாயர், குகைநமசிவாயர், விருபாக்ஷதேவர், ஈசான்ய ஞான தேசிகர் - இராமலிங்கர் தெய்வ சிகாமணி தேசிகர் - நாகலிங்க தேசிகர் - (இவர்களின் வாயிலாக குன்றக்குடி ஆதீனம் தோன்றலாயிற்று). ஆகியோரும் ரமணர், சேஷாத்திரி - ஆகியோரும் தவமிருந்த ஆஸ்ரமங்களும் உள்ளன.

இன்று வரை பல சித்தர்களும் முனிவர்களும் யோகிகளும் இப்பெருமானைத் தியானம்செய்து வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். ஆச்ரமங்களும், மடங்களும், பல உள்ளன.

திருவண்ணாமலை தீபம் ஏற்றும்முறை :

திருவண்ணாமலையில் - தீபத்தினை மலை உச்சியில் ஏற்றும் போது கொப்பரை ஒன்றில் துண்டு துண்டாக்கப்பட்ட காடா துணிகளில் ஊற்றப்படும் நெய்யுடன், சுத்தமான கற்பூரம் கலந்து எரியச் செய்வார்கள், அதனால் பெரு மழை பெய்தாலும் தீபம் அணையாது. இதற்காக 5 அடி உயரமுள்ள செம்பினாலான 200-கிலோ எடையுள்ள கொப்பரை ஒன்று பயன்படுத்தப் படுகிறது. இதில் தீபம் எரியும் போது ஒரு ஆள் உயரத்திற்கு ஜ்வாலை இருக்கும். இந்த கார்திகைத் தீபம் (ஜ்வாலை) இருபது மைல் சுற்று வட்டாரத்திற்குத் தெரியும்.

**சுடர் பிரசாதம் பெறும் முறை :**

கார்த்திகைத் தீபம் முடிந்து மார்கழி மாதம், கோயிலில் நடராஜர் ஆருத்ரா தரிசனம் நடைபெறும். அப்போது நட்ராஜருக்கு கார்த்திகை தீபச் சுடர் சார்த்திய பிறகுதான், தீபத்திற்கு நெய்க் கட்டணம் செலுத்திய அன்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் தீபச்சுடர் பிரசாதம் நேரிலும், தபால்களிலும் கோயில் நிர்வாகத்தின் மூலம் அனுப்பி வைக்கப்படும்.

**திருவண்ணாமலை இலக்கியங்கள் :**

**( திருப்பனுவல்கள் )**

| | |
|---|---|
| ரிக்வேதம் | .... (இரண்டு சுலோகங்கள்) |
| பாஸ்கரசம்ஹிதை | — |
| சரப உபநிடதம் | — |
| அருணாசல தியானங்கள் | — |
| கேனோபநிஷத் | — |
| அருணாசலாஷ்டகம் | — ஆதிசங்கரர் |
| திருஞானசம்பந்தர் | — இரண்டு பதிகங்கள் |
| திருநாவுக்கரசர் | — மூன்று பதிகங்கள் |
| மாணிக்கவாசகர் | — திருவெம்பாவை, திருவம்மானை |
| திருமூலர் | — திருமந்திரம் (372 to 380 பாடல்கள்) |
| 11 - ஆம் திருமுறை | — சில பனுவல்கள் |
| 12 - ஆம் திருமுறை | — சில பனுவல்கள் |
| திருப்புகழில் | — 87 பாக்கள் |
| அருணகிரி புராணம் | — மறைஞான தேசிகர் |
| அருணாசல புராணம் | — சைவ எல்லப்ப நாவலர் |
| கந்தபுராணம் | — சில பனுவல்கள் |
| திருவிளையாடல் புராணம் | — பரஞ்சோதியார் |
| அருணாசல மகாத்மியம் | — வசனம் |
| திருவருணை அந்தாதி | — சைவ எல்லப்ப நாவலர் |
| அருணகிரி அந்தாதி | — குகை நமசிவாயர் |
| திருவருணை பதிற்றுப்பத்தந்தாதி | — சோணாசல பாரதி |
| அருணை யமக அந்தாதி | — திம்மப்ப அந்தணனர் |
| அருணைத் தனிவெண்பாமாலை | — குகை நமசிவாயர் |
| கார்த்திகை தீப வெண்பா | — சோணாசல பாரதி |
| சோணாசல வெண்பா | — சோணாசல பாரதி |
| திருவருணைக் கலிவெண்பா | — சோணாசல பாரதி |
| சாரப் பிரபந்தம் | — தபோமயம் நமசிவாயர் |

| | | |
|---|---|---|
| திருவண்ணாமலை திருவருட்பதிகம் | — | இராமலிங்க அடிகள் |
| அருணாசலேசர் வருகைப் பதிகம் | — | சரவணப் பெருமாள்பிள்ளை |
| உண்ணாமுலை அம்மன் பதிகம் | — | ,, ,, |
| உண்ணாமுலை அம்மன் வருகைப் பதிகம் | — | ,, ,, |
| அருணாசலேசர் பதிகம் | — | அட்டாவதானம் சபாபதி முதலியார் |
| சோணாசல பதிகம் | — | சோணாசல பாரதி |
| திருவண்ணாமலை பதிகங்கள் | — | ஞானசித்த சுவாமி |
| திருவருணைக் கல்யாணசுந்தரர் பதிகம் | — | சோணாசலபாரதி |
| அருணாசலேசர் பதிகம் | — | இராமசாமி செட்டியார் |
| அருணாசலேசர் வருகைப் பதிகம் | — | வேலாயுதப் புலவர் |
| திருவண்ணாமலைச் சதகம் | — | திருச்சிற்றம்பல நாவலர் |
| உண்ணாமுலை அம்மன் சதகம் | — | சின்னக்கவுண்டர் |
| அருணாசல சதகம் | — | மகாவித்வான் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் |
| திருவண்ணாமலைக் கோவை | — | சைவ எல்லப்ப நாவலர் |
| அருணாசலேசர் விருத்தம் | — | |
| அருணாசலேசர் நவகாரிகை மாலை | — | |
| அருணாசல அட்சர மாலை | — | |
| திருவருணைக் கலிவெண்பா | — | |
| அருணாசலேசர் விருத்தம் | — | |
| அருணாசல அட்சரமாலை | — | இரமணமகரிஷி |
| அண்ணாமலை பஞ்சரத்தினம் | — | |
| அண்ணாமலை நான்மணிமாலை | — | |
| உண்ணாமுலை அம்மை பிள்ளைத்தமிழ் | — | |
| திருவருணை உச்சி விநாயகர் பஞ்சரத்தினம் | — | |
| அண்ணாமலை நாமாவளி | — | |
| அருணை தியான பஞ்சகம் | — | |
| அருணைப் பிட்சாடனர் அற்புதமாலை | — | |
| திருவண்ணாமலை வழிநடைப் பதம் | — | |
| அட்சரப் பாமாலை | — | |
| அருணாசலேசர் உயிர்வருக்கம் படைத்தற்பாமாலை | — | |
| அருணாசல அட்டகம் | — | |
| அருணாசல புராணக் கீர்த்தனைகள் | — | |
| வல்லாள மகாராசன் கும்மி | — | |
| வல்லாள மகாராசன் நாடகம் | — | |
| திருவண்ணாமலைக் கோவை | — | சைவ எல்லப்ப நாவலர் |
| திருவண்ணாமலைக் கோவை | — | கமலை ஞானப்பிரகாசர் |

சோணசைல மாலை — சிவப்பிரகாச சுவாமிகள்
சாரப் பிரபந்தம் — குகை நமசிவாயர்
அண்ணாமலை சதகம் — திருச்சிற்றம்பல நாவலர்
அருணாசலேசர் பதிகம் — சரவணப்பெருமாள் பிள்ளை
அருணாசலேசுரர் பதிகம் — புரிசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார்
திருவண்ணாமலை பதிகங்கள் — குருசூர் ஞான சித்த சுவாமி
அருணைச் சிலேடை வெண்பாமாலை —
ஸ்ரீ அபீதகுஜாம்பாள் சரணாரணாஷ்டகம் — ஸ்ரீ அப்பையதீட்சிதர்

சைவத் திரு சோணாசல பாரதியார் திருவண்ணாமலையைப் போற்றிப் பாடிய நூல்கள் பதினான்கு ஆகும்.

மேலும் உரைநடை நூல்களாகவும், கட்டுரைகளாகவும் ஆய்வு நூல்களாகவும் இத்தலத்தின் பெருமையினை எடுத்துரைப்பனவாகப் பல நூல்கள் வந்துள்ளன. பலநூல்கள் வரவும் உள்ளன.

**கல்வெட்டுகள் :**

திருக்கோயில்கள் யாவும் கலைகளை வளர்க்கும் இடமாகவும், பல வரலாறுகளை தன்னகத்தே கொண்டு விளங்கும் கலைப்பொக்கிஷமாகவும் விளங்குகின்றன. சமயம் வளர்க்கும் அரணாகத்திகழும் திருக்கோயில்களில் அன்றாடம் பூசைகள் நிகழவும், திருவிழாக்கள் கொண்டாடவும் மன்னர்களும், கிராம மக்களும் பொற்காசுகளையும், நிலங்களையும் நிவந்தமாக அளித்துள்ளனர். நிவந்தங்கள்மற்றும் அணிகலன்களின் விபரத்தை எல்லாம் கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் பொறித்துள்ளதனை இன்றும் காணலாம்.

இப்பகுதியில் “ இலிங்கோத்பவர் ” திருமேனிக்குரிய தஞ்சாவூர், அருப்புக்கோட்டை, கரிவலம் வந்த நல்லூர்த் தலங்களில் கிடைக்கப் பெற்ற கல்வெட்டுகளும், திருவண்ணாமலைத் திருக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளும் இடம் பெறுகின்றன.

**தஞ்சையில் :**

இலிங்கோத்பவத் திருமேனிகள் பெரும்பாலும் சிலா ரூபங்களில் அமைந்தனவாக எல்லாச் சிவாலயங்களிலும் காணலாம். ஆனால் மிகச் சில ஆலயங்களில் மட்டுமே எழுந்தருளும் பஞ்சலோகத் திருமேனிகளாக விளங்குகின்றன.

உலகப்புகழ் பெற்ற தஞ்சைப் பிரகதீஸ்வரர் ஆலயத்தைக் கட்டிய முதலாம் இராஜராஜனின் தேவியருள் ஒருத்தியான **அபிமான வல்லி** என்பவள் இலிங்க புராண தேவர் என்ற திருமேனியைச் செய்து அளித்தாள் என அக்கோயில் கல்வெட்டு கூறுகிறது. அக் கல்வெட்டு 75 வரிகளாக அமைந்துள்ளன.



படம் - 45
குடிமல்லூர் - சிவாலயத்தில் விளங்கும்
இலிங்கோத்பவர்.



படம் - 46
மூலத்தானத்துத்திருவுருவம்
ஸ்ரீ அருணசலேஸ்வரர் - திருவண்ணமலை.

தஞ்சைப் பெரியகோயில்
கல்வெட்டில் - இலிங்கபுராணதேவர் :
( செப்புத் திருமேனி)

*East face.*

[ 1.] ஸ்வஸ்தி ஸ்ரீ: [ ||* ] உடையார்
[ 2.] ஸ்ரீ ராஜராஜதேவர்
[ 3.] தேவியார் சுஷி[த்]ராத-
[ 4.] வல்லியார் உடை-
[ 5.] யார் ஸ்ரீராஜராஜீஸ்வ-
[ 6.] ரமு உடையார் கெ[ா]யி-
[ 7.] லின் யாண்டு [இ]ருபத்-
[ 8.] தொன்[ப]தாவது வரை[ர]
[ 9.] எழுந்தருளுவித்த செ-
[10.] ப்புத்[திருமே]ம[னி உ]டை-
[11.] யார் [கொயி]லில் [மு]மு-
[12.] த்த[ால் அளந்தும்] ரத்ந-
[13.] ங்க[ள் சாடு நீக்கி] ஓகவி-
[14.] ண[சேரவிட]ஂகதீன-
[15.] ன்னு[ங்கல்ல]ால் நி
[16.] றை எடுத்துங்கல்]வி-
[17.] ல் வெ[ட்டின] ||— [க*] [வீ]ஂ-
[18.] த்து[க்கு மே]ம[ல் ஸிலே]ரா-
[19.] வத்தி[னைய]ள[வு]ஞ்செ-
[20.] ல்ல இரு[ப]த்தெ[ாரு]வி-
[21.] ரலெ[ய் ஆறு] தெ[ா]-
[22.] [ை]ா உச[ரத்து ஒரு[மு].
[23.] மு[மெய் பதிஞெரு]-
[24.] விர[லெ இரண்டு தொ]-
[25.] ை[ாச்சுற்றில் எ]ழுந்[த]-
[26.] ருளுவி[த்த] [ஂக[வாு]
[27.] ண[தேவர்³ திருமேனி]
[28.] ஒருவர் [ந்*] இ[வரொ]டு]ந்-

*North face.*

[29] தொற்றமாகச்செய்-
[30.] து நின்ற ஐம்வெக்-
[31.] கு மெற்கெபாஙத்த-
[32.] [ள]வுஞ்செல்லப்ப-
[33.] ன்[னி]ருவிரலெ நாலு
[34.] டெ[தா]ளா உசரத்து நாலு
[35.] ஸ்ரீஹஸ்தி உடைய-
[36.] ராகக்கனமாகச்செய்-
[37.] த திருமெனி ஒருவர் ।— [௩*]
[38.] லிஂகத்தொடுங்கூட-
[39.] ச்செய்த எழுவிரல் உ-
[40.] சரத்து நாலு ஸ்ரீஹஸ-
[41.] தி உடையராகக்கனமா:
[42.] கச்செய்த ஸுஹஸ ஒ-
[43.] ருவர் [ச*] லிஂகத்தொடுங்கூ-
[44.] டச்செய்த எழுவிரல்
[45.] உசரத்து நாலு ஸ்ரீஹ-
[46.] ஸ்தி உடையராகக்கன-
[47.] மாக வராஹதேவந்-
[48.] தொடுஞ்செய்த
[49.] [வி]ஷ்ணுக்க[ள்] ஒ[ரு]வ[ர்] [ரு*]
[50.] [இ]நமுழமெ[ம] பதிஞல்வி-
[51.] [ர]லெ நா[ன்கு] தொளைச்சுற்-
[52.] [றிவ் அ[று[வி]ரலெ நா[ன்]த
[53.] [டெ]ளை உசரத்து [வ]-
[54.] [தூ]வீஂதி ஒ[ன்]று ॥— [சா*]
[55.] [இ]நெ[ாடு]ங்கூடச்செ-
[56.] [ப]த மூவிரலெ நான்கு

*West face.*

[57.] தொளை நீளத்து ஒரு
[58.] விரலெப் நான்கு தொ-

[59.] ணா அகலத்து ஒருவி:
[60.] ரல் உசரத்து மொடுமூ
[61.] வழி ஒன்று ||— ]எ*] இவ-
[62 ] ர்க்குக்குடுத்தன ||— [அ*] தா-
[63.] ழ்வடம் ஒன்றிற்கொ-
[64 ] த்த புஞ்சைமுத்து
[65.] நானூற்று முப்பதினு-
[66.] ல் நிறை கழஞ்சரை-
[67.] யெ இரண்டு மஞ்சாடி-
[68 ] யுங்குன்றிக்கு விலை
[69.] காசு கால் ||— [கூ*] தாழ்வடம்
[70.] ஒன்றிற்கொத்த புஞ்-
[71.] சைமுத்து எண்ணூ-
[72.] ற்றெண்பத்தெழினு-
[73.] ல் நிறை முக்கழஞ்ச-
[74.] ரைக்கு விலை காசு அ-
[75.] ணை ||— [ம*]

ஷெ கல்வெட்டின் விளக்கம் :

*( அபிமானவல்லி அளித்தது )*

முதல் இராஜராஜனின் தேவியருள் ஒருத்தியாகிய அபிமானவல்லி தஞ்சைப் பெரியகோயிலில் ' இலிங்கபுராணதேவர் ' திருமேனியை எழுந்தருள் வித்து அதற்கு அணிகளும் அளித்துள்ளாள் o ' திருமாலொடு நான்முகனும் தேடியும், தேடொணுத் தேவனுக அமையும் திருவுருவே ' லிங்க புராணர் திருமேனி, இக்காலத்துச் சிவாலயங்களில் கருவறையின் பின் பகுதியில் உள்ள ' லிங்கோத்பவர் ' இதனுள் ' லிங்கபுராணதேவர் ' எனப் பெறுகிருர். " சிவபெருமான் அழற்பிழம்பானுர்; திருமால் ஏனமாகிப் பாத கமலங்களைத் தேடினுர். பிரமன் அன்னம் மீதிவர்ந்து அண்ணல் முடி எங்குளது ? என ஆய்ந்தான். அடிமுடி காணவியலாது இருவரும் அயர்வுற்றனர் " என்பது புராணநுல்களுட் கண்டது. இவ்வரலாற்றை விளக்கும் வகையில் செப்புத் திருமேனி செயவித்தாள் இவள்.

---

o Ref : *1:* S. I. I. Vol. II No, 44

'லிங்க புராணதேவர் திருமேனியில் நான்கு திருஉருவங்கள் உள்ளன. 1. லிங்கபுராணதேவர். 2. சடைமுடியண்ணல். 3. பிரம்மா. 4. விஷ்ணு.

லிங்கபுராணதேவர் திருமேனி 'பீடத்துக்குமேல் ஜடாபாரம் வரை' இருபத்தோரு விரல் ஆறுதோரை உயரமுடையது. ஒருமுழம் பதினொருவிரல் இரண்டு தோரை சுற்றளவுடையது. ( இது ஒரு சிவலிங்கத் திருவுரு ).

இவரோடு தோற்றமாக எழுந்தருள்விக்கப்பட்ட திருமேனி ( சிவபெருமான் ) 'ஜடைக்குமேல் கேசம்' வரை பன்னிருவிரல் நான்கு தோரை உயரமுடையது. நான்கு திருக்கரங்கள் உடையது.

லிங்கத்தோடும் கூடச் செய்த பிரம்மர் ஒருவர். இவர் திருமேனி, எழு விரல் உயரமும் நான்கு திருக்கரமும் உடையது. கனமாகச் செய்யப் பெற்றது.

லிங்கத்தோடும் கூடக் கனமாகச் செய்த 'மஹாவிஷ்ணுக்கள்' வராக முகமுடையவர். எழுவிரல் உயரம் நான்கு திருக்கரமுடையவர். இவரனைவரும் ஒரு பத்ம பீடத்தின்மேல் எழுந்தருளி இருந்தனர். இப்பீடத்தோடு ஒரு கோமுகம் செய்விக்கப்பட்டிருந்தது என்பது கல்வெட்டிற்கண்டது.

அபிமானவல்லி இத்திருமேனிக்கு இரு தாழ்வடங்களைத் தந்தாள். இவற்றுள் முதலாவது தாழ்வடம் 430 முத்துக்களையுடையது. காற்காசு விலை மதிப்புடையது. மற்றொன்று 887 முத்துக்கள் கோக்கப்பட்டது. மூன்று கழஞ்செடையும் அரைக்காசு மதிப்பு முடையது என்பது இக்கல்வெட்டால் அறியப்பெறுகிறது.

**அருப்புக் கோட்டை :**

o இதே போன்று இராமநாதபுரம் மாவட்டம் அருப்புக் கோட்டையில் உள்ள சுந்தரேசுவரர் கோயிலில் இலிங்க புராணதேவர் எழுந்தருளுவிக்கப் பெற்றதாக அக்கோயில் கல்வெட்டு கூறுகிறது. இது இலிங்கோத்பவ மூர்த்தியாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

திருமால், பிரமன் இருவராலும் முழுமையாகக் காண முடியாத இறைவன் திருக் கோலத்தை,

" *அயன் மால் அறிதற்கரிய* **சோதியன்** "

" வெள்ளத்து மாலவனும் வேத
முதலானும் அடியினையும் திரு
முடியையும் காண அரிதாய சங்கரனை "

என்றெல்லாம் சுந்தரர் பெருமான் போற்றுகின்றார்.

சிவன் சக்தியோடு இருந்தால் தான் அருள்கிடைக்கும், இல்லாவிட்டால் சிறிதளவும் கிடைக்காது, என்பதனால் திருவண்ணாமலையில் உள்ள இரண்டு

---

o *இந்துமதம் அழைக்கிறது டிசம்பர் - 1993 பக்கம் 49 - 51.*

சிற்பங்கள் (வழிபாட்டில் உள்ளவை) சுவாமியும் அம்பிகையும் உடனுக நிற்க, பிரமனும், திருமாலும் தேடி அலைந்த பிறகு அவர்களுக்குத் திருவருள் கிட்டுகிறது.

**ஸ்ரீபால் வண்ண நாதேஸ்வரர் :**

திருநெல்வேலி மாவட்டத்தில் சங்கரநயினர்கோவில் வட்டம் கரிவலம் வந்த நல்லூரில் உள்ள ஸ்ரீபால் வண்ண நாதேஸ்வரர் ஆலயத்தில் இலிங்கோத்பவ உற்சவத் திருமேனியானது இன்றும் வழிபாட்டில் உள்ளதனைக் காணலாம். இதுவும் மிகப் பழமையான திருமேனியாகும். இத்திருமேனி எழுந்தருளுவித்ததை பற்றிய கல்வெட்டுச் செய்தி கிடைக்கச்செய்ய ஆராய்ச்சியாளர் முன் வரவேண்டும்.

**திருவண்ணமலைக் கல்வெட்டுகள் :**

திருவண்ணமலை ஸ்ரீ அருணசலேஸ்வரர் ஆலயத்தில் விளங்கும் கல்வெட்டுகளில் பதிவு செய்யப்பட்ட மொத்தக்கல்வெட்டுக்கள் 119. இவை களில் பெரும்பாலன சோழர் காலத்தன. திருவிளக்கேற்றல், திருமஞ்சனம், திருநந்தனவனம், திருவமுது, திருவெழுச்சி, அடியார்க்கு அமுதளித்தல் முதலிய பல அறங்களுக்காக நிலம், பொன், கால்நடை முதலியவற்றை அளித்தமையை அறிவிக்கின்றன. பாண்டியர், பல்லவர், ஹொய்சளமன்னரான வீரவல்லாள தேவர், விஜயநகரத்துராயர், தஞ்சாவூர் நாயக்கர் மற்றும் வணிகர், வேளாளர் முதலியவர்கள் கல்வெட்டுக்களும் காணக் கிடக்கின்றன.

**x 11 - 12ஆம் நூற்றுண்டுகளில் :**

முதல் இராஜேந்திரனுடைய காலத்தில் (கி. பி. 1038.) திருவண்ணமலை, மதுராந்தக வளநாட்டுப் பெண்ணை வடகரைத் திருவண்ணமலை என்றும், மூன்றும் குலோத்துங்கன் (கி. பி. 1179.) காலத்தில் இராஜராஜ வளநாட்டு வாணகோப்பாடி பெண்ணை வடகரை அண்ணநாட்டுத் திருவண்ணமலை என்றும், மேற்படிசோழனுடைய 27ம் ஆட்சி ஆண்டில் (கி. பி. 1204) வாண கோப்பாடிப் பெண்ணை வடகரை அண்ணநாட்டுத் திருவண்ணமலை என்றும், விஜயநகர இராயர்கள் காலத்தில் ஜெயங்கொண்ட சோழமண்டலத்துச் செங்குன்ற கோட்டத்துப் பெண்ணைவடகரை வாணகோப்பாடி அண்ணநாட்டுத் தனியூர் திருவண்ணமலை என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இதனல் திருவண்ணமலையின் உள்ளடங்கிய வளநாட்டுப் பெயர் முதலில் மதுராந்தகவளநாடு என்றிருந்து, பிறகு இராஜ ராஜ வளநாடு என்று மாறி, இறுதியில் ஜெயங்கொண்ட சோழமண்டலம் ஆயிற்றென்றும், இம்மண்டலத்தின் உட்பிரிவாகிய செங்குன்றக் கோட்டத்தினுள் அண்ணநாட்டுத் தனியூராகக் குறிக்கப்பட்டதென்றும் அறியக்கிடக்கும்.

---

*x தருமை ஆதீன வெளியீடாகிய திருமுறை 1ல் காண்க. 1911ல் வெளிவந்த S; Iல் நூலில் காண்க.*

பல்லவர் காலத்திற்கு முந்திய கல்வெட்டொன்றும் இல்லாமையால், கோயில் செங்கற்சுதை மாடமாக இருந்ததென்றும், மலையின்மேல் அண்ணாமலையார் கோயில்கொண்டிருந்திருக்க வேண்டுமென்றும் யூகிக்க வேண்டியுள்ளது. முதற்பிராகாரத்துச் சுவரில் கங்கைகொண்ட இராஜேந்திரன் கல்வெட்டு (1028) காணப்பெறுவதால், இதற்கு முன்பே கருங்கல் திருப்பணி நடந்திருக்கவேண்டும், முதற்பிராகாரத்து விளங்கும் ஏகாம்பரநாதர் கோயில், சிதம்பரேசர் கோயில் ஆகிய இரண்டின் சுவர்களிலும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டுச் சாஸனங்கள் காணப்படுகின்றன. கிளிக்கோபுரத்து 33 கல்வெட்டில் பழைமையுடைய விரராஜேந்திர சோழனது இரண்டாவது ஆட்சியாண்டின் (கி. பி. 1063) முன்பே கருங்கற் திருப்பணியாயிருக்க வேண்டும். திருக்காமக் கோட்டமுடைய உண்ணாமுலைநாச்சியார் கோட்டம் தனியாக 12ம் நூற்றுண்டில் அமைக்கப்பட்டது. கல்வெட்டுக்களில் திருக்காமக் கோட்டம் எனக் குறிக்கப்பெறும்.

**13 – 14 ஆம் நூற்றுண்டுகளில்:**

பதின் மூன்றும் நூற்றுண்டின் நடுப்பகுதியில் எழுந்த கல்வெட்டுகளில் விராகவன் திருமதில், வாணதிராயன் திருமதில், திருவேகம்பமுடையான் திருமதில் முதலியன குறிக்கப்பட்டுள்ளன. அம்மையப்பன் சந்நிதிக்கு இடையில் மேற்பக்கத்தில் நங்கையாழ்விசுவரம் என்னும் கோயில் பல்லவ குடும்பத்தைச் சேர்ந்த ஒரு அரசியால் (கி. பி. 1269ல்) எடுப்பிக்கப் பதினடிக் கோலால் பதின்முன்றரைகுழி விற்றுப் பதினுயிரம் பொற்காசு பெற்றுக் கட்டியபகுதி இன்று இல்லை. கிருஷ்ணதேவராயர் (கி. பி. 1516ல்) ஆயிரங்கால் மண்டபத்தையும், எதிரிலுள்ள திருக்குளத்தையும், பதினெரு நிலையிலுள்ள கோபுரத்தையும், வேறுபல திருப்பணிகளையும் அமைத்தமை அறியப்படுகிறது. பல்லவமன்னனுன கோப்பெருஞ்சிங்கனும், அவன் மகன் வேணவுடையானும் செய்த திருப்பணிகள் மிகப்பல. பூஜைக்கும் திருப்பணிக்குமாக "அண்ணாமலைநாதர் தேவதானப்பற்றுக்களும், அண்ணாநாட்டு நாற்பாக் கெல்லைக் குட்பட்ட நன்செய் புன்செய் ஆக உள்ள நிலத்திற்கு ஆயம் பாடி காவலால் வந்த நெல்லும் காசாயமும் மற்றும் எப்பேர்ப்பட்ட பல்லாயங்களும்" இவன் தானமாக ஈந்தான்.

கல்வெட்டுக்களில் காணப்பெறும் கோயில் அதிகாரிகள் ஸ்ரீ ருத்திரர், ஸ்ரீ மாகேசுரர், ஸ்ரீ மாகேசுரக் கண்காணி செய்வார், தானத்தார், தானபதி மாகேசுரர், தேவகன்மிகள், கோயிற் கணக்கர், ஸ்ரீ காரியஞ்செய்வார் எனப் பலராவர். இவரில் ஸ்ரீ மாகேசுரர், தர்மசாசனங்கள் ஒழுங்காக நடைபெறக் காரியம் பார்ப்பவராவர்.

அண்ணாமலைநாதருக்கும் உண்ணாமுலை அம்மைக்கும் பிச்சதேவர் முதலிய மூர்த்திகட்கும் திருப்பள்ளி எழுச்சி, சிறுகாலை சந்தி, உச்சிப்போது, இரவை, அர்த்தசாமம் முதலியகாலங்களில் அமுது முதலியவற்றிற்கு நிலம் அளித்தமை அறியலாம். சில சாஸனங்களில் பிரமநாயனர் பெரியமடத்து முதலியார், வையந் தொழுவார் பெரியமடத்து முதலியார், ஊருக்குப்பெரிய

மடத்து முதலியார், திருவண்ணாமலை உடையார் திருமுற்றத்தே இராஜேந்திர சோழன் சாலை, காங்கேயன்மடம், அம்மைமடம் முதலியன அறியப்படும் செய்திகள்.

நெய், மிளகு, உப்பு, தயிர், அடைக்காய், வெற்றிலை, சீரகம், வாழைப் பழம், வாழையிலை முதலியன நெல்லளந்து பெறப்பட்டவை. மங்கையர்க்கரசி என்னும் நங்கை தன்னாபரணங்களைவிற்ற பொருள் கொண்டும், நெல்லைக் கொண்டும் ஏரிபுதுக்கி உதவினள் என்ற செய்தி கல்வெட்டால் அறியப்படுகிறது.

**முக்கிய சாசனங்கள் :**

இத்தலத்துக் கல்வெட்டுகள் பல்லவர்கள் காலத்திலேயே ஏற்பட்டு இருந்தபோதிலும், பின்னால் நிகழ்ந்த பல புனரமைப்புகளால் பாழாக்கப்பட்டு, மறைந்துவிட்டன. கிடைக்கும் சில முக்கிய சாசனங்களைக் காண்போம்.

**o அருணாசலேசுவரர் கருவவறை : தெற்குச் சுவர் :**

வீர பாண்டியன் தலைகொண்ட சோழ மன்னன் பரகேசரிவர்மன். இது அனேகமாய் இரண்டாம் பராந்தகனாக இருக்கலாம். விளக்கு எரிக்க 90 ஆடுகள் தானமளித்ததுபற்றி.

**அதே சுவர் :**

அதே சுவரில் சேர அரசி கிழானடிகள் விளக்கிற்குப் பொன் அளித்தது பரகேசரிவர்மன் காலத்தியது 90 ஆடுகள் விளக்கு எரிவிக்க அளித்தது. இப்படிச் சில இடங்களில் இதே கொடைபற்றிப் பொறிக்கப்பட்டுள்ளது, ராஷ்டிரகூட மன்னன் கன்னர தேவனுடையது. இம்மன்னன் சிறந்த சிவபக்தன். தென் னாட்டின்மீது படையெடுத்தபோது, கலாரசிகனான இவன் ஆலயங்களையும் சிற் பங்களையும் பாழாக்கவில்லை. மயருகக் காஞ்சியில் இருந்த கயிலாயநாதர் கோயிலைக் கண்டு பிரமித்துத் தன் ஊரிலும் இதேபோன்ற தளி ஒன்று அமைத் தான். மூன்றாம் கிருஷ்ணனான இவன் 20 பசுக்கள் தானமளித்தான்.

**இதே கருவறை : மேற்குச்சுவர் :**

மதுரைகொண்ட பரகேசிவர்மனான முதலாம் பராந்தகன் விளக்கிற்காக 90 ஆடுகள் வழங்கியது.

**முதற்பிரகாரம்: தெற்குச் சுவர்:**

உடையார் முதலாம் ராசேந்திர சோழதேவன்: *(கி. பி. 1012-43)* அரச னின் பணியாள் நிலம் அளித்தது. உடையார் முதலாம் ராசேந்திர சோழன் நிலமளித்தது.

---

o திருவண்ணாமலை - மணிவாசகர் பதிப்பகம் - *1993*. பக்கம்: *62* to *66*, *97* to *108*.

**இதே பிரகாரம்: மேற்குச் சுவர் :**

சாசனச் செய்யுள்: சகலலோக சக்ரவர்த்தி, மல்லைக் காவலன் என்று புகழ்படுகிறது, அரசன் ஆபரணங்கள் அளித்தது, அவன் மைந்தன் கட்டடம் அமைத்தது. குமாரன் தெலுங்கர்களை வடக்கே துரத்திய பெருமை வர்ணிக்கப்படுகிறது. (அநுபந்தம் பார்க்க). பாண்டிய மன்னன் மாறவர்மன் – திரிபுவன சக்ரவர்த்தி குலசேகர தேவன் என்ற பெயருமுண்டு. இவன் 54 பசுக்களை அளித்தான்.

**வடக்குச் சுவர்:**

திரிபுவன சக்ரவர்த்தி மூன்றும் ராசராசதேவன் (கி. பி. 1216-48). இது ஒரு முக்கிய சாசனம். திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவர் எடுப்பித்த ஒரு பிரதிமத்திற்கு நிலம் தானம் அளித்தது பற்றி, அதில் மெய்கண்டாரின் காலம், பரஞ்சோதி முனிவரின் சீடன், சைவசித்தாந்தத்தின் சாரமான சிவஞான போதம் இவைகளைப்பற்றிய குறிப்பு, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது.

**முதல் பிரகாரம்: வடக்குச் சுவர் :**

கோப்பெருஞ்சிங்கன் காலம், விசயகண்ட கோபாலன் சிறிய நம்பி மதுசூதன தேவன் என்பது வெளியாகிறது. மூன்றும் ராசராச தேவன் காலத்தே ஒரு அரசி பாத்திரங்களும், ஆபரணங்களும் அளித்தது. மூன்றும் ராசராச தேவன் – கவனிப்பின்றிப் பாழாகக் கிடந்த நிலத்தைப் பலர் கூடிச் சீராக்கினது. மூன்றும் ராசராச தேவன் – இருவர் இளவரசன் பிருதிகங்கரையரின் பணியிலிருந்து நீங்குவதில்லை என்று ஒரு உடன்படிக்கை ஏற்படுத்திக்கொண்டனர். போசள மன்னன் பிரதாப சக்கரவர்த்தி, மூனறும் வீரவல்லாளன் - காலம் - நில தானம், தமிழ்ச் செய்யுள்: பொன்பரப்பினுன் என்ற மகதைப் பெருமானைப் புகழ்கிறது. (அநுபந்தம் பார்க்க) தமிழிலும் கிரந்தத்திலும் இச்சாசனம் பொறிக்கப்பட்டுள்ளது. போசள மன்னன், மூன்றும் வீர வல்லாளன் காலம் விளக்குத் தானம் பற்றியது. பல்லவன் கோப்பெருஞ்சிங்கன் காலம்.

**ஏகாம்பரநாதர் சந்நிதி: தெற்குச் சுவர்:**

சோழ அரசன் விசய ராசேந்திரன் காலம் நில தானம் பற்றியது.

**தெற்கு, மேற்குச் சுவர்:**

விசயநகர மன்னன் வீர சதாசிவ மகாராயர்; இப்பொழுது ஆற்காடு என வழங்கப்படும் பகுதி ராசநாராயணபுரம் எனறிருந்தது.

**சிதம்பரேசுவரர் சன்னதி: தெற்குச் சுவர்:**

சோழ மன்னன் முதலாம் ராசாதிதேவன் காலம்; இச்சாசனம் முக்கியத்துவம் கொண்டது. ஒருவன் மான்வேட்டைக்குச் சென்றான். அவன் எய்த அம்பு தவறுதலாக ஒரு மனிதனைக் கொன்றுவிட்டது. தண்டனை என்ன? இக்கோயிலுக்கு 58 பசுக்களையும் ஒரு எருதையும் தானமளித்தான்!



படம் - 47

திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேஸ்வரர் ஆலயமும் திருக்குளமும்



படம் - 48
திருவண்ணமலை
ஸ்ரீ அருணசலேஸ்வரர் ஆலயத்தில்
கருப்பக்கிருக மேற்கு கோஷ்ட மாடத்தில் பிரபையுடன்
கூடிய இலிங்கோத்பவர் திருமேனி

[ நன்றி : French Indology - Pondicherry ]

**கிளிக்கோபுரம்:**

பல்லவ கோப்பெருஞ்சிங்கன் காலம்: முதல் மரியாதை அளிப்பதுபற்றி. தமிழ் வசனமும் செய்யுளும் : சோழ அரசன் குலோத்துங்க சோழன் காலம்: நில தானம். மலையன் வெண்ணி வென்றுனுக்குக் கரிகாலச் சோழன் என்ற பெயர் இருந்தது. கிரந்த லிபி: கோபுரம் பாஸ்கர மந்திரியால் கட்டப்பட்டது என்ற விவரம். பங்காள நாட்டு அதிகாரி பிருதிவி கங்கன் வன்னிய மாதேவன். குலோத்துங்கசோழன் காலம்: சில வணிகர்கள் மூன்று திருவிழாக்களிலும் கொடிகள் அளிப்பதாக வாக்களித்தனர். எதிரிலிச் சோழ சம்புவராயன் காலம்; விளக்கு தானம், விக்ரம சோழ சம்புவராயன் காலம் : குளம் சீராக்கியது.

**வல்லாளன் கோபுரம்:**

அரியண்ண உடையார் என்ற விசய நகர மன்னன் ஹரிஹரன் II; நெல் காசு வீரவல்லாள வாயிலைக் காப்பவனுக்கு அளித்தது. வீர விருபண்ண உடையார் II என்ற முதலாம் விருபாட்ச விசயநகர அரசன் கோயிலுக்கு வரிகளை நீக்கியது. விசய நகர சதாசிவ மகாராயர் கோயிலைச் சேர்ந்த சில கிராம வரிகளை நீக்கியது.

**இரண்டாம் பிரகாரம் மேற்குச் சுவர்:**

விருபண்ண உடையார் காலம்: தந்தைக்காக வேதபாராயணம் செய்ய 5 விற்பன்னர்களுக்கு நிலம் அளித்தது.

**ஆயிரங்கால் மண்டபம் ஒரு கற்பாளம்:**

விசய நகர அரசன் கிருஷ்ணதேவராயரின் பிரதாபங்கள் பற்றியது. உதயகிரி, மகாபத்ர, அத்தன்கி, வினுகொண்டா, பெல்லாங்கொண்டா, கொண்ட வீடு முதலியவைகளை வெற்றி கொண்டது. ஒட்ர தேச பிரதாபருத்ரன் குமாரன் வீரபத்ரய்யாவை மன்னித்தது. இவ்வெற்றிகளுக்காகத் தரணி கோட்டையில் அமரேசுவரர் கோயில் கட்டியது. திருவண்ணாமலையில் ஆயிரங்கால் மண்டபம் கட்டியது. அதனருகில் திருக்குளம் வெட்டியது, 11 நிலை கோபுரம் கட்டியது போன்றவைகள் விரிவாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

**கற்பூர விளக்கின் கோப்புப் பிடி:**

மைசூர் சமஸ்தான அமைச்சனான வேங்கடபதி ராயன் ஒரு பானை பொன் அளித்தது.

(இப்படிக் கிடைக்கக்கூடிய கல்வெட்டுகளைக் கொண்டு இத்தல வரலாற்றை ஒருவாறு தெரிந்து கொள்ளலாம்) x

---

x இவை தவிர பல திருப்பணிகளும், அறங்களும் நகரத்தார் செய்துள்ளனர். இதனை அண்ணாமலை நூலில் பக்கம் 67 to 74 வரை காண்க.

செய்யுள் சாசனங்கள் :

## மகதைப் பெருமாள்

இடம் : திருவண்ணுமலை கோயில், முதல் பிராகாரம் வடக்குப் பக்கச் சுவர்.

திருவண்ணுமலை கோயிலிப் பொன் வேய்ந்தான் ஆதலால் இவனுக்குப் பொன் பரப்பினுன் மகதைப் பெருமாள் என்ற பெயர்கிடைத்தது.

### சாசனம் - I

தாரு முடியு முரசுந் தமக்குரிய
பாரு முடங்பெறுவர் பார்வேந்தர் - வீரப்
பெருமாள் மகதேசன் பேரெழுதித் தத்தம்
திருமார்பி லாளோலை செய்து 1

வன்மதுரை விட்டு வடகடலான் மால்வழுதி
தென்மதுரை பட்டின்று தென்கடலான் - நன்னுதலாய்
மல்லார்தோள் மாகதர்கோ மான்முனிந்தால் மன்னவருக்
கெல்லாங் கடலோ விடம் 2

ஆழந் தருகடல் வையத் தரசு
செலுத்திய செங்கோ லரசெல்லாம்
வேழந் தருகொடை வாண திவாகரன்
விதிமுறை செய்வது மெய்கண்டீ
ரீழந் திறையிடு மாணிக் கப்படி
யடுமின் தென்னரி ரிடீராகிற
சோழன் திறையிடும் யானைக் குங்களி
யிடுமென் றிருமீது சொன்னேமே 3

பாரோங்கு கொற்றக் குடைவாணன் பல்புரவித்
தேரோன் திருவுத் திராடநாள் - பேருவமை
குன்றெடா மாலியானைக் கோவேந்தர் வீற்றிருப்ப
ரின்றெடா வின்றெடா னென்று 4

தென்னர் முதலா வுலகாண்ட செம்பொன்முடி
மன்னர் பெருவாழ்வும் வாள்வலியு - மின்னு
முருவத் திகிரி யுயர்நெடுந்தேர் வாணன்
புருவக் கடைவளையப் போம் 5

தீய்ந்து பொழிலாகா சிந்தி நகரர்கா
தூந்து மணிநீர்த் துறையாகா - வேந்துமுலைப்
பூனுகா மாறி விழவாகா பொன்னெடுந்தேர்
வாணுகா வென்னுதார் மண் 6

பொருப்பிற் கரிய புகர்முக வெங்கூற்றின்
மருப்பிற் றுளைப்புண்ண வாரா - திருப்பில்
வடியுளவாஞ் செவ்வேல் மகதையர் கோமா
னடியுளவாம் வேந்தற் கரண் 7

அரிந்த கழைகழற்காற் போர்வளவர் கோனை
வரிந்த திறைக்காக வாணு - தெரிந்தானை
வாங்கினு யென்று வழுதியர்கள் தாங்கலங்கி
யேங்கினுர் பாரிழந்தோ மென்று 8

முருகுந்து காஞ்சியும் வஞ்சியும் கொண்டமொய் தார்மகதன்
திருகுங் கழைகழல் வீக்கிய நாள்கி பராந்தகனிற்
பெருகுங் குருதிப் புனல்வாய் தொறும்பில வாய்மடுத்துப்
பருகுங் கழுதுடன் செம்மைகொண் டார்க்கும் பனிக்கடலே 9

மட்டியன் றேறிய தார்புனை வாண புரந்தரனி
வெட்டியன் றேகொன்ற வெண்மணிப்பொடி யுதிரவெள்ளத்
தொட்டியென் றேனுந் துலைவதுண் டேதுலை யாதபந்தி
கட்டியன் றேதெவ்வர் பாய்பரித் தானை கலக்குவதே 10

கொங்குங் கலிங்கமுங் கொண்டகண் டாகொடித் தேருதியர்
தங்கும் பதிகொண்ட வாணுதி பாதணி யாததென்கொல்
பொங்குஞ் சினப்படை வங்கார தொங்கன் புரண்டுவிழச்
செங்குன்ற மின்று பிணக்குன்ற மாக்கிய தேர்மன்னனே 11

வாரொன்று முலையாய்மற் றவரொன்றும்
பழுதுரையார் மகதை வேந்தன்
போரொன்று புரியாமுன் பெரியகுறிச்
சியில்லெழுந்த புகையே கண்டாய்
காரன்று கனலெரியை மின்னென்று
தளரேல் காரைக் காட்டி
லூரொன்று மதிள்விழுந்த பேரொலியும்
உருமதிர்வ தொக்கும் காணே 12

முன்பொரு படைக்கடலை விட்டரச ராஞர்
மூலதன மும்பரியு முறைமுறை பரிவாரித்
தென்பகை யடக்கியபின் வாணகுல திபன்
செய்ததனி யாண்மைவட திக்கி லறிகிற்பீர்
பண்டொரு பொருப்பரண் விடாமலைய மானைப்
போரயிலில் பொருத போதொரு பெரும்போர்
வன்பறை தவிர்த்தொரு குதிரைவலி யாலவனை
வாட்டுறை தவிர்த்ததொரு கோலின் வலியாலே 13

மன்னுள் திகிரிக்கை வாணன் வடுகெறிந்த
எண்ணு யிரஞ்சூழ்ந்த எண்டிசையும் - புண்வடிந்த
நீரே நீர்காக நிழலே நிழல்நெடும்பேய்த்
தேரேதேர் செஞ்சேறே சேறு 14

எண்மேல் மிகும்பரித் தேர்மக தேசன் இகல்விசையப்
பெண்மேல் விரும்பிவெம் போர்செய்த நாள்பின் குடாவடுகர்
விண்மேல் நடந்து வடுகென்னு நாமம் விலக்குண்டபின்
மண்மேல் நடந்தது தேசிமுன் னான வடுகொன்றுமே 15

சூழும் பிணவணைமேல் தோய்கழுகின் பந்தற்கீழ்
வீழுங் கழுதினங்கள் மெய்காப்ப - வாழுந்தன்
தொன்னகரே போல்வடுகர் துஞ்சத் துயிற்றியதே
மன்னவர்கோன் மாகதர்கோன் வாள் 16

மடலளவு நிறைந்தொழுகு மதுமலர்த்தார்
மகதேசன் வையங் காக்கும்
அடலளவி லணிநெடுந்தேர் ஆயு ...
... ரமனே வணங்கா வரச ரியாவர்
கடலளவு நடந்தவன் கன்னகு ரக்கு
மவன்றன் கதிர்வேல் மன்ன
குடலளவு நடந்ததுமற் றுலகளவு
நடந்ததவன் ஒருசெங் கோலே 17

தெற்கோடி மாமறுகில் தென்மணலைச் சேயிழையா
ரமரற்கு மருந்தாக்க வல்லவா - யாற்கு
முயிராய் செங்கோ லுயர்நெடுந்தேர் வாணன்
அயிரா வதத்தி வடி 18

சொல்லி விடுசெரு மீனவர் சூழு முரிமைகொ டாழ்கட
லெல்லி விடுபட வெறுவ ரேனு மியமபுரி யேறுவர்
கொல்லி விடுமுத காதிபர் கூளி கருதில சூர்புக
வல்லி விடும்அயி ராவதம் வாணன் வரவிடு நாளையே 19

வேலை நெடுங்கல்லும் வெட்டும் விரற்குகையு
மூலை தெரிக்கு முடித்தலையு - நாளை
மதிவா ணுதல்மடவாய் காணலாம் வான
நதிவா ரணன்தொடர்விட் டால் 20

## சாசனம் — II

### ஸ்வஸ்திஸ்ரீ பொன்பரப்பினுன மகதைப் பெருமாள் கவி

நாமான் அரவிந்த மான்விந்த மான்முடி நாகர்சென்னிப்
பூமான் விரும்பும் புகழ்மக தேசற்குப் போர்வழுதி
வாமா னிறையிட்ட வன்னுள் துடங்கிஅவ் வானவர்தம்
கோமான் றனதென் றிரான்அம ராபதிக் குஞ்சரமே. 1

மேருவின்மேல் வென்று கயல்பொறிந்த வார்த்தையிலும்
வாரிபட வேலெறிந்த வார்த்தையிலும் - கார்விலங்கு
முன்னிட்ட வார்த்தையிலுந் தென்னவர் மாகதற்குப்
பின்னிட்ட வார்த்தை பெரிது. 2

## சாசனம் — III

### கோப்பெருஞ்சிங்கனும் ஆட்கொண்ட தேவனும்

கார்வளர் மேனிக் கமலக் கண்ணன்
பார்வள ருந்திப் பல்லவர் பெருமான்
சகல புவனச் சக்ர வர்த்தி
கூடலவனி யாளப் பிறந்தான்
கோப்பெருஞ் சிங்கன் குரைகழற் காடவன் 5

சொன்மறை யாக்கன் சுடர்வா ளெடுத்துப்
பின்வர நடந்து பிலந்திறந் தருளிய
காவலர் தம்பிரான் கண்ணு ரமுத
ரருண மால்வரைப் பெருமாள் தமக்குச்
செய்த திருப்பணி தெரிந்தெடுத் துரைப்பிற் 10

காதிற் கம்பியுங் கதிர்மணி மகுடமும்
செங்கதி ரெரிக்கு மங்க சுத்தமும்
பாகு வலயமும் பைம்பொற் பலதொழிற்
திருவுடை யாடையுந் திருக்கழற் கிழிடும்
பேதை பாதமும் பிறங்கிருட்கண்டமு 15

மிளஞா யிற்றி னெழிலிறந் தோன்ற
வளர்மா ணிக்க வாளிவெயி லரும்பிய
விரிகடலவனி யாளப் பிறந்தான்
திருவா சிகையுஞ் சிங்கா சனமும்
கற்பக விருக்கமு மூத்தின் பந்தலு 20

மோடரி மைக்க னுமையிசை பாடி
ஆடிய வதிருங் கழற்பெரு மானுக்
கினிமா ணிக்க மிலங்கச் செய்த
பரதம் வல்ல பெருமா ளென்னுந்
திருவா சிகையுஞ் சிறந்த செங்கதி 25

ரொளிவி ளங்குமா ணிக்கமுந் துளங்கும்
வயிரமுங் கட்டிய பொலன்தருக் கூட
மஞ்சனமுங் கண்ணு ரமுதர்காமக் கோட்டத்
துண்ணு முலையா முமையவள் தனக்குப்
பருமணி நிரைத்த திருவுடை யாடையும், 30

வென்றிவேல் கொண்டு குன்றெறி முருகன்
செந்நிற மேனியுந் தேவியர் மேனியு
மைஞ்ஞிறத் தோகை வண்ணமு மடையப்
பொன்னிற மாக்கிய பொற்பணி பலவு
மல்லி காவல னிச்சங்க மல்லன் 35

பல்லவர் வேந்தன் பரதம் வல்லன்
கூடலவனி யாளப் பிறந்தான்
செய்தன விப்பணி யடங்கவு மிவன்சிறந்
தூழி காலம் வாழி இவன்மகன்
வாடா வாகைக் காடவ குமாரன் 40

வான்புகழ் மல்லியு மயிலையுங் காஞ்சியுந்
தண்டக நாடுந் தண்புனற் பாலியும்
பெண்ணையுங் கோவலும் மெவுகையு முடையவ
னெண்ணருஞ் சிறப்பில் யாவரு மதித்த
விருதரில் வீரன் விறல்வீராசனி 45

சூரிய நாதன் காதற் குமரன்
குடதிசைக் கருநடர் தென்புலங் குறுகவும்
வடதிசைத் தெலுங்கர் வடக்கிருந் தழியவும்
போர்பல கடந்து பொருந்தா மன்னவ
ராரெயிற் சேர்ந்தூர் மலையர ணழித்து 50

நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பில்
வெல்புக ழனைத்து மேம்படத் தங்கோன்
வாகையுங் குரங்கும் விசையமுந் தீட்டிய
வடல்புனை நெடுவே லாட்கொண்ட தேவன்
கடகரி முனைமுகங் கடந்த காங்கயன் 55

கண்ணு ரமுதர் கனங்குழை யாகத்
தண்ணு மலையற் கன்புகெழு நெஞ்சில்
விருப்புடன் செய்த திருப்பணிக் கோவை
யாவையு மெடுத்துப் பாவல ருரைப்பில்
நின்ற தொல்புகழ் நிலமுழு தளித்த 60

வென்றி புனைதோ ளாட்கொண்ட தேவன்
வேணு வுடையா னென்னும் பெயரா
னீனாள் வாழ நிலைபெறச் செய்த
பெருமா ளமருந் திருமண் டபமும்
மருக்கமழ் கனகத் திருப்பளி யறையுந் 65

திருவமு தேற்றும் பெருமண் டபமும்
விரிவுடன் செய்திருக் காக்கள்ளியும்
பெருவிற லவனி யாளப் பிறந்தான்
திருமண் டபமுஞ் செழுமலர் தொடுத்த
கண்ணி வாடாது கண்ணிமை யாது 70

மண்மிசை நடவா வானோர் வலம்வர
வெண்மதி நிலவில் விளங்குசுட ரெரிக்கும்
படித்தள மென்னவும் படிமூன் றுக்கு
மடித்தள மென்னவு மடையா மன்னவர்
மலைத்தளம் பறித்தம் மன்னவர் சுமந்தச் 75

சிலைத்தளங் கொண்டு செய்சிலைத் தளமு
மெல்லையி லுகந்தொறுஞ் செல்வந் தொலையாது
வரும்படி வகுத்த நிச்சங்க மல்லன்
பெரும்பண் டாரமும் பிறைமுடிப் பெருமா
ளின்னாள் வந்தி ருந்தமை தோன்றவு 80

முன்னு ளமைந்த முறைமை காணவும்
வாட்டடங் கண்ணியர் மனைதொறும் பலிகொளக்
காட்டிய வடிவிற் கங்காள வேடமும்
வான்முகத் தமரர் வணங்கச் செய்த
நான்முகத்தெரு நாயகி தனக்கு 85

மப்படி வகுத்த வணிநெடுந் தெருவுஞ்
செப்பிய கதிரவர் திசைவலம் போதும்
சோதி நன்மணி வீதிகள் இலங்கக்
கலைபயில் தவத்தோர் நிலைபெற விருக்க
மலைவகுத் தனைய காங்கயன் மடமுங் 90

கானிற் பயிலுங் கடவுளர் தமக்கு
வேனிற் றென்றல் வியன்பெருங் கவரி
யிருமருங் கிரட்டவு மிமையவர் துதிக்கவு
மருமணம் பெருகிய வாள்வல பெருமாள்
திருநெடுந் தோப்புந் தீத்த மாகிய 95

வமுத நன்னதி யனைத்திலுந் தூய
தமிழுடு காத்த பெருமாள் தடாகமும்
வண்டிசை பாடல் மதுமலர் வாசங்
கொண்ட காடவ குமாரன் தேப்புங்
கலின் வெம்பரிக் கதிர்வழி தடுத்த 100

வவனி யாளப் பிறந்தான் தோப்பும்
தலநிகழ் சேனைத் தலைவன் தோப்பும்
வெம்மை நாளில் வெஞ்சுர னடைந்தவர்
தம்மனங் குளிரத் தண்டலை நிழற்செயு
மம்மை மடமு மைய்ய னேரியும் 105

வெற்பகந் துளைத்தெனக் கற்புடை யராகி
யடனெடும் பிலத்தி லமுதுவந் தெழுந்த
வடிவாள் வல்ல பெருமாள் கிணறு
மளிமுரல் கமலமு மாம்பலு மலர்ந்து
குளிர்புனற் காடவ குமாரன் தடாகமுங் 110

குன்று கரையன்ன கோடுயர் நெடுங்கரை
வென்று மலைகொண்ட பெருமா ளேரியுஞ்
சுரர்தரு நெருங்கிய சோலையு மொவ்வாப்
பரதம் வல்ல பெருமாள் தோப்பும்
வளஞ்சிமி ழூர்க்கு மடவிளம் பாளை 115

விரைகமழ் வீர ராயன் தோப்புந்
தவநெறிச் சுந்தரர் தம்பெருங் குலத்திற்
த ... ... ... ற்துச் செய்து குடுத்த
கடலென நிறைந்து கார்வயல் விளைக்கும்
விச் ... ... சை நிச்சங்க மல்ல னேரியுங் 120

காங்கயன் தடாகமுங் காங்கயன் மடமும்
பூங்கமழ் சோலையும் பொற்புடன் விளங்க
யிவ்வகை யாவையுஞ் செய்தன னதனுற்
பாவை பாகன் சேவடித் தாமரை
யணிந்த சென்னியர் பார்க்குங் கண்ணிலை. 125

ரணிந்த நீற்றின் ராகம நன்நெறி
படிந்த நெஞ்சினர் பரசமையங் கடலே
கடிந்த வாணையர் கண்ணுதற் பெருமா
ளுதி நாதனுய் வேடங் கொண்டு
பாய்புனற் கங்கை யாயிர முகங்கொண் 130

டார்த்தெழு மன்னு ளேற்றுக் கொண்ட
திருந்திய பிறைமுடி யருந்தவச் சடாதர
ராதியி லஞ்செழுத் தோதிய தொண்டரென்
றெண்ணிய நாற்பத் தெண்ணு யிரவருந்
திருவரு ளிவன்மேல் வைத்தன. 135

ரிருநிலந் தன்னி லினிதுவாழ் கெனவே

## பல்லவர் சிற்பபுரம் திருவண்ணுமலை சாசனமும் :

பல்லவ மன்னர்கள் காலத்தில் சிவ விஷ்ணு பேதம் கிடையாது. அவர்களுடைய மெய்கீர்த்திகள் எதை எடுத்துக கொண்டாலும் சிவ விஷ்ணு வணக்கங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். அத்துடன் சிவனுடைய பராக்கிரமங்களை விரிவாக எடுத்துக் கூறுவதாகவும் விளங்கும். உதாரணமாக உதயேந்திரம் செப்பேடுகளைப் பார்ப்போம். இதில் முதல் வணக்கத் துதி.

மூவுலகத்தின் மேன்மைக்காக சுமேரு மலையின் உச்சியிலே சிறந்த யோகநிலையில் அமர்ந்திருப்பவரும், சூரிய சந்திரர்களை இருகண்களாக உடையவரும். உமையுடன் கூடியவரும், ஆதரவுடன் மேன்மை அளிக்கக்கூடிய உதயசந்திரனுக்குத் திருவை அளிக்கக் கூடியவரும், சடைமுடி தரித்தவருமான சதாசிவனை நான் நமஸ்கரிக்கிறேன்.

இப்பல்லவர்கள் தொண்டை மண்டலத்தில் பல சிவன் கோயில்களை எழுப்பினர்கள். காஞ்சி மாநகரில் கயிலாய பர்வதத்தைப் போலவே ஒரு 'கயிலாயம்' என்ற தளியைச் சமைத்தனர். அவர்கள் எடுப்பித்த கோயில்களில் பலதடவைகள் திரும்பத் திரும்ப 'கங்காதர' சிற்பத்தைச் செதுக்கி மகிழ்ந்தனர். காஞ்சிக்கு வெகு தொலைவில் உள்ள திருச்சிராப்பள்ளி குகைக்கோயிலில் கூட கங்காதரனைச் செதுக்கினர்கள்.

சாதாரணமாக சிவன் கங்கையை பூமிக்கு அளித்த புராணம் நமக்குத் தெரியும். பகீரதன் தவத்தை மெச்சி, சிவபெருமான் கங்கையின் வேகத்தினல் புவி அழிந்து விடாமல் இருக்க தன் தலையில் தாங்கினர். சிவபெருமான் சிற்பங்கள் எல்லாவற்றிலும், தலைமுடியில் கங்கை செதுக்கப்பட்டிருக்கும்.

இந்த கங்காதர திருவிளையாடலைக் காட்டும் சிற்பங்களில் சிவன் தன் தலையில் கங்கையைத் தாங்கும் உருவம் இருக்கும். அது நமக்குப் புரிகிறது. ஆனல் அதே புடைச்சிற்பத்தில் ஒரு மூலையில் நாய் ஒன்று செதுக்கப் பட்டிருக்கும். இது என்ன புதிர் ? இந்த அதிசயத்தை கிரிஸ்டியன் கல்லூரி

தத்துவப் பேராசிரியர் திரு. லாக்வுட் கண்டுபிடித்து எக்ஸ்பிரஸ் தினத்தாளில் வினு ஒன்று எழுப்பினர். இந்த நாய் ஏன் இங்கு செதுக்கப்பட்டது ? கங்கா தரனுக்கும் நாய்க்கும் என்ன சம்பந்தம் ? என்று பல ஆண்டுகளாக இந்த வினுவுக்கு விடை காணப்படாமலேதான் இருக்கிறது.

மயிலை சீனி வெங்கடசாமி எழுதிய சாசனச் செய்யுள் மஞ்சரி என்னும் நூலில் திருவண்ணுமலை செய்யுட் சாசனங்களை குறிப்பிடும் பொழுது.

> ஞுதி நாதநாய் வேடங்கொண்டு
> பாய் புனற்கங்கை யாயிர முகங்கொண்
> டார்த் தெழு மன்னனேற்றுக் கொண்ட
> இருந்திய பிறைமுடி யருந்தவச் சடாதர

அண்ணுமலையார் கோயில் முதல் பிரகாரம், மேற்கு சுவர்சாசனத்தின் ஒரு பகுதியான மேற்கண்ட வரிகளை விளக்கும் பொழுது கங்காதர சிற்பத்தில் நாய் இருப்பதைக் காட்டுகிறது. இது பல்லவர் பாணி என்று கூறுகிருர்.

சிவபெருமான் நாய் வேடம் பூண்பதை கங்காதர சிற்பம் உணர்த்துகிறது இது திருவண்ணுமலை சாசனத்தின் சிறப்பு.

# சிவராத்திரி வழிபாடு

ஆன்ம நற்கதிக்கு விரதம் ஒரு முக்கியமானதாகும். சோமாவாரம், சுக்கிரவாரம், பிரதோஷம், சிவராத்திரி முதலிய விசேட காலங்களிலே ஒரு பகல் மாத்திரம் உண்டு அல்லது உபவாசமாய் விரதம் இருக்கின்ற வழக்கம் நமது வாழ்வில் ஏற்பட்டிருக்கிறது.

**அநுபவம் :**

விரதம், விசேடமுடையது என்பதனை அநுபவத்தில் காண்கிறோம். அநேக நோயாளிகள் தமக்கிருந்த குன்மம், காசம் இன்னும் மரணகண்டத்துக்கு ஏதுவான நோய்கள் வந்து விருந்துங்காலத்தில் திருக்கார்த்திகை விரதம், சுக்கிரவாரவிரதம், கந்த சஷ்டி விரதம், முதலான விரதங்களில் எதாவது ஒன்றினை நினைந்து இருப்பதாகப் பிரார்த்தித்துக் கொண்டு அவ்வாறு விரதம் இருக்க நோய்கள் நீங்கி சுகமடைகின்றனர். வேறு சிலர் பல இஷ்ட சித்திகளைப் பெறவும் வேறு சிலர் இல்லற வாழ்வில் உண்டாகும் துன்பங்களைக் களைய விரதம் இருப்பதும் இன்று அநுபவத்தில் இருந்து வருகிறது.

**விரதம் ஒரு புண்ணியமே :**

மனத்தினால் சிவனைத் தியானித்தல் மாத்திரம் இன்றிச் சரீரத்தாலும், ஆலயங்களிலே சென்று வலம் வருதல் வணங்குதல் முதலியனவும், கைகளால் அர்ச்சித்தலும் வாயினால் அவன் புகழ் பாடுதலும் விரதம் புண்ணியமாகின்றன. உடல்வாட விரதமிருந்தாலும், அவ்விரத நேரத்திலே மனம் கசிந்துருக சிவனைத் தியானித்து வழிபடுதலும் புண்ணியமாகும். புண்ணியங்கள் பல இருப்பினும் இறைவனை வழிபடுதலே சிறந்த புண்ணியமாகும்.

நாம் எப்பொழுதும் செய்யும் உலக வியாபரங்களில் மனம் வாக்குக் காயங்களைச் செலுத்தாமலும், தீய பாபச்செயல்களைச் செய்யாமலும், உணவினைப் பொருட்படுத்தாமலும் சரீர சுகங்களை விரும்பாமலும் அன்போடு இறைவனாகிய சிவனை வழிபடுதலால் நமது வாழ்க்கையில் ஒரு விசேடச் செயலாகும், பொதுவாக விரதம் இருப்போர் யாவரும் பெரியோர்களின் சொற் கேட்டு முடிந்தவரை அநுட்டித்தல் நன்று.

**சிவபெருமான் விரதங்கள் :**

1. கார்த்திகை மாதம் திங்கட்கிழமைகளில் விரதம் கைக்கொண்டு தொடர்ந்து ஒவ்வொரு திங்கட்கிழமையும் இருப்பது.

2. வியாழக்கிழமைகளில் மவுனத்துடன் உணவு உண்ணாமல் இருப்பது. ( இது தட்சிணாமூர்த்தி சொருபத்தினை நினைந்து வாக்குதல்தானம் பெறல் )

3. மார்கழி திருவாதிரை நாளில் இருப்பது.

4. உமாமகேஸ்வர விரதம் - கார்த்திகை மாதம் பௌர்ணமியில் அநுட்டிப்பது.

5. மாசி, தேய்பிறை சதுர்தசியான **சிவராத்திரி நன்னாளில்** தொடங்கி ஒவ்வொரு மாத சிவராத்திரியிலும் மேற்கொள்வது.

6. கேதாரேஸ்வர விரதம புரட்டாசி வளர்பிறை அட்டமி முதல் ஐப்பசி அமாவாசை வரை மேற்கொள்வது.

7. பங்குனி உத்திர நாளில் திருமண விரதம் கடைப்பிடிப்பது.

8. தை சதுர்த்தசியில் பாசுபத விரதம் இருப்பது.

9. வைகாசி வளர்பிறை அட்டமியில் அட்டமி விரதம் இருப்பது.

10. ○ எல்லா பௌர்ணமி நாட்களில் விரதம் இருந்து சிவனைத் தரிசிப்பது.

11. பிரதோஷ விரதம் அநுட்டித்து சிவாலய தரிசனம் செய்வது முதலான பல விரதங்கள் சிவ விரதங்களாகும். ○

**பெயர்க் காரணம் :**

இராத்திரி என்பது இருட்காலமாகும். உண்மையான இருட்காலம். இறைவன், உலகம் முழுவதையும் ஒடுக்கி நிற்கும் காலமாகும். இதனைச் 'சர்வ சங்கார காலம்' என்றும் பிரளயம் என்றும், ஊழி முடிவு என்றும் கூறுவர். சாதாரணமாக இரவு ஒளியின்றி, உயிர்களின் நாட்டமின்றி அமைதியாக விளங்கும். அதைப் போல சர்வ சங்கார காலத்தில் பஞ்ச பூதங்களும் மாயையில் ஒடுங்கிக் கிடத்தலால் எங்கும் செறிந்த இருள்தான் இருக்கும். தனு, கரண, புவன போகங்கள் இன்றி உயிர்கள் செயலற்றுக் கிடப்பதால் எங்கும் குறைவற்ற அமைதியே நிலவும். இந்தப் பேரிருளில் தனித்து நிற்பவன் சிவபெருமான் ஒருவரே. இந்த ஒடுக்க நிலையாகிய இரவு சிவனுக்கே உரிய தாதலால் அது "**சிவராத்திரி**" எனப்பட்டது. அதனைக் குறிப்பது மாசிமாத கிருஷ்ண சதுர்த்தசியில் வரும் மகாசிவராத்திரியாகும்.

**புராணமும் பயனும் :**

ஊழிக்காலத்தில் உயிர்கள் உய்ய உமாதேவியார் நான்கு சாமங்களிலும் சிவபெருமானுக்குப் பூசை செய்தார். சிவபெருமான் உலகம் மீளவும் தோன்றுதற்பொருட்டுத் திருநடனம் செய்தார். அதனால் ஒடுங்கிய உயிர்கள்

---

○ பௌர்ணமி விசேஷ பூசை சம்பந்தமாக பிறிதொரு இடத்தில் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது.

○ விரதங்கள் பற்றி – "சோமாஸ்கந்தர்" நூலில் பக்கம் 218 முதல் 233 வரை காண்க.

மீளவும் தநு, கரண, புவன போகங்களைப் பெற மீண்டும் உலகத் தோற்றம் உண்டாயிற்று. அது விடியற்காலை நேரம், " **லிங்கோத்பவகாலம்** " எனப்படும். உமாதேவியார் சிவபெருமானை வணங்கி, அந்த இரவை சிவராத்திரி எனக் கொள்ளும்படி வேண்டினார். அந்நாளில் வழிபடுவோர்க்கு முக்தி முதலான எல்லா நன்மைகளும் அருள வேண்டினார்.

**இலிங்க புராணம் :**

பிரமனும் திருமாலும் ஒரு சமயம் தாம் தாம் தலைவர் எனத் தருக்க மிட்டபோது அவர்கட்கு உண்மை உணர்த்தி அருள்புரிய இறைவன் இலிங்கத் திருமேனி உருவில் சோதிப் பிழம்பாக நின்றார். இத்திருமேனியை அவர் கொண்ட காலம் சிவராத்திரி என்று இலிங்க புராணம் கூறுகிறது.

**சிவராத்திரிக்குரிய x சிறப்புத் தலம் :**

வேடன் ஒருவன் மகாசிவராத்திரியன்று காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். பகல் முழுவதும் காட்டிலே அலைந்தான், ஒன்றும் கிடைக்காததால் இரவில் கொடிய விலங்குகளுக்கு அஞ்சி ஒரு வில்வ மரத்தில் ஏறிக்கொண்டான். ( புலி ஒன்று துரத்தியமையால் மரத்தில் ஏறிக் கொண்டான் என்ற வரலாறு, திருவைகாவூர் தலத்திற்குச் சான்றாக உள்ளது ) இரவில் தான் உறங்காம லிருக்க ஒவ்வொரு இலையாகப் பறித்துப்போட்டான். அவ்விலைகள் யாவும் கீழிருந்த சிவலிங்கத்தின் மீது பட்டு அருச்சனை போல அமைந்தன. அவ்வேடனுக்கு சிவராத்திரி பூசைப்பலன் கிடைத்தது.

**விரதமிருக்கும் முறை :**

சிவராத்திரிக்கு முதல் நாளே சிவபூசைக்கு வேண்டியவற்றைச் சேகரித்துக் கொள்ள வேண்டும். விரதநாளன்று, விடியற்காலையில் எழுந்து நீராடி நித்திய கடன்களை முடித்து சிவாலயம் சென்று வழிபட வேண்டும். திருமுறைப் பாடல்களைப் பாராயணம்செய்து உண்ணாவிரத மிருக்க வேண்டும். இரவில் விழித்திருந்து சிவநாமத்தை ( பஞ்சாட்சரத்தை - தீட்சாகாலத்தில் குரு உபதேசித்தபடி ) ஜெபித்துக் கொண்டு நான்கு சாமங்களிலும் பின் வருமாறு பூசை செய்தல் வேண்டும்.

**x விரதங்களில் சிறப்புடையது :**

சிவபிரானைக் குறித்து இருக்கும் விரதங்களுள் சிவராத்திரி விரதமே சிறந்தது. இதன் பெருமையை வாதுளம் காமிகம், சுப்ரபேதம் ஆகிய

---

**x " திருவைகாவூர் " - தலத்திற்குச் செல்ல கும்பகோணத்திலிருந்து நகரப் பேருந்து வசதி உள்ளது. (சுவாமிமலை தலத்திலிருந்து மிக அருகில் உள்ளது) இறைவன் - வில்வவன நாதர், இறைவி – வளைக்கை நாயகி, தீர்த்தம் - எமதீர்த்தம், தலமரம் - வில்வமரம், ஞானசம்பந்தர் பாடல் பெற்றது; 1957ல் குடமுழுக்கு நடந்தது.**

***x ஆதீன மெய்கண்டார் இதழ் 1985 பிப்ரவரி***

ஆகமங்களும் கந்தபுராணம், சிவராத்திரி புராணம் மற்றும் பல புராணங்களும் கூறுகின்றன.

> '' மறைகளிற் சாமம், மகங்களிற்புரவி,
> மகமலைகளில் மகமேரு
> நிறைபுனல் நதியில் கங்கை, ஓர் ஐந்தாய்
> நிகழ்ந்த பூதத்தின் ஆகாயம்,
> முறைதெரி சுரரில் கருமுகிலூர்தி
> முதன்மை பெற்றுயர்ந்ததே போல்
> அறைதரு விரதம் அனைத்தினும் உரைக்கும்
> அரனிர வதிகமென் றறிமின் ''

எனும் சிவராத்திரி புராணப்பாடலால் அறியலாம்.

பன்னிரு கோடி சிவலிங்கத் திருமேனிகளை வழிபடுவதால் கிடைக்கும் சிவபுண்ணியம் சிவராத்திரி தினத்தில் ஒரு சிவலிங்கத்தைப் பூசித்துப் பெறலாம். நம் பரத கண்டமேயன்றி நேபாளம் இலங்கை, சயாம் போன்ற நாடுகளில் இன்றும் இச்சிவராத்திரி விரதம் கொண்டாடப்படுகிறது.

**செய்ய வேண்டுவன :**

இந்நன்னாளில் சிவாலயங்களில் சிறப்பொடு பூசனை விடியளவும் நான்குமுறை நிகழ்வதும், சிவ பூசகர்கள் தம் இல்லங்களில் தமது ஆன்மார்த்த பூசையினைச் செய்வதும், சிவனடியார்கள் கண் விழித்து சிவதரிசனம் செய்வதும், சிவத்தியானத்தில் இருப்பதும், சிவபுராணங்களைக் கேட்பதும், பன்னிரு திருமுறைகளை ஓதுவதுமான செயல்களில் ஈடுபட வேண்டும்.

**பல நிலைகளில் சிவராத்திரியைப் போற்றும் புராணங்கள் :**

பிரமனுக்கும் திருமாலுக்கும் நல்லறிவு தோற்றுவிக்கப் சிவபெருமான் இலிங்கோத்பவ மூர்த்தியாக எழுந்தருளியபோது தேவர்கள் பூசித்த காலமே சிவராத்திரியாகும். இதன் காலம் மாசிமாதம் தேய்பிறை சதுர்த்தசி இரவு பதினான்கு நாழிகை கால அளவிலாகும். இந்நேரத்தை இலிங்கோத்பவ காலம் என்பர்.

பிர்மகற்பம் ஒன்றில் உமாதேவியார் நான்கு யாமத்திலும் சிவபிரானைப் பூசித்தார். இவ்வாறு தான் பூசித்த இவ்விரவைச் சிவராத்திரி எனப் போற்ற வேண்டும் என்று சிவபெருமானிடம் வேண்டி வரம்பெற்றார்.

உமாதேவியார் விளையாட்டின் பொருட்டு சிவபிரானது கண்களைப் பொத்தஇருள்கவிந்தது. அப்போது தேவர்கள் பெருமானைச் சிந்தித்த காலமே சிவராத்திரி.

பாற்கடலில் தோன்றிய விடத்தைச் சிவபிரான் விழுங்கிய போது அவ்விடம் அவரைப் பற்றாமல் இருக்க இரவுமுழுவதும் தேவர்கள் பூசித்தகாலம் சிவராத்திரி என்பர்.

கற்பம் ஒன்றின் இறுதியில் அண்டமனைத்தும் இருண்ட ஞான்று உருத்திரர்கள் அவ்விருள் நீங்கச் சிவபெருமானைப் பூசித்தகாலம் சிவனிரவு என்பார்.

( இன்னும் பலபுராணக்கதைகள் உள்ளன )

**ஐவவகை சிவராத்திரிகள் :**

1. மகாசிவராத்திரி, 2. யோக சிவராத்திரி, 3. நித்ய சிவராத்திரி, 4. பட்ச சிவராத்திரி 5. மாத சிவராத்திரி என ஐவகைப்படும்.

**1. மாக சிவராத்திரி :**

இது மாசிமாதம் தேய்பிறை சதுர்த்தசியன்று வருவது. இன்று திரியோதசி முப்பது நாழிகைக்கு சதுர்த்தசி வியாபித்திருப்பது உத்தமம் திரயோதசி 11¼ நாழிகைக்கு சதுர்த்தசி வியாபித்திருப்பது மத்திமம் திரயோதசியின்றி சதுர்த்தசி இருப்பது அதமம்.

சதுர்த்தசியோடு அமாவாசை ஒரு விநாடியேனும் கூடியிருப்பின் அன்று இவ்விரதம் பூசனை கூடாது. இதற்கு முன்தினமே அனுஷ்டிக்க வேண்டும். அமாவாசை சம்பந்தப்படாத சிவராத்திரி அமையா விட்டால் அன்று பிராயச்சித்தம் செய்து பெருமானைப் பூசிக்க வேண்டும். ஆனுல் இக்குறை சதுர்த்தசியோடு திருவோணம் அல்லது திங்கட்கிழமை சேர்ந்திருந்தால் நீங்கிவிடும் என்பர்.

இந்த மாசி மாதத் தேய்பிறை நாளில் வரும் இம்மகா சிவராத்திரியே பிரதானமாகும்.

**2. யோக சிவராத்திரி :**

திங்கட்கிழமை யன்று சூரிய உதயமுதல் அறுபது நாழிகைவரை அமாவாசை இருப்பது ( சோமவார அமாவாசை ) யோக சிவராத்திரி எனப்படும்.

**3. நித்திய சிவராத்திரி :**

ஒரு வருடத்தில் வரும் வளர்பிறை தேய்பிறை சதுர்த்தசி இருபத்து நான்கு ஆகும்.

**4. பட்ச சிவராத்திரி :**

தைமாதம் தேய்பிறை பிரதமையன்று தொடங்கி பதின்மூன்று பதினன்கு நாட்கள் விரதம் இருப்பதாகும்.

**5. மாத சிவராத்திரி :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | சித்திரை | — | தேய்பிறை | — | அஷ்டமி |
| 2 | வைகாசி | — | வளர்பிறை | — | அஷ்டமி |
| 3 | ஆனி | — | வளர்பிறை | — | சதுர்த்தசி |
| 4 | ஆடி | — | தேய்பிறை | — | பஞ்சமி |
| 5 | ஆவணி | — | வளர்பிறை | — | அட்டமி |
| 6 | புரட்டாசி | — | வளர்பிறை | — | திரயோதசி |
| 7 | ஐப்பசி | — | வளர்பிறை | — | துவாதசி |
| 8 | கார்த்திகை | — | வளர்பிறை | — | சப்தமி |
| 9 | கார்த்திகை | — | தேய்பிறை | — | அட்டமி |
| 10 | மார்கழி | — | வளர்பிறை | — | சதுர்த்தசி |
| 11 | மார்கழி | — | தேய்பிறை | — | சதுர்த்தசி |
| 12 | தை | — | வளர்பிறை | — | திரிதியை |
| 13 | மாசி | — | தேய்பிறை | — | சதுர்த்தசி |
| 14 | பங்குனி | — | வளர்பிறை | — | திரிதியை |

**வழிப்பட்டோர் :**

இவற்றுள் சித்திரையில் உமாதேவியும், வைகாசியில் - சூரியனும், ஆனியில் - ஈசானனும், ஆடியில் - முருகனும், ஆவணியில் - சந்திரனும், புரட்டாசியில் - ஆதிசேடனும், ஐப்பசியில் - இந்திரனும், கார்த்திகையில் - சரசுவதியும், மார்கழியில் - இலக்குமியும், தையில் - இடபதேவரும் வழிபட்டு பேறுபெற்றனர்.

**மகாசிவராத்திரி நான்கு காலங்களிலும் சிவபிரானை பூசிக்கும் முறை :**

| உபசாரம் | காலம் – 1 | காலம் – 2 | காலம் – 3 | காலம் – 4 |
|---|---|---|---|---|
| அபிடேகம் | பஞ்சகவ்யம் | பஞ்சாமிர்தம் | தேன் | கருப்பஞ்சாறு |
| ஆடை | சிவப்பு | மஞ்சள் | வெள்ளை | பச்சை |
| அலங்காரம் | வில்வம் | தாமரை | சாதிமல்லி | நந்தியாவர்த்தம் |
| அருச்சனை | தாமரை | துளசி | வில்வம் | நீலோத்பலம் |
| நிவேதனம் | பொங்கல் | பாயசம் | எள்ளன்னம் | சுத்தான்னம் |
| வேதம் | இருக்கு | யசுர் | சாமம் | அதர்வணம் |
| தோத்திரம் | (பன்னிரு திருமுறைகள், தியானங்கள்) | | | |

மற்றும் வில்வத்துடன் விளா, கிளுவை, மாவிலங்கை நொச்சி ஆகிய பஞ்ச வில்வத்துடன் சிவகரந்தை என்னும் பத்திரத்தையும் கொண்டு பூசித்தல் சிறப்பாகும்.

"மாசியின் அபரமிரேழ் வளர்சதுர்த்தசி இராவில்
தேசியாம் சிவனுர்முத்தி அளித்த விரதந்தன்னை
ஆசையான் மொழிந்தோர் கேட்டோர் அருந்துயர் ஒழிவர் என்றும்
நேசமாய் விரதநோற்பார் சிவபத நெறியிற் சேர்வார்"

- "சிவராத்திரிப்புராணம்"

சிவராத்திரியில் சிவபெருமானைப் பூசித்தோர் தரிசித்தோர் மட்டுமின்றி இதன் பெருமையினைக் கேட்டோரும் தம் வினை ஒழிந்து சிவபதம் பெறுவர் என்பதனை மேற்கண்ட சிவராத்திரிப்புராணப் பாடல் கூறுகிறது.

# பௌர்ணமி வழிபாடு

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி திருக்கோயிலில் பௌர்ணமி நாளில் நடைபெறுவது :

| மாதம் | அபிஷேக திரவியம் | நிவேதனம் |
| --- | --- | --- |
| சித்திரை | மருக்கொழுந்து | எலுமிச்சம்பழ அன்னம் |
| வைகாசி | சந்தனம் | சித்திரான்னம் |
| ஆனி | முப்பழம் | புளியன்னம் |
| ஆடி | திரட்டிப்பால் | நாரத்தம்பழ அன்னம் |
| ஆவணி | சருக்கரை | எள்ளன்னம் |
| புரட்டாசி | அதிரசம் | உளுந்தன்னம் |
| ஐப்பசி | அன்னபிஷேகம் | சுத்தான்னம் |
| கார்த்திகை | தீபம் | பொரி |
| மார்கழி | பசுநெய் | சம்பா |
| தை | தேன் | சம்பா |
| மாசி | க்ருதகம்பளம் | சம்பா |
| பங்குனி | பசுந்தயிர் | சம்பா |

# — ஓம் காரணாகமத்தில் சிவாலய பௌர்ணமி பூஜாக்கிரமம் —

| மாதம் | குண்டம் | பிரதானஅபிஷேகதிரவியம் | புஷ்பம் | வஸ்திரம் | நிவேதனம் | பலன் |
|---|---|---|---|---|---|---|
| சித்திரை | சதுரசிரம் | "தவனம்" பலவித புஷ்பம் | முல்லை, கானற்பூ, மருக்கொழுந்து, வாழைப்பூ, கடப்பம்பூ | வெண்பட்டு | சுத்தான்னம் | லக்ஷ்மிகடாக்ஷம் |
| வைகாசி | பதுமம் | சந்தனம் | அலரிப்பூ, நெய்தல், செவ்வந்தி செந்தாமரை, பாதிரி, நெருஞ்சில், சிறுவழுதலை | மகிழம்பூவர்ண பட்டு | எள்ளன்னம் | சாலோகம் |
| ஆனி | விருத்தம் | பழ வர்க்கங்கள் | கடப்பம்பூ, சிவப்பு செண்பகம் தாமரை, நீலப்பாதிரி, வெள்ளை காக்கரட்டான் | பச்சை வஸ்திரம் | ஹரித்ரான்னம் | மனோரத நிறைவேற்றம் |
| ஆடி | ஷோட்ஷம் | திரட்டிப்பால் | ஊமத்தை, கருநெய்தல் | கருப்புப் பட்டு | பரமான்னம் (மூங்கிலரிசி) | சத்ருநாசம் |
| ஆவணி | திக்தளம் | சருக்கரை | விஷ்ணுகரந்தை, மல்லிகை புன்னை, காக்கரட்டான், செண்பகம், முல்லை | மாட்ப்புரு, வர்ணப்பட்டு | கோதுமைப் பொங்கல் | இகலோக காமியம் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| புரட்டாசி | யோனி | அதிரசம் | தேவதாரு, விஷ்ணுகரந்தை, பொன்னூமத்தை, வெள்ளறுகு தாமரை | சிவப்புப்பட்டு | நாரத்தை, எலு மிச்சை சாதம் | தனப்பிராப்தி |
| ஐப்பசி | திரிகோணம் | அன்னம் கறிவகை களுடன் | சங்குப்பூ, வில்வப்பூ, கொன்றை மகிழ், பட்டிப்பூ, முல்லை | பொன்வர்ணப் பட்டு | சர்க்கரைப் பொங்கல் | தர்மார்த்த காமம் |
| கார்த்திகை | அஷ்டகோணம் | தீபம் | குடமல்லிகை, கருநெய்தல், மல்லிகை, பலாசு, பாக்குப்பூ | பலவித வர்ணப் பட்டு | க்ருதான்னம் | பிரமஹத்தி தோஷ நிவிர்த்தி |
| மார்கழி | பஞ்சகோணம் | நெய் | வெண்தாமரை, செந்தாமரை, தும்பை, வெள்ளறுகு | சுவர்ணவஸ்திரம் | பொங்கல் | மோக்ஷம் |
| தை | சப்தகோணம் | தேன் | ஒற்றை நந்தியாவர்த்தனம் இரட்டை நந்தியாவர்த்தனம் தாமரை | வெள்ளை வஸ்திரம் | குளான்னம் | ஆயுள் அபிவிருத்தி |
| மாசி | ஷட்கோணம் | நெய்யில் நனைத்த கம்பளம் | தாமரை, மகிழம்பூ, மருதோன்றி, மல்லிகை | மஞ்சள் வஸ்திரம் | பாலன்னம் | ஆரோக்கியம் |
| பங்குனி | அர்த்தசந்திரா காரம் | தயிர் | கொக்கிறகு, தாமரை, காசித் தும்பை | வெள்ளையும் மஞ்ச ளும் கலந்தவஸ்திரம் | பிட்டு | புத்திர ஐசுவரி யப் பிராப்தி |

இத்துடன் மகாநைவேத்தியம், ஆராதனம், வாத்தியம், உத்ஸவம், தானம், ஆகியவைகள் நிகழ்த்தவேண்டியது.

*Ref: திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண்: 244-பேரூர்ப் புராணம், மேலும் இதனை விரிவாகக்காண மெய்கண்டார் நான்காம் ஆணடு மலர்-4 இதழ் 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12,

# திருமுறைப் பதிகங்கள்

திருஞானசம்பந்தர் அருளிய திருவண்ணாமலைப்பதிகம் :
( முதல் திருமுறை ) (பண் - நட்டபாடை)

திருச்சிற்றம்பலம்

உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண மறுமே. 1

தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
தூமாமழை துறுவல்மிசை சிறுநுண்துளி சிதற
ஆமாம்பிணை யணையும்பொழி லண்ணாமலை யண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினை யிலரே. 2

பீலிம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழை முத்தம்
சூலிம்மணி தரைமேனிறை சொரியும்விரி சாரல்
ஆலிம்மழை தவழும்பொழி லண்ணாமலை யண்ணல்
காலன்வலி தொலைசேவடி தொழுவாரன புகழே. 3

உதிரும்மயி ரிடுவெண்டலை கலனாவுல கெல்லாம்
எதிரும்பலி யுணலாகவு மெருதேறுவ தல்லால்
முதிருஞ்சடை யிளவெண்பிறை முடிமேல்கொள வடிமேல்
அதிருங்கழ லடிகட்கிட மண்ணாமலை யதுவே. 4

மரவஞ்சிலை தரளம்மிகு மணியுந்துவெள் ளருவி
அரவஞ்செய முரவம்படு மண்ணாமலை யண்ணல்
உரவஞ்சடை யுலவும்புன லுடனாவது மோரார்
குரவங்கமழ் நறுமென்குழ லுமைபுல்குதல் குணமே. 5

பெருகும்புன லண்ணாமலை பிறைசேர்கட னஞ்சைப்
பருகுந்தனை துணிவார்பொடி யணிவாரது பருகிக்
கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல் பரவி
உருகும்மன முடையார்தமக் குறுநோயடை யாவே. 6

கரிகாலன குடர்கொள்வன கழுதாடிய காட்டில்
நரியாடிய நகுவெண்டலை யுதையுண்டவை யுருள
எரியாடிய விறைவர்க்கிட மினவண்டிசை முரல
அரியாடிய கண்ணாளொடு மண்ணாமலை யதுவே. 7

ஒளிறூபுலி யதளாடைய னுமையஞ்சுதல் பொருட்டால்
பிளிறூகுரல் மதவாரண வதனம்பிடித் துரித்து
வெளிறூபட விளையாடிய விகிர்தன்னிரா வணனை
அளறூபட அடர்த்தானிட மண்ணாமலை யதுவே. 8

விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும்
அளவாவணம் அழலாகிய வண்ணாமலை யண்ணல்
தளராமுலை முறுவல்உமை தலைவன்னடி சரணே. 9

வேர்வந்துற மாசூர்தர வெயினின்றுழல் வாரும்
மார்பம்புதை மலிசீவர மறையாவரு வாரும்
ஆரம்பர்த முரைகொள்ளன்மி னண்ணாமலை யண்ணல்
கூர்வெண்மழுப் படையானல்ல கழல்சேர்வது குணமே. 10

வெம்புந்திய கதிரோனொளி விலகும்விரி சாரல்
அம்புந்திமு வெயிலெய்தவன் அண்ணாமலை யதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுண் ஞான
சம்பந்தன தமிழ்வல்லவர் அடிபேணுதல் வதே. 11

திருச்சிற்றம்பலம்

முதல் திருமுறை ; ( பண் - தக்கேசி )

திருச்சிற்றம்பலம்

பூவார்மலர்கொண் டடியார்தொழுவார் புகழ்வார்வானோர்கள்
மூவார்புரங்க ளெரித்தவன்று மூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின் றதிரவெருவித் தொறுவின்னிரையோடும்
ஆமாம்பிணைவந் தணையுஞ்சார லண்ணாமலையாரே. 1

மஞ்சைப்போழ்ந்த மதியஞ்சூடும் வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத் தடக்குமதுவு நன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும் வேடர்மடவா ரிதணமதுவேறி
அஞ்சொற்கிளிக ளாயோவென்னு மண்ணாமலையாரே. 2

ஞானத்திரளாய் நின்றபெருமா னல்லவடியார்மேல்
ஊனத்திரளை நீக்குமதுவு முண்மைப்பொருள்போலும்
ஏனத்திரளோ டினமான்கரடி யிழியுமிரவின்கண்
ஆனைத்திரள்வந் தணையுஞ்சார லண்ணாமலையாரே. 3

இழைத்தவிடையா ளுமையாள்பங்க ரிமையோர்பெருமானுர்
தழைத்தசடையார் விடையொன்றேறித் தரியார்புரமெய்தார்
பிழைத்தபிடியைக் காணுதோடிப் பெருங்கைமதவேழம்
அழைத்துத்திரிந்தங் குறங்குஞ்சார லண்ணுமலையாரே. 4

உருவிற்றிகழு முமையாள்பங்க ரிமையோர்பெருமானுர்
செருவில்லொருகால் வளையவூன்றிச் செந்தீயெழுவித்தார்
பருவிற்குறவர் புனத்திற்குவித்த பருமாமணிமுத்தம்
அருவித்திரளோ டிழியுஞ்சார லண்ணுமலையாரே. 5

எனைத்தோரூழி யடியாரேத்த விமையோர்பெருமானுர்
நினைத்துத்தொழுவார் பாவந்தீர்க்கு நிமலருறைகோயில்
கனைத்தமேதி காணுதாயன் கைம்மேற்குழலூத
அனைத்துஞ்சென்று திரளுஞ்சார லண்ணுமலையாரே. 6

வந்தித்திருக்கு மடியார்தங்கள் வருமேல்வினையோடு
பந்தித்திருந்த பாவந்தீர்க்கும் பரமனுறைகோயில்
முந்தியெழுந்த முழவினேசை முதுகல்வரைகண்மேல்
அந்திப்பிறைவந் தணையுஞ்சார லண்ணுமலையாரே. 7

மறந்தான்கருதி வலியைநினைந்து மாறுயெடுத்தான்தோள்
நிறந்தான்முரிய நெரியவூன்றி நிறையவருள்செய்தார்
திறந்தான்காட்டி யருளாயென்று தேவரவர்வேண்ட
அறந்தான்காட்டி யருளிச்செய்தா ரண்ணுமலையாரே. 8

தேடிக்காணுர் திருமால்பிரமன் தேவர்பெருமானை
மூடியோங்கி முதுவேயுகுந்த முத்தம்பலகொண்டு
கூடிக்குறவர் மடவார்குவித்துக் கொள்ளவம்மினென்
ருடிப்பாடி யளக்குஞ்சாரல் அண்ணுமலையாரே. 9

தட்டையிடுக்கித் தலையைப்பறித்துச் சமணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக் கொள்ளவேண்டா பேணித்தொழுமின்கள்
வட்டமுலையா ளுமையாள்பங்கர் மன்னியுறைகோயில்
அட்டமாளித் திரள்வந்தணையு மண்ணுமலையாரே 10

அல்லாடரவ மியங்குஞ்சார அண்ணுமலையாரே
நல்லார்பரவப் படுவான்காழி ஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்த பாடலான பத்துமிவைகற்று
வல்லாரெல்லாம் வானேர்வணங்க மன்னிவாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

[ திருவண்ணாமலைப் பதிகம் ]

திருநாவுக்கரசர் தேவாரம் : ( நான்காம் திருமுறை ) - [ திருநேரிசை ]

திருச்சிற்றம்பலம்

ஓதிமா மலர்கள் தூவி யுமையவள் பங்காமிக்க
சோதியே துளங்குமெண்டோட் சுடர்மழுப் படையினானே
ஆதியே யமரர்கோவே யணியணா மலையுளானே
நீதியா நின்னையல்லா னினையுமா நினைவிலேனே. 1

பண்டனை வென்றஇன்சொற் பாவையோர் பங்கநீல
கண்டனே கார்கொள் கொன்றைக் கடவுளே கமலபாதா
அண்டனே யமரர்கோவே யணியணா மலையுளானே.
தொண்டனே னுன்னையல்லாற் சொல்லுமா சொல்லிலேனே 2

உருவமு முயிருமாகி யோதிய வுலகுக்கெல்லாம்
பெருவினை பிறப்புவீடாய் நின்றவெம் பெருமான்மிக்க
அருவிபொன் சொரியுமண்ணா மலையுளா யண்டர்கோவே
மருவிநின் பாதமல்லான் மற்றொரு மாடிலேனே, 3

பைம்பொனே பவளக்குன்றே பரமனே பால்வெண்ணீற்றாய்
செம்பொனே மலர்செய்பாதா சீர்தரு மணியே மிக்க
அம்பொனே கொழித்துவீழு மணியணா மலையுளானே
என்பொனே யுன்னையல்லா லேதுநா னினைவிலேனே. 4

பிறையணி முடியினானே பிஞ்ஞகா பெண்ணோர்பாகா
மறைவலா விறைவா வண்டார் கொன்றையாய் வாமதேவா
அறைகழ லமரரேத்து மணியணா மலையுளானே
இறைவனே யுன்னையல்லா லியாதுநா னினைவிலேனே. 5

புரிசடை முடியின்மேலோர் பொருபுனற் கங்கை வைத்துக்
கரியுரி போர்வை யாகக் கருதிய காலகாலா
அரிகுல மலிந்தவண்ணா மலையுளா யலரின்மிக்க
வரிமிகு வண்டுபண்செய் பாதநான் மறப்பிலேனே. 6

இரவியு மதியும்விண்ணு மிருநிலம் புனலுங்காற்றும்
உரகமார் பவனமெட்டுந் திசையொளி யுருவமானாய்
அரவுமிழ் மணிகொள்சோதி யணியணா மலையுளானே
பரவுநின் பாதமல்லாற் பரமநான் பற்றிலேனே. 7

பார்த்தனுக் கன்றுநல்கிப் பாசுப தத்தையீந்தாய்
நீர்த்ததும் புலாவுகங்கை நெடுமுடி நிலாவவைத்தாய்
ஆர்த்துவந் தீண்டுகொண்ட லணியணா மலையுளானே
தீர்த்தனே நின்றன்பாதத் திறமலாற் றிறமிலேனே. 8

பாலுநெய் முதலாமிக்க பசுவிலந் தாடுவானே
மாலுநான் முகனுங்கூடிக் காண்கிலா வகையுணின்றாய்
ஆலுநீர் கொண்டல்பூக மணியணு மலையுளானே
வாலுடை விடையாயுன்றன் மலரடி மறப்பிலேனே. 9

இரக்கமொன் றியாதுமில்லாக் காலனைக் கடிந்தவெம்மான்
உரத்தினுல் வரையையூக்க வொருவிர லுநியினுலே
அரக்கனை நெரித்தவண்ணு மலையுளா யமரரேறே
சிரத்தினுல் வணங்கியேத்தித் திருவடி மறப்பிலேனே. 10

திருச்சிற்றம்பலம்

ஐந்தாம் திருமுறை :
[திருவண்ணுமலைப் பதிகம்] - [திருக்குறுந்தொகை]

திருச்சிற்றம்பலம்

வட்ட னம்மதி சூடியை வானவர்
சிட்ட னத்திரு வண்ணு மலையனை
இட்ட னையிகழ்ந் தார்புர மூன்றையும்
அட்ட னையடி யேன்மறந் துய்வனே. 1

வான னம்மதி சூடிய மைந்தனைத்
தேன னத்திரு வண்ணு மலையனை
ஏன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
ஆன னையடி யேன்மறந் துய்வனே. 2

மத்த னம்மத யானை யுரித்தவெம்
சித்த னத்திரு வண்ணு மலையனை
முத்த னம்முனிந் தார்புரமூன் றெய்த
அத்த னையடி யேன்மறந் துய்வனே. 3

காற்ற னக்கலக் கும்வினை போயறத்
தேற்ற னத்திரு வண்ணு மலையனைக்
கூற்ற னக்கொடி யார்புர மூன்றெய்த
ஆற்ற னையடி யேன்மறந் துய்வனே. 4

மின்ன னவினை தீர்த்தெனை யாட்கொண்ட
தென்ன னத்திரு வண்ணு மலையனை
என்ன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
அன்ன னையடி யேன்மறந் துய்வனே. 5

மன்ற னைம்மதி யாதவன் வேள்விமேல்
சென்ற னைத்திரு வண்ணா மலையனை
வென்ற னைவெருண் டார்புர மூன்றையும்
கொன்ற னைக்கொடி யேன்மறந் துய்வனே. 6

வீர னைவிட முண்டனை விண்ணவர்
தீர னைத்திரு வண்ணா மலையனை
ஊர னையுண ரார்புர மூன்றெய்த
ஆர னையடி யேன்மறந் துய்வனே. 7

கருவி னைக்கடல் வாய்விட முண்டவெம்
இருவி னைத்திரு வண்ணா மலையனை
உருவி னையுண ரார்புர மூன்றெய்த
அருவி னையடி யேன்மறந் துய்வனே. 8

அருத்த னையர வைந்தலை நாகத்தைத்
திருத்த னைத்திரு வண்ணா மலையனை
கருத்த னைக்கடி யார்புர மூன்றெய்த
அருத்த னையடி யேன்மறந் துய்வனே. 9

அரக்க னையல றவ்விர லூன்றிய
திருத்த னைத்திரு வண்ணா மலையனை
இரக்க மாயென் னுடலுறு நோய்களைத்
துரக்க னைத்தொண்ட னேன்மறந் துய்வனே. 10

திருச்சிற்றம்பலம்

## ஐந்தாம் திருமுறை :

[ திருவண்ணாமலைப் பதிகம் ] - [ திருக்குறுந்தொகை ]

திருச்சிற்றம்பலம்

பட்டி யேறுகந் தேறிப் பலவிலம்
இட்ட மாக விரந்துண் டுழிதரும்
அட்ட மூர்த்தியண் ணாமலை கைதொழக்
கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே. 1

பெற்ற மேறுவர் பெய்பலிக் கென்றவர்
சுற்ற மாமிகு தொல்புக ழாளொடும்
அற்றந் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே. 2

பல்லி லோடுகை யேந்திப் பலவிலம்
ஓல்லை சென்றுணங் கல்கவர் வாரவர்
அல்லல் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை யடையுமே. 3

பாடிச் சென்று பலிக்கென்று நின்றவர்
ஓடிப் போயினர் செய்வதொன் றென்கொலோ
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போகுநம் மேலைவி னைகளே. 4

தேடிச் சென்று திருத்தடி யேத்துமின்
நாடி வந்தவர் நம்மையு மாட்கொள்வர்
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போநம துள்ள வினைகளே. 5

கட்டி யொக்குங் கரும்பி னிடைத்துணி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனர்
அட்ட மூர்த்தியண் ணாமலை மேவிய
நட்ட மாடியை நண்ணநன் காகுமே. 6

கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்
பாணி நட்டங்க ளாடும் பரமனர்
ஆணிப் பொன்னண் ணாமலை கைதொழப்
பேணி நின்ற பெருவினை போகுமே. 7

கண்டந் தான்கறுத் தான்கால னாருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்குமண் ணாமலை கைதொழ
விண்டு போகுநம் மேலை வினைகளே. 8

முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யான்றனண் ணாமலை
சிந்தி யாவெழு வார்வினை தீர்த்திடுங்
கந்த மாமலர் சூடுங் கருத்தனே. 9

மறையி னானொடு மாலவன் காண்கிலா
நிறையு நீர்மையு னின்றருள் செய்தவன்
உறையு மாண்பினன் ணாமலை கைதொழப்
பறையு நாஞ்செய்த பாவங்க ளானவே. 10

திருச்சிற்றம்பலம்

## அருணாசலப்புராணம்

மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரும்
திருமாலும் மறையி னும்
பணிகொண்ட பாதலத்தும் பூதலத்தும்
மீதலத்தும் பரிந்து தேட
அணிகொண்ட பிரமாண்ட கோளகை பொன்
கோளகையாய் அழகு காட்ட
கணிகொண்ட ஒரு. வரையாம் ஒருவரை, யாம்
அகலாது கருத்துள் சேர்ப்பாம்,

— சைவ எல்லப்ப நாவலர்

## திருவருட்பா

உண்ணாமுலையாம் உமையோடு மேவுதிரு
அண்ணாமலை வாழ் அருட்சுடரே.

— வடலூர் இராமலிங்க சுவாமிகள்

1. மாணிக்கவாசகர் – அருளிச் செய்த திருவெம்பாவை மற்றும் திருவம்மானை.

2. சுந்தரர் பாடியதாக பாடல் இல்லை.

3. திருமூலர் அருளிய திருமந்திரம் ( 372 – 380 பாடல்கள்)

4. 11, 12 – ஆம் திருமுறைகளில் சில பனுவல்கள், 5. திருப்புகழில்- 87 பாக்கள் ஆகியன.

[ **திருவண்ணாமலை இலக்கியங்கள்** என்ற தலைப்பில் பதிகங்கள், புராணங்கள், பிரபந்தங்கள், வரலாற்று நூல்கள் பற்றியத் தகவல்கள் சுருக்கமாக முன்னர் கொடுக்கப்பட்டுள்ளதனைக் காண்க ].

[ தேவாரம் பாடிய சம்பந்தப்பெருமான் தம் பதிகங்கள் பலவற்றில் 9 ஆம் பாடலிலும், திருநாவுக்கரசர் 125 பாடல்களிலும் சுந்தரர் அருளிய 7-ஆம் திருமுறையில் 35 பாடல்களிலும் அரியும் அயனும் தேடற் கரியானைப் பரவுகின்றார்கள் ].

# இலிங்கோத்பவர் அஷ்டோத்ர சத நாமாவளி

ஓம் சோணாத்ர்சாய நம :
,, அருணாத்ரீசாய ,,
,, ஜகத் தாத்ரே ,,
,, ஜகத் தாரணாய ,,
,, காமஹந்த்ரே ,,
,, விருபாட்சாய ,,
,, வியத்கேசாய ,,
,, விதிவிக்ருதி சுந்தராய ,,
,, பைரவாய ,,
,, பைரவி நாதாய ,, 10
,, ஸோம சேகராய ,,
,, காம ஹந்த்ரே ,,
,, காமதாய ,,
,, கங்காதராய ,,
,, விமலாய ,,
,, விஸ்மயாய ,,
,, ப்ரபாகராய ,,
,, வேதவேத்யாய ,,
,, கிரீசாய ,,
,, கிரிவல்லபாய ,, 20
,, ஹரிப்ரியாய ,,
,, நீதிமதே ,,
,, பசுபதயே ,,
,, பரேசாய ,,
,, திகம்பராய ,,
,, தர்மரக்ஷாய ,,
,, மாதவாய ,,
,, ப்ரஹ்மண்யாய ,,
,, ஹராய ,, 30
,, சோண க்ஷோணிதராய ,,
,, குணக் ஞாய ,,
,, அவ்யயாய ,,
,, நிர்க் குணாய ,,
,, விஸ்வேசாய ,,

ஓம் மானஸோத்பந்நாய நம:
,, தேஜோ ராசயே ,,
,, குணான்விதாய ,,
,, விஸ்வாமரேஸ்வராய ,,
,, புண்ய தாயகாய ,, 40
,, பயத்ராத்ரே ,,
,, தேஜோமூர்த்தயே ,,
,, ப்ருஹத் பாநவே ,,
,, த்ருட்ப்ரக் ஞாய ,,
,, கபாலப்ருதே ,,
,, ப்ருஹத்யோநயே ,,
,, பூத பாவக்ஞாய ,,
,, வஸிஷ்டேசாய ,,
,, தத்வமார்க்கப்ரவர்த்தகாய ,,
,, மதுவந்திதாய ,, 50
,, நிராதாராய ,,
,, ஹராய ,,
,, க்ஷேத்ரபாலாய ,,
,, ஓஷதீஸாய ,,
,, ருத்ராய ,,
,, அவ்யாஜ கருணா மூர்த்தயே ,,
,, சித்தேசாய ,,
,, கிரி ரூபாய ,,
,, கபர்த்திநே ,,
,, சச்சிதாநந்தாய ,, 60
,, மஹாமதயே ,,
,, ஸ்வயம் ஜோதிஷே ,,
,, ஹேமகர்ப்பாய ,,
,, ஸஹஸ்ராட்சாய ,,
,, கலாதராய ,,
,, ஸ்ரீ மதே ,,
,, அருணசைலே சாய ,,
,, விரபத்ராய ,,
,, ரணமண்டலபைரவாய ,,

ஓம் அருணாசலேஸ்வராய ,, 70
,, சாந்த சித்தாய நம:
,, முக்தேந்து சேகராய ,,
,, அக்ரகண்யாய ,,
,, பாகசாஸனாய ,,
,, அசும்பிரகு சேலாய ,,
,, தபோகந்திநே ,,
,, ம்ருடாய ,,
,, ருத்ராய ,,
,, நிஷ்கலாய ,,
,, சோணபர்வ தேசாய ,, 80
,, ஹம்ஸாத்ருஷ்டாய ,,
,, திவ்யஸித்தேசாய ,,
,, துங்கயோனயே ,,
,, மந்த்ர ஸித்தாய ,,
,, அருண சைலேசாய ,,
,, த்வாதசாத்மனே ,,
,, மஹாக்ஞானிநே ,,
,, கருணாம்ருத வாரிதயே ,,
,, ஸ்தம்பவிக்ரஹாய ,,

ஓம் ஸ்தாணவே ,, 90
,, ஜயபத்ராய ,,
,, சர்வவித்யேஸ்வராய ,,
,, தாரகாய ,,
,, ஜரா மரண வர்ஜிதாய ,,
,, பஞ்சவக்த்ராய ,,
,, அபாம் பதயே ,,
,, சைவவித்யா விசாரதாய ,,
,, பரஞ்ஜோதிஷே ,,
,, மருகதாரிணே
,, நீராஜனப்ரியாய } 100
,, ப்ரகாசாத்மனே ,,
,, பக்தப்ரேஷணகருதே ,,
,, புளகஸ்நேஹ சாலினே ,,
,, ஜகதானந்தகாராய ,,
,, ஸ்ரீகண்டாய ,,
,, ஜகத்விபவே ,,
,, ப்ராம்மவிஷ்ணு துரவே ,,
,, ப்ரம்மவிஷ்ணுவத்ர்ஷ்ட
,, சிரபதாய } 108

ஸ்ரீ அபீத குசாம்பா சமேத ஸ்ரீ அருணாசலேஸ்வர ஸ்வாமினே நம:

# இலிங்கோத்பவர் சகஸ்ரநாமாவளி

( அருணாசலேஸ்வரர் சகஸ்ரநாமாவளி )

சௌரிவம் ஸத்யகிரிம்; வராஹ வபுஷம்
பாதாம் புஜா தர்சனே
சக்ரே யோ தயயா சமஸ்த ஜகதாம்
நாதம் சிரோ தர்சனே
மித்யாவாச மபூஜ்ய மேவ ஸததம்
ஹம்ஸ ஸ்வரூபம் விதிம்
தஸ்மின் மே ஹ்ருதயம் சுகனே ரமதாம்
சம்போ பரப்ரஹ்மணி.

[ ஒவ்வொரு நாமாவளிக்கு முன் **ஓம்** என்றும் பின்னால் நமஹ என்றும் சேர்த்துச் சொல்லவும்.]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓம் சோணாத்ரீசாய | நம: | | ஓம் நாயகாய | நம: | |
| ,, அருணாத்ரீசாய | ,, | | ,, நந்தினே | ,, | |
| ,, சுலபாய | ,, | | ,, ஸ்வாமினே | ,, | |
| ,, சோம சேகராய | ,, | | ,, ம்ருக மதேஸ்வராய | ,, | |
| ,, ஜகத் குருவே | ,, | | ,, பைரவாய | ,, | |
| ,, ஜகத் கர்த்ரே | ,, | | ,, பைரவீ நாதாய | ,, | 30 |
| ,, ஜகதீசாய | ,, | | ,, காமதாய | ,, | |
| ,, ஜகத்பதயே | ,, | | ,, காம் சாஸனாய | ,, | |
| ,, காமஹந்த்ரே | ,, | | ,, ரங்கநாதாய | ,, | |
| ,, காமமூர்த்தயே | ,, | 10 | ,, ஜகந்நாதாய | ,, | |
| ,, கல்யாணாய | ,, | | ,, கபிலாய | ,, | |
| ,, வ்ருஷபத்வஜாய | ,, | | ,, கலாசுந்தராய | ,, | |
| ,, கங்காதராய | ,, | | ,, விமலாய | ,, | |
| ,, மகாதேவாய | ,, | | ,, விஸ்மயாய | ,, | |
| ,, சமர்த்தாய | ,, | | ,, வீராயா | ,, | |
| ,, அகஷாக்ருதயே | ,, | | ,, யோகீசாய | ,, | 40 |
| ,, தேவாய | ,, | | ,, போகநாயகாய | ,, | |
| ,, அபீதஸ்த நீபாகாய | ,, | | ,, ரம்யாய நம: ஓம் ரமாபதாய | ,, | |
| ,, விருபாக்ஷாய | ,, | | ,, ஸ்ரீமதே | ,, | |
| ,, நிரஞ்சனாய | ,, | 20 | ,, லஸத் ஜ்யோதிஷே | ,, | |
| ,, வித்யா தராய | ,, | | ,, ப்ரபாகராய | ,, | |
| ,, வியத்கேசாய | ,, | | ,, நாராயணாய | ,, | |
| ,, விதிவிஹ்நுதி சுந்தராய | ,, | | ,, ஜகந்மூர்த்தயே | ,, | |
| ,, நடேசாய | ,, | | ,, சண்டேசாய | ,, | |

ஓம் சண்டிநாயகாய ,, 50
,, வேதவேத்யாய ,,
,, ஸுராநந்தாய ,,
,, கிரீசாயசாய ,,
,, ஹல்லஹ ப்ரியாய நம:
,, சூடாமனயே ,,
,, ஸுராதீசாய ,,
,, யக்ஷேசாய ,,
,, ஹரி ப்ரியாய ,,
,, நிர்லேபாய ,,
,, நீதிமதே ,, 60
,, சூத்ரிணே ,,
,, ரஸேசாய ,,
,, ரஸநாயகாய ,,
,, ஸத்யவதே ,,
,, ஏக சூதேஸாய ,,
,, ஸ்ரீ ஹாலா ஹல சுந்தராய ,,
,, பத்மனு ாய ,,
,, பசுபதயே ,,
,, பரேசாய ,,
,, பரமேஸ்வராய ,,
,, திகம்பராய ,,
,, மகாசேனுய ,,
,, த்ரிவேதினே ,,
,, வ்ருத்தவைதிகாய ,,
,, தர்ம ரக்ஷாய ,,
,, மகாராஜாய நம:
,, கிரீடினே ,,
,, வந்திதாய ,,
,, குஹாய ,,
,, மாதவாய ,, 80
,, யாமினி நாதாய ,,
,, சபராய ,,
,, சபர ப்ரியாய ,,
,, சங்கித வேத்ரே ,,
,, ந்ருத் தக்ஞாய ,,
,, சாந்தாய ,,
,, கலச சம்பவாய ,,
ஓம் தூர் ஜடயே நம:
,, மேரு கோதண்டாய ,,
,, பாஹு லே யாய ,, 90
,, ப்ருஹஸ்பதயே ,,
,, ப்ரஹ்மண்யாய ,,
,, வரதாய ,,
,, நித்யாய ,,
,, தீன பந்த விமோசகாய ,,
,, சத்ருக் ஞாய ,,
,, வைக தேயாய ,,
,, சூலினே நம:
,, குருவராய ,,
,, ஹராய ,, 100
,, கந்தலீந்த்ராய ,,
,, விரிஞ்சே சாய ,,
,, சோண கேஷாணி தராய ,,
,, ரவயே ,,
,, வைவஸ்வதாய ,,
,, புஜங்கேந்த்ராய ,,
,, குணக் ஞாய ,,
,, ரஸ பைரவாய ,,
,, ஆதி நாதாய ,,
,, அனங்க நாதாய ,, 110
,, ஜவந்தி குஸுமப்ரியாய ,,
,, அவ்யயாய ,,
,, பூதஸேநாய ,,
,, நிர்குணுய ,,
,, கிரிஜா ஸகாய ,,
,, மார்த்தாண்டாய ,,
,, புண்டரீகாக்ஷாய ,,
,, கரமக்ஞாய நம:
,, லோக நாயகாய ,,
,, விஸ்வேசாய ,, 120
,, ரோஹிணி நாதாய ,,
,, தாடிமீ குஸுமப்ரியாய ,,
,, பட்டாரகாய ,,
,, அவதூதே ஸாய ,,
,, பாபக்னுய ,,

ஓம் புண்ய தாயகாய நம :
,, விஸ்வா மரேஸ்வராய ,,
,, போகினே ,,
,, தாருகாய ,,
,, வேத வாதிகாய ,, 130
,, மதனாய ,,
,, மானஸோத் பன்னாய ,,
,, கங்காளாய ,,
,, கருடத்வஜாய ,,
,, ரக்தாய ,,
,, ரக்தாம்ஸுகாய ,,
,, பவ்யாய ,,
,, தேஜோராசயே ,,
,, குணாதீதயே
,, அனந்தாய ,, 140
,, வாமனாய ,,
,, வாமாய ,,
,, விசாலக்ஷாய ,,
,, ரதிப்ரியாய ,,
,, ப்ரஜாபதயே ,,
,, பசுபதயே ,,
,, சௌபத்ராய ,,
,, நரவாகனாய ,,
,, ருதுகர்த்ரே ,,
,, சஹஸ்ரார்சிஷே ,, 150
,, திமிரோன் மதனாய ,,
,, சுபாய ,,
,, த்ரிவிக்ரமாய ,,
,, முகுந்தார்ச்யாய ,,
,, வைத்யனாதாய ,,
,, புரந்தராய ,,
,, பாஷாவிஹீனாய ,,
,, பாஷாக்ஞாய ,,
,, காமினே ,,
,, புளக லேபகாய ,, 160
,, நிஷாதாய ,,
,, காளஹஸ்தீஸாய ,,
,, த்வாத்ரிம்சத் தர்ம பாலிகாய ,,

ஓம் த்ராவிடாய நம :
,, வித்ரமாகாராய ,,
,, பூதனாதாய ,,
,, ருஷாபகாய ,,
,, சூரஸேனாய ,,
,, பயத்ராத்ரே ,,
,, விக்னேஸாய ,, 170
,, விக்ன நாயகாய ,,
,, ரஜனீ சேவிதாய ,,
,, யோகினே ,,
,, ஜம்புநாதாய ,,
,, விடர்பகாய ,,
,, தேஜோமூர்த்தயே ,,
,, ப்ரஹத்பானவே ,,
,, சர்வக்ஞாய ,,
,, பூஷதந்தபிதே ,,
,, உபத்ருஷ்ட்ரே ,, 180
,, த்ருடப்ரக்ஞாய ,,
,, விஜயாய ,,
,, மல்லிகார்ஜுனாய ,,
,, சுத்தாய ,,
,, த்ரயக்ஷாய ,,
,, கிந்நரேஸாய ,,
,, சுபதக்ஷாய ,,
,, சுபாலப்ருதே ,,
,, ஸ்ரீ நிவாஸாய ,,
,, ப்ரஹத் யோனயே ,, 190
,, தத்வக்ஞாய ,,
,, சமனக்ஷமாய ,,
,, கந்தர்பாய ,,
,, பூதபாவக்ஞாய ,,
,, பீமசேனாய ,,
,, திவாகராய ,,
,, பில்வப்ரியாய ,,
,, விசிஷ்டேசாய ,,
,, வராரோஹாய ,,
,, ரதிப்ரியாய ,, 200
,, நம்ராய ,,

ஓம் தத்வவிதே நம :
,, தத்வாய ,,
,, தத்வமார்க் ப்ரவர்த்தகாய ,,
,, சாம்பிகாய ,,
,, வாமதேவாய ,,
,, ப்ரத்யும்னய ,,
,, மதுவந்திதாய ,,
,, பரமேஷ்டினே ,,
,, சுராத்யக்ஷாய ,, 210
,, கோவிந்தாய ,,
,, நீலலோஹிதாய ,,
,, நித்யானந்தாய ,,
,, நிராதாராய ,,
,, ஹராய ,,
,, தேவசிகாமணயே ,,
,, சாதகாய ,,
,, சாதகாத்யக்ஷாய ,,
,, க்ஷேத்ரபாலாய ,,
,, தனஞ்சயாய ,, 220
,, ஓஷதீசாய ,,
,, வாமதேவா ,,
,, பக்த துஷ்டாய ,,
,, நிதிப்ரதாய ,,
,, ப்ரஹர்த்ரே ,,
,, பார்வதீ நாதாய ,,
,, ருத்ராய ,,
,, ரோக விநாஸநாய ,,
,, சத்ருக்னய ,,
,, சச்சிதானந்தாய ,, 230
,, வேணு வாதினே ,,
,, பகந்தராய ,,
,, ப்ரணதார்த்தி ஹராய ,,
,, சோமாய ,,
,, க்ருதுபுஜே ,,
,, மந்த்ர வித்தமாய ,,
,, ஜவ்யாஜ கருணாமூர்த்தயே ,,
,, த்யாகராஜாய ,,
,, க்ஷபாகராய ,,
,, நாரசிம்ஹாய ,, 240

ஓம் ஸ்வயம் ஜ்யோதிஷே நம :
,, நந்தனய ,,
,, விஜிதேந்த்ரியாய ,,
,, அத்வயாய ,,
,, ஹரிதஸ்வார்ச்சிஷே ,,
,, சித்தேஸாய ,,
,, ஸ்வர்ண பைரவாய ,,
,, தேவகீ நாயகாய ,,
,, நேத்ரே ,,
,, சாந்த்ரானந்தா ,, 250
,, மஹாமதயே ,,
,, ஆஸ்சர்யவைபவாய ,,
,, சூக்ஷ்மாய ,,
,, சர்வகர்த்ரே ,,
,, யுதிஷ்டிராய ,,
,, சத்யானந்தாய ,,
,, விடாநந்தாய ,,
,, புத்ரக்ஞாய ,,
,, புத்ர தாயகாய ,,
,, தேவராஜாய ,, 260
,, க்ருபாசிந்தவே ,,
,, கபர்தினே ,,
,, விஷ்டரேஸ்வராய ,,
,, சோமாஸ்கந்தாய ,,
,, சுசிலாய ,,
,, பகக்னய ,,
,, த்யுதி நந்தனய ,,
,, முக்தி தாய ,,
,, முதிதாய ,,
,, குப்ஜாய ,, 270
,, கிரிஜாபாத சேவகாய ,,
,, ஹேமகர்பாய ,,
,, சுராநந்தாய ,,
,, காஸ்யபாய ,,
,, கருணாநிதயே ,,
,, தர்மக்ஞாய ,,
,, தர்மராஜாய ,,
,, கார்தவீர்யாய ,,
,, ஷடாங்காய ,,

| | | | |
|---|---|---|---|
| ஓம் க்ஷமாதராய | நம : 280 | ஓம் தர்மாய | நம : |
| ,, தபோராசயே | ,, | பலத்யாகினே | |
| ,, த்வஷ்ட்ரே | ,, | க்ஷபாகராய | 320 |
| ,, ஸர்வ பேவாத்பவாய | ,, | க்ஷேத்ர ஞாய | |
| – பீதாம்பராய | – | துங்கசைலேசாய | |
| – அநிருத்தாய | – | ரண மண்டல பைரவாய | |
| – வாசவாய | – | ஹரிகேசாய | |
| – தனவித்தமாய | – | அவரோதினே | |
| – சேஷ ஹாராய | – | நர்மதாய | |
| – ஹவிஷ்யாசினே | – | பாபநாசாய | |
| – தார்மிகாய | 290 | சத்யோஜாதாய | |
| – பக்தவத்சலாய | – | வடாரண்யவாஸினே | |
| – ஸ்வேதாங்காய | – | புருஷவல்லபாய | 330 |
| – நிலகண்டாய | – | அர்ச்சிதாய | |
| – கிரிருபாய | – | அருணசைலேசாய | |
| – கிரிஸ்வராய | – | சர்வாய | |
| – சம்பாவிதாய | – | குரு குலேஸ்வராய | |
| – சஹஸராக்ஷாய | – | சனகாதி சமாராத்யாய | |
| – சந்த்ரமௌளயே | – | அஜுஸாத்யாச லேஸ்வராய் | |
| கலாதராய | | தாமோதராய | |
| அப்யாதி சயக்ஞாத்ரே | 300 | வலாராதயே | |
| வேங்கடேசாய | | காமேஸாய | |
| குஹப்ரியாய | | சோமவிக்ரஹாய | 340 |
| வீரபத்ரே | | கோரக்ஷாய | |
| விசேஷக்ஞாய | | பல்குணய | |
| சர்வாய | | பூபாய | |
| அனந்தாய | | பௌலஸ்த்யாய | |
| நகாதிபாய | | விஷ்ட்ர ஸ்ரவணே | |
| ஸ்ரீமதே | | சாந்த சித்தாய | |
| மஹாபலாய | | மகத்ராத்ரே | |
| ஞாத்ரே | 310 | சக்ரிணே | |
| விபவே | | முக்தேந்து சேகராய | |
| கலப ப்ரியாய | | பஹுவாத்யாய | 350 |
| சித்தாய | | மஹாதேவாய | |
| **புராண புருஷாய** | | நீலக்ரீவாய | |
| பல பத்ராய | | சுமங்களாய | |
| சுதர்ம க்ருதே | | ஹிரண்ய பாஹவே | |
| சித்த நாகார்ச்சிதாய | | திங்மாம்சவே | |

ஓம் சௌனினே நம:

புண்ய ஜனேஸ்வராய
சர்வாத்மனே
சர்வசத்கர்த்ரே
லிங்கட்ராஜுய 360
குணுதிபாய
சவிதரே
ரத்ன சங்காலயாய
பூதேசாய
புஜகப்ரியாய
அக்ர கண்யாய
சுகப் பிராய
தாண்டவாய
முண்டமாலிகாய
அகம்பிதகுசேலாய 370
சம்ஸாரார்ணவ தாரகாய
ம்ருடாய
விஷ்ணவே
ஜகத் ஸ்வாமினே
சைதன்யாய
பாக சாஸ நாய
சர ஜன்மனே
தபோ நந்தினே
தேசிகாய
வைதிகோத்தமாய 380
கனகாசல கோதண்டாய
ஸ்வாராத்யாய
ஹரிஸாய காய
ப்ரவாளாத்ரிபதயே
ஸ்ரீ மதே
விசாம்பதயே
உமாசகாய
வடுகாய
நிஷ்களாய
தேஹினே 390
அந்தராய
சம்பக ப்ரியாய
மாயா மூர்த்தயே

ஓம் விஸ்வ மூர்த்தயே நம:

சோண பர்வத நாய
ப்ரசந்ந தேவாய
வாகீசாய
சதயாகாய
மகாயஸஸே
ஹம்ஸா த்ருஷ்டாய 400
பலித்வம்ஸினே
சிந்தா திமிரபாஸ்கராய
யக்ஞேசாய
ராஜ ராஜேஸாய
கேஸவாய
சந்த்ரசேகராய
விஸ்வ கர்த்தரே
விஸ்வ ஸ்ருஷ்ட்ரே
பூதாத்மனே
பூத வந்திதாய 410
ஸ்ரீ தராய
திவ்ய சித்தேஸாய
ப்ரபவே
ஸ்ரீ பலி நாயகாய
கௌரிபதயே
துங்க மௌளயே
மதுராஜாய
மஹா கவாய
சாமக் ஞாம
சாமவேதாட்யாய 420
விஸ்வனு தாய
நயாநிதயே
சிவானந்தாய
விசித்ராங் காய
கஞ்சுகினே
கமலேக்ஷணாய
பவாய
திவ்ய ரதாய
கோராய
சாலோக்ய ப்ரமுக ப்ரதாய 430
சமுத்ராய

| | | | |
|---|---|---|---|
| ஓம் கருணுமூர்த்தயே நம: | | ஓம் அருணேஸ் வராய நம: | |
| விஸ்வ கர்மணே | | மஹோத் ஸாய ஹாய | 470 |
| தபோநிதயே | | புண்ய கராய | |
| தபோநிதயே | | ஸ்தம்பனய | |
| சத்க்ருத்யாய | | ஸ்தம்ப விக்ரஹாய | |
| ராக வாய | | புண்ட ரீகாய | |
| புத்யாய | | சர்வ மயாய | |
| ப்ரஹ்மண்யாய | | தைவக் ஞாய | |
| கெள ஙகேஸ்வராய | | தைவ வந்திதாய | |
| சமவர்த்தினே | 440 | மஹாக் ருதவே | |
| பயத்ராத்ரே | | மஹாயஜ்வினே | |
| மந்த்ர சித்தாய | | கொங்கணேஸாய | 480 |
| மதிப்ர தாய | | குருத்தமாய | |
| ஆதித்யாய | | சந்தோமயாய | |
| விஸ்வ சம் ஹர்த்ரே | | மஹாஞானி நே | |
| ஜகத் சாக்ஷிணே | | வாச காய | |
| சதா சிவாய | | சாமரேஸ்வராய | |
| ஜவந்திஞ தாய | | சார்வ பௌமாய | |
| திக்வாஸஸே | | சதானந்தாய | |
| வாஞ்சி நார்த்த பலப்ரதாய | 450 | கருணம்ருத வாரிதயே | |
| பஞ்சக்ருத்ய விதா நக்ஞாய | | பிங்கலாக்ஷாய | |
| சுராசுரநமஸ்க்ருதாய | | பிங்கரூபாய | 490 |
| உபேந்த்ராய | | புருஹூதாய | |
| அருணைசலேசாய | | புராந்த காய | |
| கல்யாண சலசார் முகாய | | ம்ருத்யவே | |
| அயுக்மலோசனய | | வைத்யாய | |
| விஸ்வஸ்மெ | | திஞதீசாய | |
| விஸ்வைஸ்வர்ய ப்ரதாய காய | | தாய | |
| குஹ்ய கேஸாய | | கமல சம்பவாய | |
| அந்த கரிவே | 460 | கங்காதராய | |
| சித்த வேஷாய | | தொயரூபாய | |
| மனே ஹராய | | சிலவதே | 500 |
| அந்தர் முகாய | | சிலதாயகாய | |
| பஹிர்த்ருஷ்ரே | | ஜய பத்ராய | |
| சர்வ ஜிவ தயாபராய | | சாக்நிஹோத்ராய | |
| ச்ருத்தி வாஸ ஸே | | நரநாராயணப்ரியாய | |
| க்ருபா சிந்நவே | | சண்டேசாய | |
| த்வாத சாத்மனே | | சுகசம் வேத்யாய | |

ஓம் சுக்ரீவாய நம:

சதானந்தாய

மஹாயோகிநே

சுகந்திநே 510

சௌர பேஸ்வராய

தூலபாணயே

சுஜ்யேஷ்டாய

சந்த்ர சூடாய

நதப்ரியாய

சர்வவித்யேஸ்வராய

ஸ்தாணவே

தாரகாய

அனந்தாய

ஈஸ்வராய 520

காலகாலாய

வாம தேவாய

ஞான சம்பந்த நாயகாய

பக்தா பராத ஷோட்ரே

ஜரா மரண வர்ஜிதாய

சிதி கண்டாய

சிதானந்தாய

யோகினி கோடி சேவிதாய

பஞ்சவக்த்ராய

பஞ்ச க்ருத்யாய 530

பஞ்சேஷூரிபுவே

ஈஸ்வராய

ப்ரதி ஸ்ரவஸே

சிவதராய

புண்ய ஸ்லோகாய

திவஸ்பதயே

யக்ஷராஜ ஸகாய

சித்தாய

சதா சேவக வர்த்தனாய

ஸ்தாயினே 540

சகல தத்வாத்மனே

ஜயக்ஞாய

நந்திகேஸ்வராய

அபாம்பதயே

ஓம் சுரபதயே நம:

தப்தசாமீகரப்ரபாய

ரோஹிதாஸ்வாய

க்ஷமாரூபிணே

தத்தாத்ரேயாய

வனஸ்பதயே 550

த்ரயம்பகாய

வருசயே

தேவதேவாய

சதுர்புஜாய

நகுலாய

வாருணீநாதாய

ம்ருகிணே

ராஜீவ லோசநாய

விஸ்வம்பராய

விசிதராங்காய 560

விதாத்ரே

புரசாஸநாய

சுப்ரமண்யயே

ஜகத்ஸ்சாமினே

நித்ய நாதாய

நிராமயாய

அசங்கல்மாய

வ்ருஷாருடாய

சந்த்ராய

சௌகந்தி கேஸ்வராய 570

காத்யாயநாய

விஷ்ணுரதாய

ஸத்ஸங்தாய

ஸ்வாமி காத்திகேயாய

வல்மீகநாதாய

தேவாத்மநே

உன்மத்தகுசுமப்ரியாய

வைகுண்டாய

டாகினீ நாதாய

சுசாந்தாய 580

கதநாயகாய

உமாகாந்தாய

அனுக்ர ஹேதாய

ஓம் லோஹிதாஸ்வாய நம:
சிவோத்தமாய
மஹாகாயாய
புஜங்கேசாய
சைவ வித்யா விசாரதாய
சிவயோகினே
சிவானந்தாய 590
சிவபக்தி சமுத்தராய
– வேதாந்த சார சந்தோ
ஹாய
நவநாதாந்தர ஸ்திதாய
நவாவரண சம்யுக்தாய
நவதீர்த்த ப்ரதாயகாய
அநாதி நாதாய
திங் நாதாய
திவ்ய நாதாய
அயன த்வயாய
அதிதயே 600
அனேக வக்த்ர சம்யுக்தாய
பூர்ண பைரவாய
வடமூலாஸ்ரயாய
வாக்மினே
மாந்யாய
மலயஜ ப்ரியாய
நக்ஷத்திர மாலாபரணாய
பக்ஷமாஸர்த்து வத்ஸராய
ஸர்வாதாரராய
லிங்க நாதாய 610
நவக்ரஹ மகாஸ்ரயாய
சுஹ்ருதே
சக்யே
சதானந்தாய
சதா போகினே
சதா ருணாய
சுசீலாய
வாஞ்சிதார்த்தக்ஞாய
ப்ரசன்ன வதனேக்ஷணாய
ந்ருத்த கீத கலாபிக்ஞாய 620

ஓம் ப்ரமோஹாய நம:
விஸ்வ போஜனாய
ஞான தாத்ரே
சதா சாராய
சர்வ சாப விமோசனாய
சமனாய
கோபதயே
கோத்ரே
உக்சேத்ரே
வேதசம்ஸ்த்து தாய 630
ராஜேந்த்ராய
ராஜ ராஜேசாய
துளசீதாம பூஷணாய
காமிகாகம சாராய
ம்ருகதாரிணே
சிவங்கராய
தத்புருஷாய
லோகநாதாய
மகவதே
தமஸஸ்பதயே 640
விதிகர்த்தரே
விதாநக்ஞாய
ப்ரதான புருஷேஸ்வராய
விப்ரப்ரியா
பரஞ்சோதிஷே
புஷ்கலாய
ரத்னகஞ்சுகாய
சர்வேஸ்வராய
சர்வமயாய
பாஸ்கராய 650
சர்வரக்ஷகாய
சுகோப்த்ரே
கருணாசிந்தவே
கர்மவிதே
கர்ம மோசகாய
வித்யாநிதயே
பூதிகேசாய
த்ரிமூர்த்தயே

ஓம் அமரேஸ்வராய நம:

கர்ம சாக்ஷிணே 660
கர்ம மயாய
சர்வ கர்ம பலப்ரதாய
சத்யாத்மனே
சுமதயே
சித்தாய
சுத்தாய
சித்திநாய சாய
அக்ஷிபேயாம்குதாய
ஈசாய
ஸ்த்ரீபும்பாவ ப்ரதாயகாய 670
குலக்ஞாய
சிம்ஹராஜாய
ஆஸ்ரிதாமர பாபாய
சிந்தாமணயே
சுகுரவே
யாதுநாதாய
க்ஷபாசராய
ஈசானாய
தஸ்கரேசாய
விதிவைகுண்டநாயகாய 680
பஞ்சாவரண சம்யுக்தாய
சுத்ராம்ணே
சுந்தரேஸ்வராய
விஷ்வக்சேனாய
அக்னி சம்பூதாய
கணாதிபதயே
ஸம்சுமதயே
கோவிந்தராஜாய
ராஜேசாய
பஹுபூஜ்யாய 690
சதக்குருநவே
ரோஜக ப்ரியாய
பப்ரவே
ஆதாரச்ஞாய
அர்சகப்ரியாய
ஆதிசர்த்தரே
லோக கர்த்தரே

ஓம் ப்ரஹ்மசாரிணே நம:

த்ருடவ்ருதாய
பக்த ப்ரேஷணக்ருதே 700
சாக்ஷிணே
சித்ரபானவே
க்ரஹ க்ஷமாய
மகேஸ்வராய
மானசீலாய
சர்வபூத ஹிதேரதாய
சிந்தானுவர்த்தினே
காந்திக்ஞாய
தைஜஸாத்மனே
அருணாசலாய 710
குணாநாதாய
சர்வ த்ருஷ்ட்ரே
சைலராஜ மஹேஸ்வராய
வரப்தாய
ப்ரகாசாத்மனே
விமலாத்மாவலோகிதாய
வ்யோமாதீதாய
சீதகுணாய
ஹேதுசாதனவர்ஜிதாய
க்ருதக்ஞாய 720
புளகஸ்நேக சாலினே
காமினே
ஸ்வயம் ப்ரபவே
சாமப்ரியாய
கலித்வம்ஸினே
சததன்வினே
பரிமிதே
அமலாய
சர்மவசநாய
ம்ருடாய 730
சம்ஹார நாசகாய
சத்பதயே
ஜீவிதேசாய
வாணிசாய
மத்யமஸ்துதயே

ஓம் சிபிவிஷ்டாய நம:
வேத சாந்தாய
சங்கா சங்க விவர்ஜிதாய
சைனிகாய
குசலாய 740
ப்ராஜ்ஞய
சர்வலோக மஹேஸ் வராய
சதானந்தாய
தயாரூபிணே
விசிஷ்ட்ஜன வத்ஸலாய
சுவிக்ரமாய
சர்வகதாய
யாத வேஸாய
ரக்ஷத்வஹாய
வ்யாக்ர சர்மா ஸ்நா ஸிநாய 750
சம்விதாத்மனே
சுஹ்ருத்சுகாய
நிஸ்ஸங்கல்பாய
விகல்பாய
ஷட்த்ரிம்சத் தத் வசங்க்ரஹாய
ஹிரண்ய குண்டாலாய
பீமாய
பஸ்மதிக்த கலேபராய
ப்ரபஞ்சனாய
லஸத்பாஹவே 760
வல்லபாய
புஷ்டிவர்தனாய
மால்ய சங்காய
வ்ருஷா ரூடாய
ஜக தானந்தகாராய
ஓஷதீஸாய
அருணாத்ரீசாய
விஸ்வரூபாய
வராக நாய
சம்வர்த ரூபாய 770
அஷ்டரூபாய
பூதாத்மனே
சர்பவாஹனாய

ஓம் சிந்தா சோக ப்ரசமனாய நம:
ஸ்ரீ சிஹ்ந நிந்த ப்ரியாய
ரஸ்மிமதே
புவனேசாய
தேவாஸுர நமஸ் க்ருதாய
வ்ருஷாங்காய
ரமணீயாங்காய 780
சீரபாணயெ
ஜயாஹாய
சசிபதயே
கலித்வைஸினே
சர்வசத்ரு விநாசனாய
அக்ஷசௌண்டாய
அப்ரமேயாய
அர்காய
ருக்வேதாய
த்ரிபுராந்தகாய 790
ம்ருத்யுஞ்சயாய
வ்யோமமனுதாய
ஸ்ரீ கண்டாய
அனந்த பூஷணாய
யஜுர்வேதாய
சாமபராய
சத்கர்த்தரே
தந்துபீஸ்வராய
அப்ஜயோநயே
க்ஷமாரூபிணே 800
முகராங்க்ரிபதயெ
க்ஷமிணே
க்ருபாநிதயெ
ஜாகரூகாய
சோமவதே
அமரேஸ்வராய
மீடுஷ்டமாய
யதிந்த்ராய
ஸ்மர்த்ருசல்மஷ நாசநாய
ஏகவீராய 810
க்ஷ்வேல கண்டாய

ஓம் சர்வ வித்யா விசாரதாய நம:
வைஸ்வாநராய
வஷட்காராய
ரத்ன சாறு சடா பதயே
சர்வோத்தமாய
சித்ரபானவே
சதாவைபவ தத்பராய
விஸ்வதாய
ஜநதாம நாதாய 820
மங்களாய
நிகமாலயாய
அக்ஞா தசம்பவாய
பிக்ஷவே
அத்விதீயாய
மதாதிகாய
மஹத்கீர்த்தயே
சித்ர குப்தாய
வரதாய
வாமனப்ரியாய 830
சாந்தப்ரியாய
நிருத்யோகாய
பக்தத்யேயாய
அனிவர்தகாய
பக்தவிக்ஞப்திசந் தாத்ரே
வக்த்ரே
கிரிவராக்ருதயே
ஞானமுத்ராய
மனோவாஸாய
க்ஷேம்யாய 840
மோஹவிநாசகாய
சிவகாமாய
தேவாதீராய
கபாலினே
குசலப்ரபவே
அஹிர்புத்ந்யாய
உர்வரேசாய
சிந்துராஜாய
ஸ்மராந்தகாய

ஓம் ந்ருத்தப்ரியாய நம: 850
சர்வ பந்தவே
மனோ புவே
பக்திதாயகாய
ப்ரதி சூர்யாய
விநிர்முக்தாய
ப்ரஹிதாய
த்விபலப்ரதாய
ஜகத்விபவே
ஸுஸந்தாத்ரே
சம்பவே 860
நித்யோத்ஸவாப
ஹாராய
வரேண்யாய
சம்பராய
அனந்தாய
சாதசாராய
விசக்ஷணாய
அசாத்ய சாதகாய
ஸ்வக்சாய
சாதவே 870
சர்வோபகாரகாய
நிரவத்யாய
அப்ரதிஹதாய
சிவாய
பக்த பராயணாய
அரூபாய
பஹுரூபாய
தக்ஷயக்ஞவினாசனாய
கைலாச வாசினே
காமரயே 880
ஆஹுயைஸ்வர்ய தாயகாய
ஆதிகாரணாய
அவ்யக்தாய
த்ரயக்ஷாய
விஷமலோசனாய
ஆத்மேசாய
பஹுபுத்ராய

ஓம் ப்ரஹதே நம :
சம்ஸார நாசனுய
ஆசா விக்ஷீநாய 890
சந்திஷ்னவே
சூரயெ
ஐஸ்வர்ய காரகாய
பக்தார்த்திஹ்ருதே
விஸ்வரூபாய
சோம சூர்யாக்னிலோசனுய
அமரேட்யாய
மகா காளாய
நிராபாஸாய
நிராக்ருதயே 900

சமஸ்த தேவாத மூர்த்தயே
சகலாகம காரணுய
சர்வ சாம்ராஜ்ய நிபுணுய
கர்மமார்க்க ப்ரவர்த்தகாய
அகோசராய
வஜ்ரதராய
சர்வாத்மனே
அனல நாயகாய
சுஹ்ருதக்ர சராய
சித்தாய 910
ஞானமுத்ராய
கணுதிபாய
சக்ஷுபுஷ்பார்ச்சிதாய
அர்த்தக்ஞாய
வாஞ்சிதார்த்தி பலப்ரதாய
நிர்விக்ரகாய
அஸமாநாய
ஸ்வதந்த்ராய
ஜீவிதாரகாய
ஸ்வெச்சாபராய 920
ஸ்காந்தயே
தேவ சிம்ஹாஸநாதிபாய
நிஸ்ஸங்காய
அனுதயே
அதுலாய

ஓம் குலகர்த்தரே நம :
குலேஸ்வராய
திகம்பராய
அர்த்தநாரீசாய
கஜசர்மாம்ப்ரா வ்ருதாய 930
அனர்க்ய ரத்ன சம்பூர்ண பூஷணுய
சித்த விக்ரஹாய
அந்தர் ஹிதாய
சர்வேஸாய
மல்லிகாகுசுமப்ரியாய
நிராகுலாய
வேதமூர்தயே
சர்வத்ர
சுகதர்சனுய
விவாத ஹர்த்ரே
சர்வாத்மனே 940
சஹஸ்ரபதே
விஸ்வாதிசாய
பசுபதயே
பசுபாச விமோசகாய
சர்வரக்ஷாக்ருதயே
சாக்ஷிணே
சச்சிதாத்மனே
க்ருபாநிதயே
ஜ்வாலா கோடி சகஸ்ராட்யாய
பிரம்ம விஷ்ணு தருவே 950
ஹராய
மந்தஸ்மிதாநநாய
வாக்மினே
காலாநல சமப்ரபாய
ப்ரதக்ஷிணப்ரியாய
ப்ரஹ்ம விஷ்ணுவத் ருஷ்..சரபதாய
அஷ்டமூர்த்தயே
அபீதகுச தேவீசாய
சகலாகம விக்ரஹாய
விஸ்வாதீதாய 960
விஸ்வகர்த்ரே
விஸ்வ ரக்ஷாமணயே
விபவே

ஓம் விஸ்வ ருபாய நம :
விஸ்வநேத்ரே
விஸ்வேசாய
விஸ்வ காரணுய
யோகீத்யேயாய
யோகநிஷ்டாய
யோகாத்மனே 970
யோக வித்தமாய
ஓங்கார ருபாய
பகவதே
பந்து நாத மயாய
சிவாய
தீராய

ஓம் விதாத்ரே நம :
சத்கர்த்தரே
விதி விஷ்ணு ரணுப ஹாய
சர்வாக்ஷராக்ருதயே 980
சதுர்முகாதி சம்ஸ் துத்தாய
சதா ஷோட்ச வார்ஷிகாய
திவ்ய கேளீ சமாயுக்தாய
சதுர்வர்க பலப்ரதாய
நிரஞ்சனுய
திவ்ய மாலாம்பரா வ்ருதாய
தேவதா சர்வபௌமாய
ஜலந்தர ஹராய
நடனே

ஸ்ரீமத் அபீதகுசாம்பா சமேத ஸ்ரீ அருணுசலேஸ்வர சுவாமினே நம :



